ஆடவேயவர்செய்த வகையேதென்னி லய்யமாங்கும்பகந்தா னாறு பத்துநாலு, பூடவேபூரகந்தான் முப்பத்திரண்டு புகையான ரேசகந் தான் பதினாறாகும், ஆடவேயவரிருந்து பெற்றார்பேறு வழகானகற்பக மரத்தின்மேலே, காடவேகாகமென வுருவைக்கொண்டு கண்டிருந்தார் கோடியுகங் கரைகாணேனே. 176

கரைகாணுகோடி பிர்மாகண்டாரையா கரையற்றவிஷ்ணுமயங் கோடிகண்டார், தரைகாணுச்சங்காரங் கோடிகண்டார் தாக்கோடே மயேஸ்பரத்தைத் தாண்டிநின்று, துரைகாணுச்சதாசிவன்தா னுடிங் கிச்சத்தி துலையாதவாதமுடன் விந்துவற்று, திரைகாணுசிவன்சென்று சிற்பரையிற்சேர்ந்து தெளிவடைந்தபூரணத்தில் சொக்கினாரே. 177

சொக்கியேபுசுண்டருமே யவனைத்தொட்டு சுழுத்தியென்றசினேந் திரன் றானுநின்றார், பக்கியிந்திரசாலவித்தை போட்டாளாகில் பரிந் துமேசுஷணைப்பொழுதிற் பணியும்வந்து, நிக்கிநிஜமெனவிரித்தாள் யீடாரத்தை நிமிஷத்திலண்டமெல்லா மாய்ந்துபோச்சு, சுக்கியதை வேணுமென்றால் துடைக்கவல்லாள் சுருதிக்குவித்தான முத்தித்தாயே.

முத்தியிலேநின்றுமந்த கண்டமூர்த்தி முன்போலேகற்பகமே யாவாவென்றார், பத்தியிலேயதுமேலே கூடாரமென்றார் பார்க்கையிலே கூட்டோடே விருட்சமாச்சு, நித்தியிலேநின்றுரைத்த சித்தைப் போலே நிலவரமாகக்கூட்டுக்கு ளமர்ந்துநின்றார், சுத்தியிலேநிற்கிற தோர் பூவைப்போலே கண்டத்தேநின்றுரைத்துக் கருதினாரே. 179

உரைத்துமேபுசுண்டருட பிறப்பைக்கேளு உகந்துமதுநடனங் கள் களிக்கும்போது, பரைந்துமேபரிதிமுதற் சோமனையுந்தரித்துப் பராபரமும்பார்வதியும் பார்த்தாரத்தை, நிரைத்துமேசிவகலையை காமம் போல நேர்ந்தனையயன்னமங்கே நிறைகெர்ப்பமாச்சு, இரைத்துமே யிருபத்து ஒன்றுபிள்ளை யீசனுடகலையாலே புசண்டராச்சே. 180

ஆச்சென்றவிருபதுபேர் நாமத்தாலே யனேகநாளிருந்துமே யிருந்துபோனார், போச்சென்று அவர்பிடித்தார் பிராணயோகம் போனசீவகலை மூர்க்கத்தாலே, பேச்சென்றவாணவம் பிறந்தால்யார் மேற் பேறுபெறவவர்போலே யாருக்காகும், மூச்சென்றுமுந்திமுந்தி மூலயோகம் ஒளிவுகண்டமட்டுமே நெஞ்சிற்பாரே. 181

பாரென்றநெஞ்சில்நிற்கும் நடுமூலந்தான் பரிநேராய்ப்பார்த்து மே பழக்கமாக்கி, பூவென்றுவந்துதென்றார் புசுண்டமூர்த்தி பொரு நெருப்புபஞ்சுபட்டார் போலேயாகும், போரென்றபரத்தேறு போக

ரையப்பாம் பின்குருஞ்சுசிறகொடிந்து காணும்போனால், எமிறன்றவினத் தோடே கூடாதாய்போ விளமையிலேமூலத்தைக் கூட்டிடாயே. 182

கூடாட்டாலரிதரிது பிராணனென்றார் கூறியதோர்சொன்ன மொழி கேட்டுப்பொங்கி, ஆடாட்டலடியற்ற மரம்போலேபாரு மவர் பதத்தில்வீழ்ந்தெழுந்தேன் ஆண்மையாக, நாடாட்டாலேயரென்று போகமூர்த்தி நம்போலேவாழ்ந்திரென்று மெடுத்தாரய்யர், மூடாட் டால்சொன்னதொரு மூலமாதி முதிர்ந்துநின்றபிராணனைத்தா னறிந் திடாயே. 183

அறிந்திட்டவையரெங்கே யிருப்பதென்றால் அதிகமாமேருவுக்கு தெற்கேயாகும், முறிந்திட்டவாதமுண்டு ஞானமுண்டு மூர்க்கமாம் யோகமுண்டு சித்தரெல்லாமுண்டு, பிறந்திட்டபிராணனைத்தா னறிப பண்ணி பூரணந்தான்லயிக்கின்ற போகங்காட்டி. உருந்திட்டமாவாச லுணர்வுகாட்டி ருபதேசத்துண்மைதா னுரைந்திட்டாரே. 184

உரைத்திட்டுமழிக்கிறதும் படைக்கிறதுஞ்செய்தா லுரையான சிவலோக வாண்மையாலே, வரைத்திட்டுவெறுப்பியே விடைகொடுத்து மாசற்றமூர்த்தியே போய்வாவென்றார், தரைத்திட்டுவையருமே சாகைக்குப்போனார் சாங்கமாய்பிள்ளைகட்குத் தன்மைசொல்லி, உரைத் திட்டுப்பிராணனைத்தா னறியுங்களென்று போதித்தேன்பிள்ளைகட்குப் புத்திதானே. 185

தானனைரண்டெழுத்தை பூட்டியேறச் சதிரானசிவயோகம் கைபி சிக்கும், ஆனனவிசுத்தியிலே நின்றுகொண்டு அப்பனேகிலையாதே மூலம்பாரு, கூனனைசுழிமுனையிற் குழலாய்க்காணுங் குறிப்பாககால் வைத்துக் காலையாட்டு, பானனபதிசென்று நத்திகாத்தி பாலான மதுவையுண்டு பரிந்துபாரே. 18

பரிந்துநின்றுகண்டத்தைப் புருவமையம்பாரு புல்லான கட போலே பகுந்துகாணும், குரிந்துநின்றுகுருபதத்தைத் துரைத்த தைப்பாரு கூர்மையாய்பதினொன்றுங் கடந்துமேதான்றுங், கரிந் நின்றகண்டத்தில் நாகத்தைப்பாரு கலங்காமல்பிராணனுமே திலே துக்காணும், அரிந்துநின்றவனைத்தை மாலோடுபிரமன் அறிந்து பார்வெட்டவெளி யல்லலாமே. 1[illegible]

அல்லலாந்தேகத்தை யறியவென்றால் அடுத்தேதறிபுன்மனை நின்றுபாரு, கல்லலாங்கீழ்நோக்கக் கண்டிப்பற்று கைபிறல்பிடித் விட மொன்றுமில்லை, வல்லலாம்லெட்சியங்கள் வழியாச்சானால் வாரு

நித்திரையும் பசியுங்கேளு, புல்லலாம்பிரசத்தங் கேளாப்பக்கம் பிறந் திறந்துலெட்சியத்தைப் பூட்டிமூட்டே. 188

பூட்டையிலேபிரசத்தங் கேட்டுதானால் புலங்களதுமுஷ்கரமாய் முறித்துப்போடும், மாட்டையிலேமனதுசற்றே நழுவிற்றானால் மடையனுக்கடித்தவெள்ளெலும்பாய்ப்போவாய், தூட்டையிலேமனமலைக் குஞ் சூடொட்டாது சோதனையாங்குறிகளெல்லாஞ் சுழற்றிற்போடுங், காட்டையிலேகநெல்லிக் கனிபோலாகுங் கனமானவாசிவைத்துக் கருத்தைதவூணே. 189

ஊணிப்போங்கப்பலுக்கு நங்கூரம்போட்டா லூறிகின்றவாசியைநீ யுரைத்துக்கட்டி, ஆணிப்போலசையாமல் மனத்தைமாட்டி யடியோடேயழுக்காறு தளத்திலோட்டி, நாணிப்போம்புலன்றன்னை நாட்டி நாட்டி நரிபரிக்குக் கடிவாளம் பூட்டிக்கட்டி, மூணிப்போ மூலையடித் துக் குருபதத்தில் பிடிக்கமுணிந்த நிராகாரத்தில் மூட்டிபோடே. 190

ஓட்டியேமூலத்தால் முத்திபெற்றார் உத்தமனே பாட்டனென்ற மூலநாயர், நாட்டியேநந்தியல்லோ வுபதேசித்தார் நலமானமூலத்தில் நந்திநந்தி, எட்டியேமூலத்தால் முத்திபெற்றார் ஏத்தமாம்பாட்ட ரென்ற யெட்டுபேரும், மூட்டியேவிதுகடந்த மூலம்மூல மூலமென்று மூச்சுவிட்டுப் பேசொண்ணாதே. 191

பேசொண்ணாமூலத்தே யெல்லாந்தோன்றும் பொருளாக விரித்துநின்று பிரபஞ்சமாகிப், பேசொண்ணாப் போகமெல்லா மனுபோகித்துப் பெரிதானமூலத்தே வந்துசேரும், பேசொண்ணா வகசரத்தோ யுர்ப்பனமும்பயமும் போக்கொன்று வரத்தொன்று ரண்டுஞ்சொல்வேன், பேசொன்னாவகாரமது வுற்பனத்தைப்பண்ணும் பிரிந்து கொள்ளு முதரத்தா லயமுமானே. 192

வயமானநிஷ்களமா மகாரமொன்றில் நந்தியென்பா ரதின்பேரு யதுவேபோகம், நயமானஓங்கார மதிலேநின்று ஓராறுமறியுயர்ந்து தாழ்ந்துகாணும், நியமானபணிரெண்டாய் நின்றுஆடி நிலைத்துநின்ற யெட்டினுட கனையைவாங்கி, மயமானகாமப்பா விரைத்திரைத்து மாண்டுபோங் கள்ளருடன் மருவிடாதே. 193

மருவதுதா னெதையென்றால் மூலத்தியை மாட்டினால் வாசினையுங் கைவிட்டேகுங், கருவதுவும்பேச்சால் கருதிடாதே காமப்பேய் பிடித்தது போக்கேயூணு, வருவதுதான் மொத்துஉள்ளே பார்த்தானுற்ற கள்ளரைவருந்தா ஞேடிப்போவார், முருவதுதான் முன்பின்னையென்றாயானால் மூலத்தில்காலனுங் காலனில்லைதானே. 194

தானானகாலனுண்டென் றுலகோர்சொல்வார் தனிக்காலன்வே றில்லை மூலன்காலன், ஆனானவாலமுண்டா னந்திசெய்த தாரதைக் கண்டு பதஞ்சலியு மன்புகூர்ந்தார், கோனானபிரபஞ்சத்தி றில்லைக் குள்ளே கூப்பிட்டு ஆட்டிவிந்தாக் கூத்தாகண்டார். ஆனானவன்னிபன்று வாலங்காட்டு லாட்டிவித்தாள் திருநடனத் தினைத்தானே. 195

சிவசத்திவுந்தியிலே தானாய்நின்று சேர்த்தநின்றபடையாகத் துரி யவீடு, அவசத்தபானமதா நின்றுகொண்டு அதிகமலத் சலந்தருந்து யருந்தல்கேட்கும், தவசத்தமானதித் கூடிக்கொண்டு சாப்பிட்ட பதார்த்தமெல்லாஞ் சமனாய்ச்செய்யும், நவதத்தகொந்தாவை நுந்தி யுள்ளே துலங்கியதோ ரெனவாசத்தி யீசன்றனே. 196

ஈசனென்றபீடத்துள்ளே யிதனைக்கேநீ யிராமாதிறுள்ளே காவலாச்சு, தாச்சென்றபதிறொருவர் கருவிகூட்டத் தரித்துநின்ற பிராணனங்கே நிற்கும்பாரு, கோச்சென்றுங் கொளுவிருந்தார் யத்தி யீசன் கொள்கின்ற சொர்பனத்தின் விட்டைக்கேது, பாச்சென்ற பரத்தினிட வடிவுமாச்சு பாங்கானதுதானங்கே பாரித்தானே. 197

பாரித்துப்பதினாறு கருவிகூட்டம் பண்பாகக் கொளுவிருந்தார் பரமன்சத்தி, வீரித்துயவ்விடத்தே நின்றவரானர் விராடமதிலு றைந்தால்முன்பி னிரண்டுங்காணும், வாரித்துவெட்டிய டனவை வாங்கி யிடிசூரைவிட்டுவிடமேந்திப்பாரு, பூரித்துகடந்திவெள்ளப் புரு வமையத்தே பேரானசாக்கிரமாந் தலமிதாச்சே. 198

ஆச்சென்றுபதினாலு கருவிகூட்டம் மதிநின்றூர்சதாசிவநுமமைத் தாயாரும், வேச்சென்ற வியானனங்கே விரைந்துநின்றன் மேலான கொளுவாச்சு பிரபஞ்சமாச்சு, தேச்சென்ற கவியெங்கே தொண்ணூற் ருறு சுயம்பாகவதினுடைய தொழிலைச்செப்பு, மாச்சென்ற மறந்த தெல்லாந் தோற்றமாகு மனங்குவிந்து பூரணத்தின் கொளுவிதாமே.

தாமென்ற கொளுக்கண்டு கருவிகூட்டந் தனித்தங்கேயிந்திரியக் கூத்துகண்டு, மாவென்றமாயை பெண்ணானை மகத்தான பதிசுழியில் மாய்ந்துகாண்பார், ஆமென்றவடிவெடுத்து வங்காரங்கட்டி யரும்பான மயக்கத்தா னகமேலாக்கி, பாமென்ற பாவத்தைத் தலைமேற்கொண்டு பாங்கானவாசனையிற் குருகுவாரே. 200

புருகுவார்நரகத்தில் மூலங்கண்டு புகுந்துமே கிரியாசரியிற் கூடக் கூட்டி, கருகுவார்களையிருந்த பானுவீட்டில் கலங்காமல் கலந்துமந்த வொளியுங்கண்டு, தகுறவேசந்திரனாற் விந்துவீட்டில் தாமதமாய் வித்

தணலை மேவப்பண்ணி, அகுறலேயாரண சோலைப்போல அழுந்தவே யுடல்குளிர்ந்து புளகமாமே. 201

ஆமென்றசாம்பவிமுன் திரையைக்காட்டி வைங்கோவு ந பதத்திற் புகழைக்கண்டு, நாமென்றநாதவிந்தா மீசன்சத்தி ந, ா யிரத்தெட் டிதழின்மையம், தாமென்றரவிகோடி மதிதான்கோடி சார் ந்துநின்றமூலத்திற் சதமாங்கோடி, வேமென்றயவ்வொளிக்கு நின்று மேலே விருக்கிறதேதேவியென்ற பிரமன்தானே. 202

பிரமமாம்பிரமமென்பார் போதமென்பார் பிரகாசசுத்தவெளி சாரலென்பார், நிறமமாம்வேறொன்றிலாத நிற்குணந்தான் நிர்மலமாங் கடந்துநின்ற வேதாந்தமென்பார், விபரமாம்பிரபஞ்சமெல்லாம் விளை ந்ததென்பார் வெளியாகநின்மயமாய் நிறைந்ததென்பார், வர்மமாங் கடந்தவற் வெளிதானென்பார், வாய்பேச்சேயல்லாமல் வரைகாணாரே.

கரைகாணாப்பூரணத்தி னொளியைச்சொல்ல மதியேதுததியேது தீய்தானேது, நிரைகாணாநிரஞ்சனமா மொழியைக்காண நிசமாகக் கேசரியால் நீட்டிப்பாரு, புரைகாணாப்புல்லருக்கு வொன்றுமில்லை புத்தியுள்ளசித்தருக்குப் பொருள்தான்மேலே, உரைகாணார்மூலத்தே பார்த்துமென்ன வுறுதியில்லாதுண்ணியே வுளரிப்போச்சே. 204

## ஆசனத்திலப்பியாசிக்கமுறை

உண்ணவேயகாரமுத லன்பத்தொன்று முறுதியாம்பதினாரிற் பிரிந்துதப்பா, பண்ணவேயகாரமது யீசனுச்சு பதிக்கடுக்கவார்த்தி கஞ் சத்தியாச்சு, எண்ணவேயிப்படி பதினாயிரமும் வத்தமாஞ்சிற் சத்தியாகநின்று, மூண்ணவேயிதனாலே முப்பத்தைஞ்சாச்சு மூவுல கோரெழுத்தாக முதிர்ந்தவாறே. 205

முதிர்ந்தவன்பத்தோ ரெழுத்தால்வேதமாச்சு முக்யமாம்புராண மொடு சாஸ்திரங்களெல்லாம், விதிர்ந்தபின்புயிதற்குள்ளே விரிந்து தப்பா மிக்கசச்சிதானக் தவிரினாலே, நதிர்ந்தாறுநதிகளெல்லாஞ் சமு த்திரத்திற்புக்கி நகர்ந்தாப்போல்பூரணத்தில் பிச்சுப்போகும், ஒதிர்ந்து தேயொன்றுமில்லை யோக்கியதோர் நாலுமில்லை யொளிதான்காணே.

ஒளியானவாசியைத்தா னுன்னிக்கொண்டு உருண்டாலும்பிரண் டாலு முன்னுமூலம், அளியானயாணிபடித்தாப் போலக்கூடும் அப்ப வொருவிக்கினங்க ளணுகிடாது, குளியானமுழங்கால்மேல் குதிகால் போட்டுக் கொடுஞ்சுழிக்காங்கோமுதா சனத்திற்கூட்டு, வெளியாக வணிந்தாக்கால் வலக்கால்மேலே விபரமாமாசனத்தில் கூடிடாயே.

ஆசனத்தில்கூடயிலே வாசிஹனசுண்டி லத்துடைமேல்ரண்டான பதத்தைவைத்து, பாசனத்தில்பற்பா சனமாய்க்கட்டிப் பதிவாகநுணி மூக்கைப் பரிந்துபாரு, வாசனத்தில்சுழிமுனையில் வாசிகூடு மருவு கின்றவாசினைதா னோடிப்போகும், ஏசனத்திலிதுமார்க்கந் தாயைக் கண்டு இருக்கலாம்பூரணத்தில் மெய்தலாமே. 208

எய்தினால்சிவயோகி ஞானியவா னிருகியேவாசிமெல்லா முடலிற் சேரும், அய்தினால்மூலத்தி லொளியேவீசு மாறுதலங்கிரந்திமெல்லா மற்றுப்போகும், கொய்தினால்கும்பகத்தே மிதக்கவாகுங் கொடிதான தணலே யசைக்கப்போகார், மைதினால்வாய்வுமென்ன மசகமாச்சு மறந்தந்தசித்தருங் கண்டவாறே. 209

வாரானமூலத்தை யவ்வென்றாணு மருவியபின்மூனைகொண்டால் வங்கென்றாணு, பாரானபளிச்சென்றால் சிங்கென்றாணு பற்றியேமுன் னூறுவகை காணுங்காணு, மீரானமின்னினுட வெளிபோல்காணும் மிரளாதேமனமுள்ளே சாரமூண்ணு, ஆரானயாலமுண்ட சிவன்முக் கண்போல் ஆங்காரதீயொளியை யமுந்திப்பாரே. 210

தீயொளிதான்பளிச்சென்றால் பிரண்டையிலேலவுது சிந்தித்தால் யோகமங்கே சித்தியாச்சு, சுரவொளியாங்கும்பக மூளைக்கேறுதுகொடி தானவாயுவங்கே மவுனமாகும், சாவொளிதான்சமைப்பதற்குத் தீயும் வேண்டாம் சமர்த்தானசிகாரத்தை ஆதப்பற்றுஞ், சூழொளியாற்சுழு த்தியங்கே நெடும்பாதையோடு சுனுக்காகயிம்முறையை யாடிப்பாரே.

ஆடியங்கேபார்ப்பதற்கு முறையைக்கேளு ஆடவெல்லாந்திசா லுகிறே னறிந்துகொள்ளு, ஈடியங்கேயிடகலையால் பூரித்துநின்று எழி லாகமூலத்தே னினைவாய்க்கும்பி, நீடியங்கேபின்கலைபி லுள்ளேரேசி நேர்ப்பாகநேர்ப்பாக யேத்திவாசீ, தூடியங்கே விரைந்தாக்கால் சுத்தி நாடி திறமானவாதபித்தஞ் சிலேட்டுமம்போமே. 212

திறமானமூன்றுவகை நோயும்வெந்து சித்தியாய்க்காயந்தா னிருக் கும்நன்றாய், நலமானநல்வினையும் தீவினையும்நீறும் நவியானவைம்புல னும் விரைந்துபோகும், உறவானஓங்கார நாதனாலே ஒருகோடியிடி போல யோங்குமோங்கும், அறமானதிப்படியே யகோஞ்சுகண்டே னறி ந்துமேகாங்களு மிப்படிதான்பாரே. 213

பாருநீயவ்வென்று லும்புக்கூடும் பரவியதோர் மகாரமதில் சேர் ந்துநின்றால், ஊருநீஉகாரமாய் மேலேயேறு மிதுகாணும்பிரசாத மென்றமார்க்கம், நாருநீபளிச்சென்றால் நந்தியாகங்யமாக யிதிலேநாடே

வாசிசேரு, ஆருமீயட்சரமு மகாரத்தோடு யணைந்ததோர் வாசிரண்டு நாதவிந்தே. 214

நாதமென்றும் விந்துவென்றும் வாசிக்கபேரு ரவிமதியுஞ் சிவ சததியென்றுபேரு, வாதமென்றும் வசியமென்று மதுக்கேபேரு மன மென்றும் போதமென்று மிதுக்கேபேரு, நீதமென்றும் பூமியென்று மிதற்கேபேரு நிலையான வேகமென்றும் கந்தமென்றும்பேரு, காத மென்றுந் தாரமென்று மிதற்கேபேரு கண்ணொளியாய்நின்ற திரண்டுந் தானே. 215

ரெண்டையுந்தானுற்றுப் பார்க்கப்பார்க்க நிறையற்று உறையற்று வுணர்வுமற்று, அண்டையுந்தான் நல்லற்றுப் போனதெல்லா மடங் கிற்று வுட்புகுந்தந்தநாலில், தண்டையுந்தான் சித்தொத்துத் தெளிவு மொத்து செயலற்றநிஷ்களமாய்க் காணுங்காணும், பண்டையுந்தான் பற்றற்றசிற்பரந்தாள் பணிந்திடு மென்றுசொல்லி பகர்ந்திட்டாளே.

பகர்ந்திட்டவாசியது யென்றபேச்சு பண்பாகவாய்க்குமெத்த எளிதோசொல்லு, திகர்ந்திட்டதேசிதான் ஞானதேசி சேர்ந்திதைத் தான் மனமொத்து யேறுவோர்க்கு, புகர்ந்திட்ட புருவத்தில் நின்று ஆடும் பொருளான மனோன்மணியாம் பெண்ணைப்பாரு, இகர்ந்திட்ட காசிகங்கை யமுனையூன்று மேகமாய்க் கண்டுந்தான் புருவமென்னே.

என்னவே சிகாரமது நெருப்பாரம்மா யிசைந்துநின்ற வுகாரமது மயிர்ப்பாலமாம், உன்னவேரண்டும்விட்டா லொன்றுமொன்றில் ஓங்கிய தோர் சிகாரத்தை யொளிக்கநன்று, மன்னவே யோகாரமுந்தில் வசவு முந்தும் வருந்தியே யிதுரண்டும் தள்ளநன்று, தன்னவே ரண்டொளித் தால் சாந்தியாவான் தனித்திரண்டு மாறுக்குந் தள்ளநன்றே. 218

நன்றானசிகாரத்தால் கோபமெய்து நானென்ற வாணுவத்தால் ஒகாரந்தாக்கும், பென்றான விதுரண்டும் பெரியோரையா பிரப்ப தற்கு மிறப்பதற்கும் பெரியவித்து, உண்டான உகாரமது வுடலே யாச்சு ஓங்கியதோர்சிகாரமது வரைந்தேபுக்கி, என்றானபிறப்பிறப்பு இரண்டுமாச்சு எழுத்துரண்டு மேத்தமா யிருத்திப்பாரே. 219

இருத்தியேபாரென்று யாண்டயென்னை யேத்தமாங் காலாங்கிவை ர்தாமும், பருத்தியே பக்குவம்பார்த் தெனக்குச்சொன்னார் பாரென் ஒர்வாசியைத்தான் பூரணத்திலயிக்க,மருத்தியேகண்ணிமைக்குள்வாயில் ந்து கலக்குமருவிரண்டும் பிறந்திறந்து வித்திதென்றார், மறித்துமே வுனத்தை விடாதேயென்றார் மகத்தான விதுரண்டால் பிறப்புமாச்சு.

பிறவாமல்ஞாலத்தில் கூடுகூடு பிறந்திபாக்தூரமல்ல புகழ்ந்த நாளு, மறவாமலென்னாளும் வாழ்வாய்திதான் மாசற்றநாளப்பா சுக மோடாது, கறவாமல் கண்டத்தைக் கருத்தைவைத்துக் கனிந்துமே யோடுறதை கடுகிப்பாரு, நறவாமல் சைக்கனிபோல் நாலுந்தோன்றும், நாதாந்தமணித்தாயு மழைப்பான்பாரே. 221

பாரென்றநாலையே பார்க்கவென்றால் பண்பாக வழையெல்லாஞ் சொல்லக்கேளு, காலென்றகாலையே மாலைகேண்டாங் கடியதோர் கூட்டங்கள் கலக்கவேண்டாம், நாலென்றநிசிபான நடுசாமத்தில் நலங்காமலசைவற்று யிருந்துபாரு, கோலென்ற கோலத்தைக் கட்டிப்பார்த்துக் குறுமுனியாந் தலத்தில்நின்று குறித்துநோக்கே. 222

நோக்கியே நிலைத்துநின்று கண்டத்துள்ளே நட்பமா மட்சரந்தான் பதினோர்தன்னில், தூக்கியேயொன்றினின்று நாசியாதும் உள்ளாறில் வகாரம்நிற்குஞ் சாவுபொய்ப்பாம், நாக்கியே கைக்கெட்டா நாலுங்காணும் நாலதனிலேநின்று வாசியோட்டி, மூக்கியேதாய்காண்பாள் மூன்றும்வீதி முப்பாழெல்லாம் வெளியாமூன் பின்னாமே. 223

பின்னைகப்புக்கியிரு வென்பாள்தாயும் போர்தமொழி யிருவென்ற சொல்லைக்கேட்டு, முன்னைக் குதிரைநான் பாகத்தோனேன் மூலமாமாதாரத் தளமெல்லாங் காணேன், கொன்னைக் குருவென்ற மொழியுங்காணேன் குறித்திட்டபொறியோடு நெறியுங்காணேன், மன்னைமறுவென்ற தாயுங்காணேன் மட்டற்றபோதத்தி னுன்னினேனே. 224

உன்னியே சமாதியைந்தி னுறுதிகேளு உகப்பான தத்துவல்ய சமாதியொன்று, முன்னியே தத்துவங்கள் முப்பத்தாறும் முனிந்தகலாப் பூதங்களைந்தாகும், துன்னியே சூட்சமத்தில் தானடக்கி சூட்சமத்தை நம்பெரிய வரசன்போலாக்கி, கன்னியேகாரணமாஞ் சரீரத்திலடக்கிக் கருதியிதைப் பிரகிருதியிலே கலப்பண்ணே. 225

கலறவேபுருடனை யுந்திட்டமானமாகக் கலந்துநின்ற சைதன்னியமாகக்கண்டு, ஒலறவேகருத்தழிந்து யொன்றேயாகி உள்ளறையில் காற்றசையா விளக்குப்போல, அலறவேயலைச்சலற்றுத் தானேதானாயகண்டமெய்ப் பூரணமாய் நின்றபின்னை, துலறவேதேகமற்று யிருப்பதாலே சுத்தமாமதத்துவல்ய சமாதியாச்சே. 226

சமாதியாஞ்சவ்விகற்பச் சமாதிகேளு தனித்தனித்தா னிரண்டு வகையதிலேயுண்டு, சமாதியாஞ் சத்தானு வித்தையுண்டு தரிப்பான திரிசானு வித்தையொன்று, பெமாதியாஞ்சத்தானு வித்தைமார்க்க

பெரியதொரு தத்துவசமாதிக்குத்தான், பமாதியாஞ்சத்தங்கள் பட்சி யோசை பகிர்ந்து உன்மத்தை பாருமங்கே. 227

பருவமாஞ்சத்தானு விக்கிரகமென்று படியானசவ்விகற்ப மென்று பேரு, திருவமாக்கிரிசானு விக்கிரகமார்க்கஞ் சூட்சியாயத்தனிலேக் குள்ளேநின்று. தருவானதன்னை யனுசந்தானம் பண்ணி சஞ்சரிக்கி றிசாரு விக்கிரகமாகு, மருவமாம்சவ்விகற்பச் சமாதிமார்க்க மருவிய தோர் சஞ்சாரத்திருக்கிறபடியே. 228

[illegible] பார்க்கான தத்துவத்தில் சமாதி முத்தி. [illegible] முத்தி தன்னைத் தான்மறந்து தூக்க முறு மயக்கம்போல. [illegible] மருவியத்தைப் பூரணத்தி[illegible], [illegible] மாகப்போகும் [illegible] சமாதியதை நேர்மையாக்கே 229

நேர்மையாய்ச் சமாதியிட்டு சஞ்சரிக்கில் நினைவாகச் சமாதியிலே யிருக்கும்போது, [illegible] காலமென்ற திரையத்தான்றென்று இதை ந்த [illegible] பன்றென்று, வேர்மையாய் விவகாரத் தாலே [illegible] திருக்கின் பாசத்தன்னி, நேர்மையாய் நிரு விகற்[illegible] நெடிதானநிருவிகற்ப பிறிதுவேயாக்கே. 230

ஆச்சென்ற [illegible] சமாதிமுத்தி அறிவானநிருவிகற்ப மாகும் போது, பேச்சென்ற நிருவிகற்ப சமாதிக்குள்ளே நேரான விக்கினங்கள் நாலதுண்டு. [illegible] தெதுவென்றால் சொல்லக்கேளு சுருதிலயம் விட்சேபஞ் சட்சேபமாகும், காச்சென்றகரமாஞ் சுவாசமொன்று கருத் தூணிச் சொல்லுவது நாலுதானே. 231

நாலென்ற திதற்குள்ளே யிடத்தைக்கேளு நணிந்துநின்ற சித்தி ரைதான் விட்சேபந்தான், காலென்றராகமுறுங் கலகத்தாலே கலந்து வரும்வாசியுங் காரணத்தாலே, மாலென்றமனேக ராச்சியத்தினாலே வருகுந்தான் சட்சேபசித்திரையு ஆலென்ற மனோராச்சியமுமல்ல அர வானசொரூபங்கள் மறக்குமதுவே. 232

அதுமறந்துயிடமாக யகண்டெதிற்கு மத்திபதிலாச்சரியஞ் சுவாச மாகும், கதுநமக்கு மனமொழிந்த கனுவில்நின்ன கருதுகின்ற சுரூ பத்தே சந்தோஷித்துச், சதுமறந்து தனித்துயர்ந்த சமாதியுள்ளே தனித்துநின்ற வானந்த மனுபோகத்தைந்து, மறந்துபோம் நாலுவிக் கினமுமற்று நலமுற்றசொரூபத்தி லயிக்கநன்றே. 233

அயிக்கவேநன்றான வகண்டவிருத்தியநாத காற்றில்லா விளக்குப் போல, ஐயிக்கவேயலேச்சலற்றுத் தண்ணீருமுப்ப மடங்கிநின்றவாறது

போ லழுத்திநிற்கும், தயிக்கவேபிரமன்மா னுருத்திரனுங்கேட்டுத்
தனித்துமே வேற்றுருவாய்ப் பிரமன்தானும், அயிக்கவே யிப்படிதான்
கடிகையொன்று யறுநேரங்கடிகையுற்றால் பதத்தைக்கேளே. 234

கேளுமேயசுவாதி யாகங்கோடி கிருபைபண்ணி செய்தோர்
பலனுக்கொக்கும், மூளுமேயிப்படிதான் சமாதிமூட்டில் முனையாகச்
சுழுத்தியென்று யெண்ணவேண்டாம், கேளுமேசுழுத்திக்குச் சித்தந்
தானுந் தியங்கிநின்றவத்துமே நசித்துப்போகும், ஆளுமேசமாதிக்கு
நாம்பிரமமென்று யாண்மையா யறுவிருத்தி யிருக்கும்பாரே. 235

பாரென்று சொல்லுகையால் ரண்டுக்கும்பேதம் பண்பான நிருவி
கற்பச் சமாதிமார்க்கம், தாரென்றசஞ்சாரச் சமாதிகேளு சார்ந்துநின்ற
னிருவிகர்ப்பம் பட்டேயப்பா, பேரென்றுயெழுந்திருந்து பிரபஞ்சத்
தைப்பார்த்து பிரிவாகவிவரிக்குங் காலமெல்லாம், ஆரென்ற பிரபஞ்ச
மெல்லாஞ் சமுத்திரத்தி லதில்நிற்குந் துறைபோல மாயந்தானே. 236

தானைமாயமூன்று சிலந்தியிடமலைபோல் தயங்குகின்ற ...ர்மத்
தினங்கம்போல, ஆனைதோயமுற்ற யாகாசம்போ லழுந்துகின்ற
சொர்பனத்தி னறிவைப்போலே, தானைதம்மிடத்தே யுண்டாச்சை
யா தம்மிடத்தே யிருந்துகொண்டு மாயம்புக்கி, கானைவழிவழிந்து
போறதானால் கலந்துநன்மை விடவொன்றுங் காண்கிலேனே. 237

காண்கிலேன்சகலமும் யானென்றுனின்றுக் கலந்தாரா மொன்
றல்லோ வேறொன்றில்லை, பூண்கிலேனென்னிடத்தே பிறந்ததெல்லாம்
பேயாகவழிந்தெல்லா மெண்ணிலெய்தும், யெண்கிலே னென்னையிட்ட
தொன்றுமில்லை யியல்பாகவுரைந்து னில்லுயெங்நேரந்தான், மாண்கி
லேன்மனத்தோடு சந்தானித்து மருகியேயுள்ளிட்டு வுரைதல்நன்றே

உரைத்திட்டார் சாதாரப்பயந்தான்வந்து உறப்பெரிய பிராண
னுருப்பயந்தான்வந்து, மறைத்திட்டு மானபங்க மகத்தாய்வந்து மயக்க
மாய்க் கண்முன்னே தேவதைகள்வந்தும், குறைத்திட்டக் குருவினிட
கோபம்வந்தும் கோளுகையும் விகற்பமென்ற மறியாரியுமாகி, பரைத்
திட்டுபரியாசந் ததிபழிபோட்டு பதவிகற்கமனதிங்கே யில்லையென்னே

என்னவே யென்னிடத்தே யொன்றுங்காணே னியல்பாக நானொ
ருவ னென்னுமெல்லாம், பொன்னவே நான்கண்டதெல்லாம் பொய்
பொய் போரானசத்திபுட யிந்திரசாலம், மன்னவேமனமுறைந்து சஞ்ச
ரித்தால் மகத்தானசஞ்சார மாதியாச்சு, அன்னவேயாரூட சமாதி
தன்னை யாய்ந்துமே சொன்னபடி யறிந்துகொள்ளே. 240

கொள்ளென்ற சேவதைகள் வந்தாலுந்தான் குவித்துசட்டை பண்ணாதே யகண்டமாய்நில்லு, அள்ளென்றவத்துவித நெறியிற் கூடி அறிந்துமேசஞ்சாரச் சமாதிக்குள்ளுந், தெள்ளென்ற திடப்பட்ட பின்புகேளு தெளிந்துமேசகலத்தில் சம்சயம்போக்கித், துள்ளென்ற சுட்டசட்டி விட்டாப்போலே தேற்றமாந்தேவதையை சத்தாய்க் காணே. 241

காணவேதேவதையை மனதிலெண்ணிக் கலங்காமல்மலைபோலே யசைவுமற்று, நீணவேதேவதைகள் காற்றுபோலென்று நிச்சயித்து வொன்றாக நில்லுனில்லு, ஆணவே யத்துவித நிலைதானென்று யறிவோடே திடப்பட்டு திறத்தில்நில்லு, பூணவேசாதகத்தி னிலையைக் கூட்டி யுத்தமமாரூடச் சமாதியாச்சே. 242

சமாதியெல்லாம் பார்க்குமுன்னே சாதகத்தைக்கேளு தம்பித்து வாசியைநீபூட்டிமூட்டு, உமாதியா மூலங்கண்டுரைத்தபின்பு யோகமெல்லாம் நவ்வொன்றாவூட்டிப்பாரு, வமாதியாய்மாயமெல்லாந்தள்ளிப் போட்டு வகையாகச் சமாதியைந்தும்வாய்க்கும்வாய்க்கும், நமாதியாய் நாலுமங்கே முன்னேத்தோன்றும் நாடினால் சமாதிக்குமுறையிதாமே.

முறையான மவுனமான சமாதிகேளு மொழிந்துநான் சொல்வதேதுகுருசொல்லவேணு, மறையானமாய்கையறுமனஞ் செம்மையாகு மாசற்றால் ராசமென்ற யோகந்தானும், அறையான மனஞ்சென்றுவறிவிற்கூடு மதீதமதாங்கண்ட வெளிகாந்திகாணும், பாறையானயதுக் கெல்லாம் படுதிபற்றும் பண்பான மவுனத்தை யரையிறேனே. 244

யரையுறேன் அகாரமது மூலத்தில்நிற்கும் பண்பான உதாரமது கண்டத்தில்நிற்கும், வரையிறேன்மகாரமது மனோன்மணியில்நிற்கும் வாகாகவிழுத்தொன்றாய்க் கூட்டினாக்கால், நிரையிறேன் மவுனமதறிவில் கூடுநின்றுரைக்கில் கண்டந்தா னுள்ளேகொள்ளும், இறையிறே நடக்கையிலு மிருக்கையிலுமைந்தா யிருந்துரைக்கப் பிரபஞ்சமெல்லா மெளிதாய்ப் போச்சே. 245

போச்சுதே பாழாச்சுமுன்பின்னில்லை பெரும்பரியாந் திசை நாதங்காதில்கேட்கும், ஆச்சுதேமதிகோடி வன்னிகோடி யடங்காத ரவிகோடிகாந்தியாகும், பாச்சுதே தினந்தோறும் பார்க்கக்கிட்டில் பண்பாக முழுகிப்போமவுனப்பாம்பு, தேச்சுதேசடத்துக்குச் சிதைவு காணுஞ் சடந்தானுஞ் சித்தியாய்த் திடமாய்ப்பண்ணே. 246

திடமாகப்பண்ணினால் சடம்போகாது சிதைபாது மவுனத்தை திடமாய்நில்லு, மடமாகமவுனத்தா லாவியைப்பாரு மனமொன்றில் கண்டத்திலொளியேகாணும், படமாகச்சடங்காணும் பிடிக்கப்போய் யாம் பெரிதானகற்பூரதீபம்போல்நிற்கும், சடமாகக்கண்ணினால் சாய் கைபிருலாச்ச சத்திதானத்தமென்ற தேகமாமே. 247

தேகமே மாதுரீசி பாருவாய்ச் சித்திமுத்தி கண்டிநின்ற பாரு வக்குள், யோகமேமிப்படியே மதிநாய்ப்பார்த்தால் மெய்ஞ்ஞான பூர்த மென்ற தேகமாகும். பூகமேபோல்போமீ வர்ணமாகும் மெய்குள் கடந்தாண்டத்தில் புக்கலாகுந், சோகமேசொம்பறுத்தி சட்டைத் தோலுரிப்பும் மவுனத்தின் குட்சந்தானே. 248

நாமென்றசமாதியைத்தான் முன்னேபார்த்து சாதித்து வாய்பிடிய சம்பன்னாக்கிகரு, ஊமென்ற உகாரமாமுதாசனத்தாலே உந்த மனோசிகாரமென்ற கோபம்போக்கு, வாமென்றவாயிலாலே மன துட்கொள்ளு மகத்தான துவைதமென்ற வாசினைதனைத்துறந்தும், தேனென்றவிதிரண்டுந் செபிக்கமாட்டார் திறமாகத்தன்னை விட்டுச் சமாதிசேரே. 249

சோாகமுந்தின தத்துவத்தைப்பாரு சேர்ந்தபின்பு ஏமமென்ற சரிதையைத்தான்பாரு, பூாகக்கிரிகைசென்ற கேமந்தைப்பாரு புக ழானயோமென்ற பிராணாயாமம், போாகவுண்ணியபின் பிரத்தியா காரம் பெரிதானதாரணையும் யோகமாச்சு, தாராகசமாதியைப்பும் ஞானமாச்சு சாதகமாயிதனிலுஞ் சார்ந்துபாரே. 250

சார்ந்துமேநானுமுறை பார்ப்பதற்குமுன்னே தவிட பிரசித்திய மெல்லாஞ் சாதித்தேறி, மார்ந்துமேமவுனமாஞ் சமாதிக்குள்ளே மாசற்றசிவமான தெரிசனையைக்கண்டு, சார்ந்துமேதத்வல்பசமாதி பார்த்துதனிப்பின்புசஞ்சார சமாதிசென்று, சேர்ந்துமேநிருவிகற்ப சமாதியானால் சிறந்தபின்யாறாடச் சமாதியாமே. 251

ஆமென்றவேதாந்தஞ் சித்தாந்தத்தோடே ஆண்மையாம், சம தாந்தமப்பியாசமார்க்கம், ஊமென்றநாதாந்த யோகமார்க்கம் உற்று நின்றபோதாந்த ஞானமார்க்கம், வாமென்றகாலாங்கி வைக்குமார்க்கம் வகைமுறையாயிதுவாறுங் காணுங்காணும், ஊமென்றவுடம்பெடுத்து விட்டகுறைவந்தா லுயர்ந்துநின்றவகண்டமுன்னே யுண்ணுந்தானே.

தானென்ற உண்ணுவதுதவளைசர்ப்பம்போலுந் தனித்துநின்ற கெருடன்கைக் கோழிபோலும், வேனென்றவேங்கை கையிலாடுபோ

னும் விரவியதே நாகமணியின்வாய்சர்ப்பம்போலும், மானென்றபிடிவிழுந்த மலையைப்போலு மந்திரானதுஷ்டர்கையில் செத்துபோலும்பா,னென்ற போதருள்ளனைப்பாய்ந்திறைஞ்சி பருவமேதியாறல் பண்ணுந்தானே.

பண்ணுவேதத்துவத்தைப் பரிந்துபாரு பாங்கான யோகத்தில் மாய்ந்துபாரு, குண்டலிமௌனத்தில் கூடிப்பாரு கேசரிதானேயென்றால் கூர்ந்துநோக்கு, [illegible] கண்மணிமூன்றும் [illegible] [illegible] பானந்த வேதாந்தம் பார்த்தா [illegible] 254

ஆர்த்தா [illegible] தாத்துமார்க்கம் ஆதியான மூன்றெழுத்தி னிடமோசனுண்டோ, [illegible] தீட்சைப்பாரு நலம் [illegible] பார்த்து [illegible] பதிலாக்குவைசாந்தா னென்றுமாச்சே.

[illegible] தீட்சை எற்றமாந்தசத்திபட பிரசாத வித்தை, [illegible] சித்தயனே பரமானபிர சாதவித்தை, [illegible] தீட்சைமார்க்க மருவியதோர் பதி னென்றமௌனதீட்சை. [illegible] மூதண்ட மவுனத்தை மெய்யாய்விள்ளிச்சே. 256

செருதிகுருசொன்ன வெழுத்தையொட்டி திறமானவறிவிலே யகண்டத்தைப்பாரு, அருகியகண்டமது வன்னைத்துக்கு மறிவிலே மனஞ்செல்லாதமோக்கு, மாருகிமவுனத்தைச் சொல்லாராசான் மகத் தானவகண்டத்தில் சொக்கிபுக்க, வாருகிமந்திரம்பொய் வாயைமூடி மாசற்றபதிஞ்ஞானத் தீட்சைதானே. 257

தானென்ற குருபதந்தான் தாமரைப்பூப்போல் சகஸ்திரத்தி லெட்டிதழாய்த் தயங்கிநிற்கும். நானென்ற நடுவேதான்வட்டமாக நலமானவைங்கோண நிற்கும்பாரு, தேனென்றநடுவேதான் சிவசத்தி யொன்றாய்ச் செயலற்று வுருவமற்று வொளியுநிற்கும், கானென்ற ரவிகோடிகாந்தியாகுங் கண்கூசுமின்னலொளி கண்கண்டாயே. 258

கண்டிட்டால்தத்துவங்கள் சூழ்ந்துநிற்குங் கருத்தாகதத்துவத் தின்தெரிசனையைக்கண்டு, அண்டிட்டால் ஞானத்துக்காதிபீடம் அண்டமெல்லாம் போகுதடா யுருவித்தாண்டி, வண்டிட்டால்ஞான மென்பார்வாய்ப்பேச்சாலே வந்துதென்று வித்தைசொல்லிவாறுங்

காட்டி, கொண்டிட்டால் குறிகளை காட்டமாட்டார் கொடிதான திருப் பாட்டு கூறுவாரே. 259

கூறுவார் குருபதத்தின் தத்துவத்தைத்தாண்டி குறிப்பானசிவ னுடதெரிசனையைக்கேளு, தேறுவார்சிவகளை கோடிரவிபோலச் சிறப் பாகநின்றுதடா திடமாய்ப்பாரு, ஆறுவார் சிவனென்ன சிவமேயாச்சு அறையிறேனதில் னின்று லுறையொட்டாது, ஊருவாருன்னியத்தில் னின்றுயானால் உயரவல்லோதூக்கியே விழுக்குந்தானே. 260

இழுக்கானமூலமுத லாறுந்தள்ளி யேறினின்று மேலற்றுமடுத்து நோக்கி, உழுக்கானவுன்மனையைத்தாண்டியேறி யுதிப்பானஞான சத்திக்குள்ளே சென்று, மழுக்கானகேசரியாமனத்தாடி மந்தத் தின் பராபரமாய் ஞானமூர்த்தி, பிழுக்கானகாலமொடு பிறப்பிறப்பு போகும் பிடித்துவிட்டகூடாலே யோங்காரமாமே. 261

ஓங்காரமத்துனின்று மண்ணையுண்ணு முருவியந்த மனஞ்சென்று தண்ணீருண்ணும், தேங்காரந் தண்ணீர்தான் தீமையுண்ணுந் தீங்கான தீச்சென்று காலையுண்ணுங், காங்காரங் கால்சென்று விண்ணையுண்ணுங் கருத்தழிந்துமேசடல மென்றேயுண்ணும், வோங்காரம் வேதாந்தஞ் சித்தாந்தம்போச்சு மேலேறிமதுவுண்டு விரைந்துபாரே. 262

உண்டுஓங்கார முதலஞ்செழுத் தோடாறும் உற்றுனின்ற பஞ்ச கர்த்தா ளிருக்குந்தானம், அண்டுவாங்காரமொடு ஆனைவமுமற்று அரிஷ் டான நானென்றதற்றுப்போனால் பண்டுதானகரமொடு வுகாரங்காணும் பாங்கானமகாரமொடு விந்துநாதம், விண்டுவெறின் மேல்நிற்கும் பராபரந் தான் வெளியான மவுனத்தைப் பற்றியேறே. 263

ஏறவேயகாரமது உகாரத்தைக்கொள்ளும் ஏத்தமாம் உகாரமது மகாரத்தைக் கொள்ளும், மாறவேமகாரமது விந்துவை யுட்கொள்ளு மகத்தானவிந்துவது நாதத்தைக் கொள்ளுந், தாறவேநாதமடி சத்தி யைத்தான்கொல்லுங் தனித்துநின்ற சத்தியல்லோ சிவத்தைகொள் ளும், சிறவே சிவன்தன்னைப் பரந்தான்கொள்ளும் சிவபதத்தைக் கொண்டவிடஞ் சேர்ந்துஉண்ணே. 264

சேர்ந்துநின்றமூலமுத லாறும்பார்த்து சுழிமுனைதா னுறுவிநின்ற தோற்றம்பார்த்து, சார்ந்துநின்ற மதிபோலே சாம்பவியைக்கண்டு தாக்கிநின்று வனமுறைத்துத் தேர்ந்தபின்பு, பார்த்துநின்ற திவ்வள வும் யோகமார்க்கம் பகலிறவுற்றவிடம் ஞானமார்க்கம், கார்ந்துகன்னி நின்றவிடங் கண்டால்ஞானங் காட்டுவாள் கேசரியைக் கண்டுபாரே.

கண்டுபார்வாசியுன்னி மேலேவத்த கைவிட்டமயக்கத்தைக் கீழே தள்வாள், விண்டுபார் க்ஷணத்துக்குள் வெளியுங்காணும் விடுபடுவா ளண்டண்ட மாலைபூண்டாள், அண்டுபார் ஆதிவலையத்து அநாதிவலை யத்து அதீதமாம் ரண்டுமொன்று அறிந்துகூடு, உண்டுபார் நிற்குணத்தி லமூர்த்தமள்ளி லுயர்ந்துநின்ற ஞானசத்தி யுண்மைதானே. 266

உண்மையாம் வாசியொன்று மவுனமொன்று மூத்தமமாம் ரண்டு வித்தை யுரைக்கக்கேளு, தண்மையாஞ் சாம்பவியுங் கேசரியும் ரண்டு தனித்தேசி யேருதற்குக் காதிவித்தை, வண்மையா மனமென்றால் ஞானவித்தை மாசியென்றமனமாறல் ரண்டும்பொய்யாம், ஆண்மையா மறிவந்தாண்டுமாகு மதிதனின்ற வெளியல்லோ வகண்டம்பாரே.

பாரென்றநியிற்குள் பராபரம்தானிருந்தார் பண்பாகக்கண்டவ ரார்சித்தயோகி வரென்றவுன்மனத்தாய் கேசரிக்குள்நிற்பா ளேறிப்பார் மவுனம்வைத்து ஆதாரூது, சீயென்றநிற்குணாந்தா னதிலேகொள்ளு நிலைபானரமவுனமொன்று வதியுண்டு, கானன்றநீராகாரமொன்றுமில்லை கட்டுத்தாரறிவுகொண்டு சுருதிக்காணே. 268

காணவேகுண்டலியின் மூலமொன்று கண்டத்தில் பராபரமா மூலமொன்று, பூணவேபுருமய மூலமொன்று புகழான விந்துவிலே மூலமொன்று, தாணவேசத்தியிலே மூலமொன்று தனித்துநின்ற பரா பரத்தில் மூலமொன்று, ஆணவேபிறைதயாறுங் கண்டோன்ஞானி யறிந் துணர்ந்தால் மும்மூலயோகியாமே. 269

யோகியாம் நகாரவரையகாரவரைமட்டும் முறுதியாம் யோகத் தின்மூலமாச்சு, வாசியாம் அகாரமுதல் உகாரந்தொட்டு வதிதமாமகார வரை ஞானமூலம், தேசியாந்திசைநாத மவுனத்தில்காணுஞ் சேர்ந்தே மச்சார்ந்தேற கண்டவீதி, ஆதியாங்காமப்பாலுண்டால்கேளுயோகசித் திக் கடுக்கானற்பாலை யுண்ணே. 270

கடுக்கானற்பாலுண்ண ஞானசித்திகடிதான யோகத்திலஞ்சுநாத, மடுங்கான பவுனத்திலஞ்சுநாத மறைதானுங் கடந்திடத்தே சுத்த நாதம், நெடுங்கானல்யீசத்தில் வாசிமுத்தி நேர்ப்பான மூலத்தி லொளியேசத்தி, திடுங்கானல்சொலித்து நிற்குமென்னுலுந்தான் தூர மல்லகாதமல்ல கண்ணிமைக்குளாமே. 271

கண்ணிமைக்குள் விண்ணுக்குள் கலந்துகாணுங் கடிதானவிண் ணைது வெளியெங்கேது, ஒண்ணிமைக்கு ளொளியேது உரைத்தபடி யிம்மூன்று முன்னிதமாங்கே சரிதானுயர்த்தியாச்சு, நுண்ணிமைக்குள்

லெழுத்தே யென்பார் மாட்டுவது மூன்றெழுத்துங் காணமாட்டார், அள்ளாதமகாரமென்ன மவுனவித்தை வாய்திறவா மவுனமாமே. 278

வாமென்ற மவுனவித்தை மூன்றெழுத்து யென்பார் மாட்டுகிற வினங்காணு மார்க்கங்காணார், வாமென்றமவுனவித்தை வாய்மூடயென் பார் மாடாடுகுதிரையது வாய்போக்கேது, கோமென்ற மவுனவித்தை கேட்டிருப்பார் கூட்டுறவுகாணார் கனநாதங்கேளார், ஆமென்ற மவுன வித்தைதாண்டி நாட்டி ஆதியாந்திசைநாதங் கேட்குங்காணே. 279

காணேதான்மதியினுட வமூர்தஞ்சிந்தங் கலங்காலம் துவாதசங் கடந்துதோன்றும், தானேதானேயையறுந் தன்னினைவும் போகுந் தாரை போலண்ணாக்கி லமூர்தமொடு, மானேதானமும மலங்களற்றுப் போகும் சகத்தானவைம்பொறிகளடங்கிநிற்கும், தேனேதான் மேலா முதம் லகிரிபிறிச் சணமாகுமூன்றுக்கு மேற்செயமுமாமே. 280

செயமானவுலகத்திலகிரிவுண்டு தீர்க்கமாய்முதிர்ந்தபின்பு உன்னு ளக்கிரி, மயமானமகாரத்தால்வந்துதாக்கும் மகாரத்தைக்கூட்டையிலே யறிந்துகூடு, குயமானகும்மென்ற நாதத்தில்கூடு குறியோடே யறி வென்ற மவுனத்தைமாட்டு, நயமானநாதத்திஞட்டங்கேளு நலங் காம லொருவழியே நாட்டிடாயே. 281

நாடிஞல்சன்னமது முத்தியாகும் நலமாகவேறுதற்கு வழியைக் கேளு, வாடிஞல்மூலத்தில் வாசிவைத்து வழியோடேபிராணயம் பண்ணத்திரும், கூடிஞல்குண்டலிக்கும் நடனங்கண்டு கொடிதான வாதித்த ஞெளியைக்காணு, ஆடிஞல்கண்டத்தி லங்கொன்றாணு ஆடாதவழிதிறக்கா வழிசெவ்வாமே. 282

## மனோன்மணிப் பெருமை

செவ்வையாய்நின்றுரைத்த பழக்கமாஞல் சிறப்பானமனோன்மணி தான்புருவமையத்தே, மவ்வையாமொளியோடே மவுனத்தையூது மகத்தான சாம்பவியைக்கண்டு கொள்வாய், நெவ்வையாமிவ்வளவும் போகமார்க்கம் நின்றவனே சிவயோகிநிலைத்துக்காணுந், தவ்வையாம் விந்துவென்றகுருபதத்தில் தாக்கவேமவுனத்தைத் தாரையாமே. 283

## அஷ்டாங்க சித்தி

தாரையாமஷ்டாங்கஞ் சாற்றக்கேளு தனித்தனியேவொவ்வொன் றுய்விரித்துச்சொல்வேன், நேரையாஞ்சாட்டியமாம் நித்திரையைப் போக்கு நியமமாய்சதாநித்தந்தாரகத்தில்நில்லு, தாரையாமனங்குவி

ந்துகேசரியைப்பாரு சோமப்பால்கசிந்தோடுங் கேசரியைக் கண்டால், காரையாரவிமதியும் வன்னிகூடி கலந்துநின்றயிடமல்லோ கேசரிதான் காணே. 284

## ஏமசித்தி

காணவேயேமமொடுநேமமாகுங் கருதிய தோராசனமும்பிராணா யாமம், பூணவேபிரத்தியாகாரந்தாரணையினோடு பெருமையாந்தியான மொடு சகாதியாகும், எனவேயிதுவெல்லா மெட்டேயங்கு மிசைவான சித்தாந்தம் வேதாந்தமிரண்டும், ஆணவேயடமெல்லாஞ் சொல்லக் கேளு அறிந்துகொள்ளும் நிரைநிரைவா யறிவில்தானே. 285

## அங்கிஷசித்தி

தானென்றவேமமது பத்துமாகும் தனித்ததோர் ஐங்கிமையுஞ் சத்தியத்தினோடு, ஆனென்றஆர்த்திகப்பிரமங்கேளு ஆச்சரியந்தயவி னொடு யாட்சேபமாகும், கானென்றகூர்மையினொடு நிருதிகூட கடி தானமிதாசார மஞ்சனத்தோடு, பானென்றபத்துமே யேமமாச்சு பண் பானநேமத்தைப் பகர்ந்துபாரே. 286

## அட்டாங்கம்

பாரென்றசோலையத்தி கோமுத்தினோடு பரமமொடுவீரமாஞ் சிங்கமாகும், மூரென்றமந்திரமொடு முத்தமாகு முனையானமயூரமொடு சகந்தானாகும், ஒவென்றவொன்பது மாசனந்தானச்சு உற்றுக்கேள் பிராணய பிரிதிதன்னை, காரென்றரேசகமுப்பூரகமுங் கலந்துநின்ற அற்பிசமு நிற்பிதமஞ்சே. 287

அஞ்சவே ஆறுவகை பிரத்தியாகார மனுகூலாரமென்ற பிரத்தி யாகாரம், இஞ்சவேயிந்திரியம் பிரத்தியாகார மியல்பானபிராண னென்ற பிரத்தியாகாரம், கஞ்சவேகரணமென்ற பிரத்தியாகாரம் கைகலந்தகாமியமாம் பிரத்தியாகாரம், அஞ்சவேபிரத்தியாகாரந்தன்னை சொல்லிவிட்டேன் தனியாறுஞ் சூட்டிப்பாரே. 288

சூட்டியேதாரணையி லாறுவிதஞ்சொல்வேன் சுயபஞ்சபூதத்தின் தாரணைதானொன்று, பூட்டியேபிராணனென்ற தாரணையினோடு புக ழான பிர்மமென்ற தாரணையுமாகும், தாட்டியேதாகமென்ற தாரணையி னோடு தத்துவமென்றோரணையுஞ் சார்ந்துகேளு, மாட்டியே தார ணையினோடுமைந்தா மகத்தானயாறுவித முண்டுபாரே. 289

பார்க்கவேபத்துவித தியானஞ்சொல்வேன் பரிவானசடாதாரத் தியானமொன்று, பார்க்கவேதேகமொன்று தியானமொன்று மருவி நின்றமண்டலத்தில் தியானமொன்று, சேர்க்கவேபிரமத்தின் தியானம் ஒன்று வெளியானவிஷ்ணுவின் தியானமொன்று, ஊர்க்கவேருத்திர ருந் தியானமொன்று உகப்பானதேவதா தியானமொன்றே. 290

## ஏமம்பத்துக்கு விபரம்

ஒன்றானசஞ்சாரச் சமாதியொன்று உதிக்கின்றஆரூடச் சமாதி யொன்று, அன்றானசமாதிக்கு ளஞ்சுவிதஞ்சொன்னேன் அப்பனே அட்டாங்கமெட்டுமாச்சு, பன்றானயேமமதுபத்துங்கேளு பயனெல் லாஞ்சொல்லுகிறேன் பட்சிமிருகந், துன்றானபோதுவுந்தன் சுகதுக்கம் போல துப்புறவாய்மனதொன்று தெளிந்திடாயே. 291

தெளிந்திட்டாலங்கிஷைதா னென்றுசொல்வார் சித்தாந்தவிபரந் தான் சொல்லும்வாறு, விளிந்திட்டவேதாந்திசொல்லும்வாரு விரிவான பொறிவழியேயறிந்து நின்று, அளிந்திட்ட யகண்டமென்று பூரணத் தையப்பா லறிந்திட்டுப்பரிசனருகக்கண்டு, தளிந்திட்டசாதிவர்ணச்சிர மத்தாலே சங்கற்பவிகற்பமெல்லாந் தள்ளிப்போடே. 292

போட்டுமே வேறுகூறுகப்பண்ணி பூதாமலங்கிஷையாய்ச் சார்ந்து நிற்கில், நீட்டுமேநின்றநிலை ஆயிங்கிஷையென்பார்கள் நேரானபரியா சம்விளையாட்டாலும், ஆட்டுமேபோய்விட்டு யெங்குமான்மா யந்தர மாய்நிறைந்திருந்த சொரூபமூர்த்தி, சாட்டுமேயிதுவல்லோ சத்தியந் தான்மைந்தா தனித்தனியே கண்டிக்கப்படாதென்பாரே. 293

என்பார்களங்கிஷையில் கூடிநின்று இறந்துமே பரிபூரணமாயிரு ப்பதாக்கி, மன்பார்கள்வஸ்துவையுந் தவிரவேறே மார்க்கந்தானில்லை யென்றுசந்தானித்து, தன்பார்கள்சத்தியமாம் வாக்குக்காயஞ் சாத மென்றும் பாலென்றுங்கிரகியாமல், அன்பார்க ளபகரிப்பைவிட்டு மன முரைத்தால் அனித்தியமாஞ் சரீராதிசுபாவமாச்சே. 294

சரீரியென்றே யரிந்துபார்சகலமெல்லாந் தாரானசரீரத்தில் வருத் தத்தைநீக்கு, துரியமென்றேசகலசனம் நன்மைபோலச் சுகம்வருத்த மல்லோர்க்குந் தந்தைதாய்மைந்தர், பிரியமென்றேதனந்தம் வந்தாலுந் தான் பேரானசத்துருவுக்கிதமேசெய்யில், நெரியமென்றே யாட்சேப மிகையென்பார்கள் நேராகயிதுவுமல்லோ சொல்லக்கேளே. 295

கேள்ப்பா வேதாந்தசாஸ்திரமேசெம்மை கேள்வியுற்ற சமயமெல் லாம்பொய்யென்றுதள்ளி, தேளப்பாதிடப்பட்டா லாட்சேபமாகும்

செயமானசத்துருவும் வியாதி கிடையென்பார். சிவப்பாகிரந்தசனமுந் சிதளமாகு மிஷ்டானதுக்கவாபிமானம்வந்து. சாப்பா சொற்பனம்போ லென்றுயெண்ணி யேங்காமல்சேருமது சயமேயென்பாரே. 296

என்பார்கள் வேதாந்தத்துள்ளேமுத்தி பொய்யென்றுயாதுஞ் சாஸ்திரத்தில்முத்தியில்லை, யென்பார்களதினாலே சொன்னபொருளென்ன வேறில்லைநாமதுதானென்பதல்லோ, உன்பார்கள்காயத்தில் மனத் திற்கோளை யுருகாமலிருப்பதே திருப்தியென்பார், இன்பார்கள்வேதாந் தத்தாலேமுத்தி யிதைவிட்டால் மற்றொன்றுமில்லைதானே. 297

இல்லையே பூரணந்தானாமென்றெண்ணி யேகத்தமுமாமலிருந் தானாகில், கொல்லையேநம்மிடத்தே வந்தவின்பமில்லை கூடிநின்றல் மிதாகாரமென்றுமாகும், வெல்லையிலிக்குமம் லெனியுமென்றில்லை விருதாவா யாகாரந்தன்னைச்சக்தி, கல்லினிடைதுத்திவைபுமுலத்தி னாலே கனிந்துநின்றவாசனந்தான் சவுசமாச்சே. 298

சவுசமாம் வேதாந்தசாரத்தாலே சகலமும்நிறைவாயதில் தானே நின்று, நிவுசமாஞ்சொற்பனத்தி லவத்தைதனக்கண்டே நீங்கிநின்று போனதில்லைவந்ததில்லையென்று, வெவுசமாய்வேதாந்த குருமுகத்தில் விரைந்துகொண்டுகாலம்வந்து நேர்ந்துதானால், தயையாயிருப்பதுவே சவுசமாகுந் துரிதமாமேமமென்றப்பத்துமாச்சே. 299

பத்தானநேமத்தைப் பகரக்கேளு பாக்கானசத்தியமென்ன மித் தையென்ன, நத்தானநானேதுநானென்றதாரு நாசத்தான் மகத்து வந்தபேதமது, சுத்தானசோத்தியங்கா ணதுவாலாச்சு சுருதியாம் வேதாந்தத்தாலேபார்த்து, நித்தான நிரந்தரமு மாலோசித்து நிங்காட் டால் பொல்லாங்கைத் தவசுமாச்சே. 300

ஆச்சுதே பிரமாதிலோகத்துள்ளே யாருந்திநின்ற காமியத்தை நாகம்போலெண்ணி, தூச்சுதேவெறுப்புவந்து சொற்பனம்போ லாச் சுத் துக்கமிதுவென்றுசொல்லிமனநுதேறி, தாக்குதேபொருளானசச்சி தானந்தத் தடைபற்றுதெளிந்துநின்று தானேதானானால், போச்சுதே யானந்தவடிவுமாகி போதமாயிருக்கில் சந்தோஷந்தானே. 301

## நேமம்பத்துக்கு விபரம்

தானனவாகமபுராணந்தன்னை தனிவாகவெல்லோர்க்கும்வெளியி விட்டு, வேனனவேதாந்தபிரமசாரம் விளங்குகிற கருச்சொல்லும் பூரணமென்றெண்ணு, ஆனனதறிந்து கொண்டாராத்திடமாச்சு யரி

யதாய்க் குருவுரைத்த வுபதேசத்தைக், கானைதறிந்துபொருள் முத்த
ஞானக் கருதியகோ ரத்தமெல்லாங் குருவுக்கீயே. 302

ஈய்ந்துபோய்ப்பாம் போக்கத்தானமாகும் இருக்கிறதோர் தன்தேக
பரிபோகமெல்லாம், ஆய்ந்துபார் செப்புத்தனக்கு வந்தாப்போலே
யனேகவிதத்து பொசித்ததெல்லாம் நாமென்றுதிருத்தி, யயத்துப
ரொருமிக்கரவீசர்க்குப் பூசைநலமாகப்பாச்சுதென்று யறிந்துகொள்ளு,
தோய்ந்துபராபரைப்பூரண நிருத்தியானால் தீர்க்கமாஞ்சிவபூசை யென்று
காணே. 303

காமமெனுமிந்திரியங்களெல்லாம்விட்டு கலத்தாடு விர்த்தியெல்லா
மடித்துத்தள்ளி, நாமமிலே தன்விழல்போல் குருவினுட்பின்னே சத்தி
தானம் [illegible] தேகமெனே [illegible] ரைசிக்கும் வல்
ஆக்குள்ளே [illegible] இக்குணத்தை வென்றால், ஆனந்த தனி
விக்கு முடைத்து [illegible] ன்றுயறிவிக்கும்பூரணமே சிரவணமுமாமே.

அறிவிக்கும் [illegible] விபரமாந்த லாதாபமிருதியா பகப்பட்டா
லும், பொறிவிக்கும் [illegible] மேலே பலபட்டைசவிட்டு பொறிதானும் புலன்
வழியே போய்த்துண்டாக்கி, யறிவிக்குங் கேட்டிருக்கு ஞானமெல்லாங்
கெடியாகவே குழைக்கு யுலகத்தேதசிக்கி, யறிவிக்கும்வாசனையாம் பெண்
டீர்பிள்ளை வருகின்றபாசமெல்லாம் லட்சமெண்ணே. 305

என்னவேயெண்ணிபந்த மதியாறில்வந்தா வியல்பாகயழிசகத்தி
லிருந்துகொண்டு, தின்னவேமனதொன்றில் வேதாந்தம்பார்த்து
சீராகநிற்கிறதேலட்சையாகும், வெண்ணவேவேதாந்த பிரமந்தன்னில்
விளைந்துநின்று பூரணத்தைத்தினந்தானேக்க, வண்ணவேகோழை
விட்டுத்தெரிவுவந்து வளப்பமுற்றால் மதியென்று சொல்லலாமே. 306

சொல்லவே நான்பிரமமென்றுவாசான் சுருதிகுருவுபதேசப்படியே
நின்று, செல்லவேவேதாந்தப் பொருளென்றெண்ணி மிருதியாசை
தன்னைத்தள்ளிவிட்டால், மல்லவேமனமொத்தால்சிவமிதாச்சு மற்ற
தெல்லாஞ்சிவமல்ல மயக்கமானும், வல்லவேமவுனத்தை மைம்பொறி
யின்வழியில் மருவாமல்நிறுத்தினால் மாயம்போமே. 307

மாயாமல்நான்பிரமமென்றேயெண்ணி மனதொத்து நிரந்தரமும்
வேதாந்தம்பார்த்து, போயாமலெந்தெந்த காரியங்கள்வந்தும் புகழாகத்
துக்கமுடன்சுகந்தான்வந்தும், காயாமல்குருசொன்ன காரியத்தின்வழி
யைக் கைமுறையாய்நிற்பதுவேவிரதமாச்சு, நேயாமலேமனென்ற பத்
துஞ்சொன்னே னோராகவிருப்பதையு மனுஷ்டித்தேனே. )8

ஏறியிந்தவிருபதையு மனுஷ்டித்தாக்கால் எற்றமாமனத்திடமில் லாவிட்டால், தேறியிந்தச்சுவறில்லாசித்திரம்போலாகுஞ் சிறந்தசிவ ரடிப்படைதான் வைக்குமுன்னே, சூரியிந்தகுளிகைதானவயத்து மொக்குந்துப்புரவாய்க்காயசித்தி பண்ணுமுன்னே, ஊறியிந்தச்சது ருகத்தைக்கண்டதொக்கு முண்மையிருபதுமனுஷ்டித்தா லறிவுண் டாமே. 309

அறிவுண்டாய்சதுர்புகத்தோடே மூர்த்தியைக்காணு மப்பனே யஷ்டாங்க மறிந்துவுண்ணு, தறிவுண்டாச்சுகசாதனமா யிருந்துகொ ண்டு தனித்ததோர்மூலத்தில் வங்கென்றுபூரிக், குறிவுண்டாப்கும் பித்துமாத்திரையையேற்றி கூராககிகாரத்தால் முடியுண்டாக்கி, நெரியுண் டாய்மூன்றுமுறை மாறிணக்கால் நேராகக்கும்பகமே ரேசிப்பாயே.

ரேசித்துயிப்படிதா னங்கென்றுகும்பி நில்லாமலிதுரண்டுந்தீர்ந்த பின்பு, ஆசித்துயகாரமுதலுகாரங்கூட்டி அப்பனேமவுனத்தால் கும் பித்தேக்கு, மாசற்றமவுனந்தான் குவிந்தபின்பு மருவியதோர் மூலத்தை விட்டுநீயுங், காசித்துகண்டத்தே நின்றுஷூது காலடங்கி வந்தபின்பு மூலம்பாரே. 311

பார்த்துமேயறிவோடேமவுனம்பூரி பரிவாகப்பூரணத்தையதுக் குள்கும்பி, நீர்த்துமேமுனையோடே ரேசகத்தைப்பண்ணு நிற்பிசமா பிரமமென்ற பிராணாயாமம், பூர்த்துமேபிரபஞ்சமென்ற வாசைவிட்டுப் பின்னென்றுமனதுள்ளே சங்கியாமல், ஆர்த்துமேயந்தமென்றகாரண முமாகி யந்தமென்றமார்க்கத்தி லாடிக்காணே. 312

ஆடியேயாசனத்தை விரித்துச்சொல்வே னதிகமாஞ்சொஸ்திகத் தை யறியக்கேளு, மூடியேமுழங்காலாங் குளச்சில்ரண்டில்முனிந்தாக் கால்ரண்டும்வைக்கச்சொல் லதிகமாச்சு, சூடியே சிங்காதனத்தைக் கேளுசிறந்தயோவேட்டிதனைப் போட்டுக்கொண்டு, நாடியே முழங்கால் கள்நீட்டி நுனிமூக்கைப்பார்த்திருப்பார் நிசமாங்காணே. 313

நிசமானபத்திராசனத்தைக்கேளு நேராகவுட்கார்ந்து கால்ரண் டுங், துசமானபிறகாலேகையாற்கட்டி சுகமுற்றுயிருக்கையி லாசனமு மாச்சு, நிசமானமுத்தயாசனத்தைக்கேளு முனிந்துமேநாட்டோடு காடுபோட்டு, குசமானகுத்துக்குள் குதிரைவைத்து கூசாமலிருப்பதிந் தக் கொள்கைதானே. 314

கொள்கையாம்பூர யாசனத்தைக்கேளு குறிபெறவேரண்டுகையுந் தரையிணாணி, கள்கையாமுழங்கையைத் தொப்புளிலே வைக்க

கலந்துதடிபோலாகக் கவருவார்கள், துள்கையாஞ்சுகமுற்ற யாசனத்தைக்கேளு சுகமாகவேண்டியதோர் படியிருப்பு, உள்கையாமெண்பதுக்கும்பருவஞ்சொன்னே னுரைந்துயினிபிராணயை முரைக்கக்கேளே.

கேளென்றசரீரத்தில்பஞ்சபூதங் கெடியாகவிருக்கின்ற தானத்துள்ளே, மாளென்றமண்டலத்தில் வர்ணமுத்து மனதுள்ளேதரித்துடனே பிராணதாரம், பாளென்றபதினாறு மூலத்தொட்டு பருவமுடன் பிராணனைத்தான் தரிக்கப்பண்ணி, தானென்றகிரமத்தோடேசஞ்சரிக்கில் தாரணைதானுவிதஞ் சாதிப்போக்கே. 316

சாதித்ததியானத்தை சாற்றக்கேளு சட்டமாம்பிரமருட வீட்டுக்குள்ளே, ரேநித்தமண்டலமுங் குண்டலங்கிரீடங் கலந்துமேசரசோதிலோகப்ரதானம், சோதித்தபரிவாரஞ் சூழ்ந்துநிற்கச் சொல்லுகிறேன் வானத்திற் சூட்டினோர்க்கு, மாதித்தவரனுடைய தியானங்கேளு மாசற்றபச்சைவர்னம் வருத்திடாயே. 317

வருத்திட்ட சங்கொடுசக்கரமுந்தடியும் தரைத்துநின்றபதுமைபோல் நாற்கரங்கள், குருந்திட்டக்குண்டலமுங் கிரீடம்வைத்துக் கொத்தானமுத்தோடு துளசிமாலே, கருந்திட்டகவுஸ்துவமாம் ரத்தினம் பூண்டுகைகெயடுக்க லட்சுமியுங்கலந்துவைத்து, அருந்திட்ட பிரமாதிலோகபால ரருகிருத்தி தியானிப்பா ரறிந்துகாணே. 318

அறிந்துமேருத்திரனைத் தியானம்பண்ணு ஆண்மையா மஞ்செழுத்து மாயுதங்களோடு, பிரிந்துமே குண்டலமுங் கிரீடம்பூண்டு புகழானருத்திரியை வாமம்வைத்து, எரிந்துமேயிருக்கிறதாய் தியானித்துள்ளே யெளிதாக வுபசரிப்பார் பெரியோர்தாமு, மறிந்துமே மயேஸ்பரனைக் கருத்தாய்நோக்கி மாசற்றுவர்ச்சிப்பார் வண்மையோரே. 319

வண்மையாஞ்சதாசிவனு மனோன்மணியைநோக்கி மனதுண்ணித் தியானிப்பா ரதிகமெத்த, ஆண்மையாயிப்படியே அறுவரை தியானமானபின்பு மண்டலத்தில் மூன்றுவகைதியானம், உண்மையாயிப்படியே வுபாசிப்பார்க்க ளுத்தமமாந் தேவதாத் தியானமாச்சு, விண்மையாய் விசுவமென்ற தியானங்கேளு விளங்கிநின்ற பிரபஞ்சமெல்லாஞ் சரீரமொன்றே. 320

சரீரமொன்றே நானென்று அபிமானித்து தனித்திருந்து மீஸ்பரனைச் சிந்திப்பார்கள், சரீரமென்றே சிவனுக்குசரீரமான கலந்துநின்ற லிங்கக்கைக் கண்டாப்போலே. உரீரமொன்றே ரூபமாய் நின்றதெல்

பார்க்கவேமாத்திரைதான் முப்பத்திரண்டு பண்பாகப் பூரிப்பாய் மூலத்துக்குள்ளே, ஆர்க்கவே மாத்திரைதா னறுபத்திநாலு அடவாக கும்பித்துப்பாரு, மூர்க்கமே வே மாத்திரைதான் பதினாறப்பா முனையாக ரேசிப்பாய் தவறிடாமல், நார்க்கவேயறிந்துகொண்டு நந்தியைத்தான் பார்த்து கலந்தபின்பிறநலம் நாடிஊதே. 328

நாடியேவிற் றுவை யெந்தாலூது நலமாகவுரைத்தபின்பு ருத்திர னிற்சேரு, ஊடியேமயேஸ்பரத்தில் னின்றுவூது உரைத்தபின்பு சதா சிவத்திலுமந்து கூடு, முடியேயாறுதல முத்தியேறு உகந்துமேயொன் றுச்சு பிராணாயாமம், முடியேபிரமத்தின் காயமத்தின் பேராக வொருமுறைக்குள் கிங்கிப்போமே. 329

கிங்கிப்போம் பிராணாயஞ் செய்யும்போது னிலைத்துமே மாத்தி ரைதானை றயேறக், காங்கிப்போங்கப்பமிகும் நேர்மைகொள்ளுங் கதித் துமே கபாலத்தை யசைத்துதூக்கும், ஆங்கிப்போ மும்மலமுங் களிம் புபோல மூர்ந்துநின்ற நாடியெல்லாஞ் சுத்தியாகும், ஓங்கிப்போம் பிராணாய முரைத்துதானு லோங்குமேதிசைநாத வுண்மைதானே. 330

உண்மையெட்டு பருவமுண்டு பிராணாயத்தி லொளியாமல் சொல் லுகிறேன் வந்துகேளு, வெண்மைமத்தினின்று முத்திவேர்வையாகு மிக்கநின்றதம்பிக்கு ரண்டாம்பட்சம், தின்மையற்பறதீபமா மூன்றாம் பட்சம் வெடந்தானும் லெகுவாகும் நாலாம்பட்சம், பெண்மையொத்து பிரகாசிக்கு மஞ்சாம்பட்சம் பேரானகுண்டலிமே லாறிலாமே. 331

## காமப்பாலுடம்பில்கலத்தல்

ஆறவேவாகாய கெவுனமார்க்க மதிகமாந்தூரதிஷ்டி யறியப்பண் ணும், ஏறவேபெட்டினுட பெருமைகேளு ஏற்றமாங்கேசத்தில் திசை நாதங்கள், நாறவேநல்வினையும் தீவினையும்கேளும் நயந்தபின்பு நாடியுத் தி தானுமாகும், ஊறவேகாமப்பா லுடம்போடேகலக்கு முவந்துமே பிராணாய முரைத்துப்பாரே. 332

உரைத்துமே சொல்லுகிறேன் பிரிதியாகார முண்மையாய் வாசி னையின் வழியிற்சென்று, மிரைத்துமே நடத்துவிக்குந் துரியந்தானு மிகையாத மவுனத்தைமெள்ள முயற்சியாக்கி, விரைத்துமே திரிபுர த்தை திரியவொட்டாமல் வெட்டியதை மறிக்கிறதே பிரத்தியாகாரங், கிரைத்துமே யிதற்குள்ளே யாறுவிதமுண்டு எடுத்துமே சொல்லுகிறே னியல்பாய்க்கேளே. 333

## பிரத்தியாகாரமாறுக்கும்

இயல்பான சரீரமென்ற பிரத்தியாகார மெய்வது ரண்டுவிதம் நன்றாய்க்கேளு, நயல்பான பிரபஞ்சத்தில் மனம்போகாமல் நலமாகச் சமாதியிலே யிருத்தலொன்று, கயலாகநாடிசுத்தி கலந்தபின்பு கலந்துபோமிளமையெல்லா மறைப்படுதொன்று, ஓயலான வொருபொருளை நாடிநின்றால் உத்தமனே பிரத்தியாகாரமாச்சே. 334

ஆச்சென்ற விந்திரிய பிரத்தியாகார மாண்மையுற்ற தாதுவெனுந் தனத்தரோகம், போச்சென்று போகாமல் சமாதியில் வைத்து புத்தியொத்து பூட்டுகிறது வொன்றுகாணும், நீச்சென்ற பிராணனும் பிரத்தியாகாரம் நேர்மையொத்து நாடிசுத்தி யானபின்பு, ஊச்சென்ற விச்சிமிக லாடத்தோடு உறுதியுற்ற வாக்கினையுஞ் சோத்திறந்தானுமே.

தானனேத்திரமு நாசிவாய்தான் தனித்தபடி நாக்குதான் கண்டம்நெஞ்சு, ஊனனவுதிரமொடு யிடுப்புநாபி உற்றதுடை முழங்காலு பாதங்கேளு, ஆனனயங்குஷ்டம் வவயவங்களோடு மன்பான பிராணனைத்தான் தானம்விட்டு, வேனனகாலத்தில் விரைந்தணைத்து விடுகிறதுதாரணமென்ற பிரத்தியாமே. 33[illegible]

ஆமென்ற பிரத்தியாந்தரமாங்கானந் தன்னையலைத்து பிரபஞ்சத்தை யணுகொட்டாமல், வாமென்ற வஸ்துவொடு மார்க்கத்தாடி மகத்தான காமியத்தை நரகம்போலெண்ணி, தாமென்ற சங்கற்பவிகற்பமெல்லாந் தனியானமனதினுள்ளேசங்கியாமல், வேமென்ற வேதாந்த விசாரத்தாலே விளங்கியதோர்ஞானத்தி லிருத்தல்நன்றே. 33[illegible]

இருத்திறல்கரணமென்ற பிரத்தியாகாரம் எளிதானதனதான்யப் பொன்னுமண்ணும், தருத்திறலாபரணஞ் சகலவஸ்துந் தந்ததினை மனதிலேயபேட்சிக்காமல், வருத்திறல்வயிராக்கிய மனதிலெண்ணி மனம்வெறுத்துவிடுதல்மெத்த வுயர்த்திகேளு, பருத்திறல்கருவசங்க பிரத்தியாகார பரிவாகவேதாந்தப் பார்த்துத்தேறே. 33[illegible]

தேறவேசாட்சியெங்கும் நாமாய்நின்றோம் திகைத்துநின்ற மாயமெல்லாம்நமக்குகீழே, ஊறவேநிரந்தரமு முறைத்துநின்று உலிந்தநின்றமார்க்கமெல்லாம் நமக்குள்நின்று, மாறவேமாயமென்ற தெல்லாந் தள்ளி மகத்தானலோகத்தோர் வணங்கிநின்று, சாரவேசர்வசித்தியாகும்பாரு சருகாதிபட்சணையு முதவுவாரே. 33[illegible]

உதவுவார்நிர்வாணி யேவல்கேட்பார் உண்மையாம் யோகசித்தி வாதசித்தி, விதவுவார்வினைகளெல்லாங்கழன்றுபோகும் விரைந்ததோ

சுழிமுனையும் வெளியாய்க்காணும், புதவுவார்சடமதுவும் வண்டுபோலாம் பொற்பதுமைபோலதுதா னிருக்கலாகும், சிதவுவார்சடந்தானுஞ் சொன்னபடிகேட்கும் சித்தியாய்க்கூடுவிட்டுப் பாயலாமே. 340

பாயவேவுமிரும் பானமாகும் பார்க்கவொட்டால் திரியதுகண்ணில்மீரும், தோயவேதேவரெல்லாம் வணங்கிநிற்பார் செடம்போச்சு கயிலாசதேகமாச்சு, ஆயவேயஷ்டமாசித்தியாகு மதுகடந்தநிர்குணமுமடுக்கக்காட்டும்,வாயவேகோபத்தால் வார்த்தைசொன்னால் மண்ணோடு கல்முதலாய் நீறாய்ப்போமே. 341

நீரானவக்கினிமண்டலந்தா னேர்ந்தசுவாதிஷ்டானத்தின் கீழாக, வாரானமூலமா முக்கோணத்தின் மருவியதோர்நாலிதழ்மே லமர்ந்து நிற்குந், தேரானவானமது சிவப்புமாகுந் தெரிந்துகொண்டு வாசியினாலுன்னியாடும், காரானகளிம்பற்று சடமுந்தானுங் கனமில்லாவண்டது போல்தேகமாகு, மூரானமும்மலமுங் களிம்புநீங்கு மீளாத்தியக்கினி மண்டலமுமாமே. 342

ஆமென்றமாலிடை விஷ்ணுமேலே யதீதமாம்ருத்திரன்றன் பதிக்குக்கீழே, பாமென்றுபன்னிருவர் காவலாக பரிவான பிராணனைதான் காத்துநிற்கும், பாமென்றபளிங்குநிறம் போலிருக்கும் பரிவாகவாசிவைத்து ஆதிப்பாரு, தேமென்றசிவகளைதேசுபோல சிறந்தவாதித்தன் மண்டலமுந்தானே. 343

மண்டலமாய் விசுத்தியின் மேலேகாணு மனோன்மணித்தாய் கொலுவுக்குக் கீழேபாரு, குண்டலமாய்ச் சந்திரமண்டலமுந்தானுங் குறிப்பாகவமர்ந்திருக்குங் கூடிப்பாரு, மண்டலமாயமூர்த்தகலை யருவியாகு மதிற்சொக்கிலமூர்த்தத்தையுண்ணலாகும்,பண்டலமாய்ப்பதினாறு கலையுந்தானாய் பரிசுத்திதனைசுத்தி பரவுந்தானே. 344

பரவியேகாலாங்கி நாதர்சொன்னார் பக்குவத்திலடியேனும் பார்த்துத்தேறி, புரவியேபொதிகைக்கும் வாய்வுமூலை பெருத்ததோர சோகமாமரத்தின்கீழே, அருவியேயறுபத்து மூன்றுபோக்கு மஷ்டாங்கயாகத்தைப் போதித்தேதான், பரவியேயறுபத்து மூன்றுபேர்க்குப் பலித்துதேயஷ்டாங்க சித்திதானே. 345

சித்தியாயறுபத்து மூன்றுபேருந் தேகமெங்குந்திரிந்திட்டு விண்ணிலேறி, அத்தியேயடுக்காறு மதனில்புக்கி யதிசெயங்க ளெல்லாந்தானறிந்துப்பார்த்து,நத்தியாய்நடனத்தின்புதுமைகண்டு நாதாந்தத்திசை

நாதம் நாட்டம்பார்த்து, புத்தியாயிப் பூமிக்குள் மேருவலம்வந்து புகழ்ந்தாரே பிள்ளைகள் தான் புகழ்ந்தேன் காணே. 346

காணவே பிள்ளைகள் தான் வணக்கஞ்செய்தார் கையமர்த்திச மாதிக்குள் செல்லுமென்றேன், ஊணவே காலாங்கி நாயர் தாமுவக் குருநாமே நெஞ்சில்வைத்து மூலநாயர், தோணவே பாதமெந்தன் சிரசில்வைத்து சிவயோகமார்க்கத்தில் தெளியவென்று, வேவை ரசோகமா மாத்தின் கீழே வேட்டிதனைவிரித்துமே விரைந்தேன் பாரே. 347

விரைந்துமே நூறாண்டு சிவயோகத்தில் வெளியொளியாழ்தன்னில் மனம்விரவிப்போச்சு, நிறைந்துமே வாலவெண்ணூற்று சிங்கமென்றிஞ் சிலையென்றநம்மையெண்ணிச் சிறக்குநாளில், புரைந்துமே வெகுநாள் தான் பிள்ளைகளைப்பெற்றுப் பெருக்கங்களாகியே சிங்கக்கூட்டம், நிறைந்துமே நன்மைசுத்தி யிருந்துகொண்டு நாட்டமாயிரைகொண்டு ஒலிக்கும்பாரே. 348

பார்க்கவே வெகுநாள் தா னிருக்கும்போது பதிவாக வதிலொரு நாள் நமக்குத்தானும், ஆர்க்கவே யானந்தங் கழிந்துதானு மருவிபோல் சிவலிசிங்க மடியின்மேலே, தீர்க்கவே சிங்கமது படுத்திருக்கத் திவலை தான் சிங்கத்தின்வாயில்வீழ, ஆர்க்கவேயெழுந்திருந்து விழித்துப் பார்த்து ஆனந்தவாரியினால் ஞானமாச்சே. 349

ஞானமாய்ப்பந்துகனந் தனையழைத்து நாதாந்தசிவயோகி தன்னைத்தாமும், கானமாய்க்கல்லென்று யருகிருந்தோம் கடுஞ்சாடம் நமக்கு வரப்போகுதென்று, தூனமாய்விடமெல்லாஞ் சுத்திபண்ணி சுற்றிலுந் தான் பிள்ளைகளைக் காவல்வைத்து, தானமாய்த்தங்கருக்கு இடந் தான்வேறே யவதரித்துச்சதானித்தம் போற்றுவாரே. 350

போற்றியேயர்ச்சித்து வஞ்சலிபண்ணி பேரான சிவசெந்தை பொசித்திடாமல், தேற்றியேசல்புருகு தனைப்பொசித்து சிவசிந்தை மறவாமல் காத்திருக்கும், ஆற்றியேயிப்படிதா னநேகங்கால மர்ச்சித்துக் காத்திருக்கும்நாளில்தானும், வேற்றியேவெளியொளியாழ் தன்னை விட்டு வெளியிலேமனந்தன்னை விரைந்திட்டேனே. 351

விரைந்திட்டுக்கண்விழித்துப் பார்க்கும்போது மிருகமென்றசிங்கமெல்லாம்நடுநடுங்கி, அரைந்திட்டுவடிவணங்கி நிற்கும்போது ஆர்நீங்களென்றுசொல்லி யான்றான்கேட்க, திரந்திட்டமிருகமென்ற சிங்கம்நாங்கள் செயலறியாபுத்தியினிற்செயலென்றெண்ணி, முறைத்திட்டமூர்த்தி பிடபதத்தில்நின்றோர் முனிந்தகண்ணீர்த்திவலையினா லறிவுண்டாச்சே.

அறிவுண்டாய்ப் பயந்துமேநடுநடுங்கி அடியேன்கள் கடத்தேறும் பொருட்டுக்காகத், தெறிவுண்டாய்த் தேவர்பதங் காத்திருந்தோஞ் செயமேது தேவரீர்கடாட்சத்தாலே, தெறியுண்டாய் மிருகமென்று சட்டைநீங்கி நித்யமாமூர்த்தியெனக் கருளுகன்னே, நெறிவுண்டாய் ரான்தானு முடிசூடித்தக நாடாளும் ராஜாவாய்ப் பிறந்திட்டாரே. 353

பிறந்திட்டு ராச்சியங்கள் பிகவுமாண்டு பேரானசுகாதிகளை யனுப வித்து, மறந்திட்டமாய்கை பெண்ணைசை யபக்கறுத்து மனதுதன்னை வழிப்படாக்கி, திறந்திட்டுத்திரேக சுகமல்லவென்று திரும்பிவந்து ராசாவாய்க் குருநேசமாய், கறந்திட்ட பால்போல யோகஞானங் கருத்தெனக்கு அருளியென்றன் கடாட்சித்தேனே. 354

என்றான சடாட்சத்தால் யோகம்பார்த்து எத்தான வரசான யோகத்தில்நின்று, கன்றானகைநெல்லிக் கனிபோலேதான் கருதியே யோகத்தின் கருத்தறிந்து, தின்றானகற்பகங்கள் வெகுநாள்தின்று செடமிருக்கக் கற்பாந்தகாலந்தானுங், குன்றான வாதமெல்லாங் கூர்ந்துபார்த்து குளிகைகட்டிக் கெவுனவழி கொண்டிட்டாரே. 355

கொண்டிடவே ஐவரையுஞ் சோதித்தேறி கூர்ந்துமே திரும்பி வந்து யடியேன்பக்கல், அண்டிட்டவஷ்டாங்க மறிந்துபார்த்து அஷ்டான சைதன்யத் தடர்ந்திருந்தார், விண்டிட்டு வறுபத்து நாலுபேர் சிஷர் மேதினியிலெங்குமே சஞ்சரித்து, அண்டிட்டுச் சமாதிக்கு ளடைந்திருந்தா ரறியாட்டால் யோகத்தை யவத்தமாமே. 356

## அவயோகம்

அவத்தமாமவயோகங்கள்சேய்தாலுகி லரியாமல்பூரித்த லொதுங் கிற்றுனல், விவத்தமாம்வியாப்பிரத்தைச் சொருக்கிக்கொள்ளும் விழிப் பானகனபோகமுங் கோணிப்போகும், உவத்தமாயுடம்பெரிவுமிக்க லாகு முடலெல்லாம்வேர்வையால்வலியேகாணும், கவத்தமாமட்ட யோககர்மயோகம் கடிதானவயயோகங் கருமங்கேளே. 357

கருமமாய்ப்பூதமெல்லாம் லயமேசெய்து காரணமாந்தத்துவத் தை லயமேசெய்து, நருமமாய்க்குருபதத்தில் நாட்டினின்று நயந்துமே யேறுவார் கடினமெத்த, பருவமாய்ப்பிரியங்கியோகத்தாலே பரிந் துமேமலிவார்கள் கர்மகர்மம், நிருபமாய்மிக்கானராசயோகம் நிலைத் தல்லோசாதித்து நினைவாய்ப்பாரே. 358

நினைவாகவதன்மேலே மந்திரயோகம் நேரானதசதீட்சைமுறை யோடொக்க, அனைவாகவண்டவெளிச்சக்கரத்தை ஆடிநின்றுபிராணு

பிட்டு காரமாமகாயுருவிச் சாற்றுலாட்டி, தெண்ணவேதெல்லுப்போல்
வில்லைகட்டித் திறமானரவிதனிலே காயப்போடே. 542

போடவே தினமூன்று காயகாயப் பொருக்கான பின்பெடுத்துக்
கலையத்திட்டு, ஆடவேசக்கரமாம் பானைமேலே யணைத்தாற்போல்
வைத்திட்டு மாசிமண்பூசி, நீடவேயடுப்பில்வைத்துத் தீயைமூட்டு
இணைவாகவெள்ளைநீர் வருகும்பாரு, வாடவேசிவந்தநீர் பின்வருகுமுக்
கால் மகத்தானபீங்கானி லெடுத்துவையே. 543

வைக்கவேயரக்காலே குப்பிபண்ணி வருகிறதோர் திராவகத்தை
பதிலேவாரு, நைக்கவேவெள்ளை தன்னை வீசிப்போடு நவாச்சாரமொரு
சேரைக் கல்வத்திட்டு, ஐயிக்கமேதிராவகத்தா லாட்டுஆட்டு அறுசாக
மாட்டியபின் வழித்தெடுத்து, பைக்கவேபரும்பீங்கான் றன்னில்
வைத்தும் பருவமாய்த்திராவகத்தை வாங்கிக்குத்தே. 544

குத்தியேரவியில்வைத்து மூன்றுநாள்தான் குறிப்பாகத் தணல்
மேலே பீங்கான்வைத்து, பத்தியே பொடிபொடிபோல் வறுத்துக்
கொண்டு பருவமாய்காசிபோன்ற மேருக்கேற்றி, அத்தியேயரைமாசி
மட்டும்போடு அழகானவாலுகையின் மேலேவைத்து, எத்தியேதீப்
போடுகமலம்போல இதமாகப்பனிரண்டு சாமந்தானே. 545

தாமென்றநாற்சாம மெரித்துப்போடு சாதகமாயிராக்காலமாறப்
போடு, காமென்றமூன்றுநா ளானபின்பு கடுங்குப்பி யெடுத்துடைத்
தால் தேங்காய்போல, தேமென்ற சிறுதிடத்திற் சிவந்துகாணுந்
திரும்பவதைக்கல்வத்திற் பொடியாய்ப்பண்ணி, வாமென்ற திராவகத்
தை விட்டுஆட்டு பரும்பீங்கான் றனிலிட்டுத் திராவகத்தைக்குத்கே.

குத்தியேநாள்மூன்று ரவியிற்போடு குவிந்தபின்பு தணலுக்குள்
வறுத்துப்போடு, எத்தியேபொடியாக்கி மேருக்கேற்றி யிதமானவாலு
கையிற்றீயைமூட்டு, பத்தியேகமலம்போ லெரிப்பாயப்பா பனிரண்டு
சாமமுந்தான் கடந்தபின்பு, கத்தியேகுப்பியைத்தா னுடைத்துப்
போடு தணலில்நிற்குந்தங்கமதை யெடுத்துக்கொள்ளே. 547

கொள்ளவேமுன்போலே திராவகத்தாலாட்டு குவிந்தபின்புநீர்க்
குத்திரவியிற்போடு, அள்ளவேதணலுக்குள் வறுத்துப்போடு அதிக
மாங்காசியென்ற மேருக்கேற்றி, தள்ளவேவாலுகையிற்றீயை மூட்
டித் தனையெடுத்து முன்போலப்பாவனையேசெய்து, துள்ளவே யேழு
நாந்தீர்ந்தாயானால் சூரியன்போல்வந்திருக்குஞ் சாரந்தானே. 548

சாரந்தான்பலம்பத்து நிறுத்துக்கொண்டு சமர்த்தாகச்சூதமது பலமும்பத்து, வாரந்தான்தங்கமது ரண்டரையேபலந்தான் மருவி நன்றாய்லேசாகக் கல்வத்திட்டுத், தீரந்தானெலுமிச்சப் பழச்சார் விட்டு திரளவகைமூன்றுநாள் பொடியாய்ப்பண்ணி, காரந்தான் யாசி யென்றமேருக்கேற்றி கனமானவாலுகையில் வைத்திடாயே. 549

வைத்துமேபணிரண்டுசாமந்தீயை மறவாமல்போட்டுவரத் தீபம் போல, மைத்துமேமாதளம்பூப்போலேயாகும்மைந்தனேவெருன்று குப்பிக்கேற்றி, நைத்துமண்சீலையினுற் காற்றேடாமல் நலமாகக் கட்டிவைத்து ஆயிரத்துக்கொன்று, தைத்துமேகாசிடைதான் கொடுப்பாயானல் தங்கமதுபதிறை மாற்றுமாமே. 550

தங்கமேயாச்சுதென்று கெர்விக்காதே தளராமல்காயதனை சித்திபண்ணு, பங்கமேவாராமல் தினம்பணந்தானும்விடு பளபளக்கு முடம்பெல்லாம் பாலையாவாம், அங்கமேசரீரமது பவளம்போலாம் அரனுண்டகற்பமிது யானுமுண்டேன், சிங்கமேயிவெனன்பார் நரை யோயில்லை செகமெல்லாங்குன்றியிடைக் கொவ்வாவாரே. 551

ஒவ்வாதுஎகம்பசாரத்துக்கு உத்தமியாமனேன்மணித்தாய் பிள ப்புமெத்த, சவ்வாதுவுடன்கூடிச் சரக்கிற்பூசித் தணவிலேவொட்டை யிலேசவளையாகும், கவ்வாதுநவலோகம் படிகுமுன்னேகனகமயமாகி விடுங்கணக்கோமெத்த, பவ்வாதுவுலகத்திற் கெட்டபேர்கள் பரியாச மென்பார்கள் பாஷாண்டிதானே. 552

பாஷாண்டிமெத்தவுண்டு லோகத்துள்ளே பரிவாக அவனேடே பேசவேண்டாம், பாஷாண்டிவாதமுன்டோயென்றுகேட்டால் பண் பாகச்செய்தொழிலேவாதமென்றுசொல்லு, பாஷாண்டிவைதாலுஞ் சடுத்துக்கொண்டு பயபத்திமார்க்கமாய் விசேஷஞ்சொல்லிப், பாஷா ண்டிமுகத்துமுன்னேநிற்குமூதேவி பாங்கானதேசம்விட்டு மறு தேசம்புக்கே. 553

புக்கவேஞானமுற்றவாதியுடன்பேசு பிறப்பான மனிதருடன் பேசவேண்டாம், மக்கியேமனதடக்கிப்போதம்பாரு மகத்தான பெரி யோர்க்குத்தொண்டுபண்ணு, எக்கியேமூலத்தைக்குப்பிக்கேற்று இட லானதளங்களெல்லாஞ்சேதித்தேறி, நக்கியேவமுதத்தை மவுன முன்னிநாதாக்கள் ரிஷியுடைய மரபில்நில்லே. 55

நில்லென்று அறுபத்துநாலுமரபுள்ளே நிலைத்துநிற்கும் வா, சித்திகுளிகைசித்தி, கல்லென்றுகாயசித்திகெவுனசித்தி கரையுடே

காயசித்திஞானசித்தி, யில்லென்றவெட்டெட்டுஞ்சித்தியுண்டு மேதி னியுங்கொள்ளாது கரைகொள்ளாது, சில்லென்றகாடுபோற்சாத்தி ரங்கள்மெத்த செப்பரிது உரைகானில்வாதந்தானே. 555

வாதந்தான்முன்பின்னுய்ச்சொல்லிவைத்து மறைத்தாரே சரக் கென்றவைப்புதன்னை, நீதந்தானுதியுப்பை யிழுக்காய்ச்சொல்லி நிலை த்துநிற்கும் வீரத்தைமறைத்துப்போட்டார், வேதந்தான்முடிவுக்கு வொப்பாய்நின்ற வீரத்தைவைத்தாலே வாதமாகும், பாதந்தானில் லாமல் நடக்கப்போமோ பரிவாகச்சிவந்திருந்த சாரந்தானே. 556

சிவந்திருந்தசாரந்தின் மகிமைசொல்லச் சித்தர்முதல்ரிஷிகளு க்குமுடியாதப்பா, உவந்திருந்தகாலாங்கி நாயனுர்சொல்ல உண்மை யாய்க்கேட்டிருந்துயானுங்கண்டேன், நவத்திருந்த சூதத்தைத்துரத் திக்கொல்ல நலமாகவெருசுளுக்கு நல்கப்போகார், தவழ்ந்திருந்து பிள்ளைசென்றுநடந்தாற்போல சரக்கெல்லாங் கண்ணிமைக்குள்கொல் லுந்தானே. 557

கொல்லுகிறகருவேது யென்றுயானுல் குவிந்தபடிசொல்லு கிறேன்குறிப்பாய்கேளு, வெல்லுகிறசூதமென்றகெந்தியொன்று விடு பட்டதாளகமுஞ் சிலையும்லிங்கம், அல்லுகிறசிவப்பான சாரமொன்று அப்பனேபழச்சாற்றுல் சாமமாட்டி, தெல்லுகிறபில்லைதட்டியுலரப் போட்டு சிறப்பானஜங்குகையில் வைத்திடாயே. 558

வைத்துமேசீலைசெய்து புடத்தைப்போடு வயிரவற்கு வஸ்து சித்திபூசைபண்ணி, கைத்துமேவசத்தைவாங்கிப்போடுகளங்காகவே யிருக்கும்நவலோகத்தில், ஐந்துமேஆரத்துக்கொன்றுபோடு அப் பனேமாற்றென்னபணிரண்டாகும், கைத்துமேகாவிக்கு உப்புக்கேகா நலமானசிஷருக்குத் தொழிலில்லைசொல்லே. 559

சொல்லவேசூதத்தைகட்டுதற்கு சுளுவாகவழி சொல்வேன் கேளுமக்காள், அல்லவேயிருப்பகவிற் பழச்சார்விட்டு அதீதமென்ற சாரத்தைப்பொடியாய்ப்பண்ணி, மல்லவேசூதமொரு பலத்தைவிட்டு மறவாமல்தணவில்வைத்துப் பொடியைத்தூவு, கல்லவேகட்டியது மண்போடுங் கரியில்வைத்து உருகிடவேரசிதாமே. 560

ஆமப்பாயிச்சாரம்பொடியாய்ப்பண்ணி அப்பனேமஞ்ச ளென்ற கருவைப்போட்டு, ஓமப்பாரவியில்வைக்கத்தயிலமாகும் உற்பனமாம் பணவிடைதான் தயிலங்கொள்ள, போமப்பாசாவுபொய்யாக் கற்ப காலம் புகழானவயிரம்போலிருக்குந்தேகம், காமப்பாவித்தைக்கு மெத்தநன்று கைவிட்டசூத்திரம்போ லாடும்பாரே. 561

பார்க்கவே துரிசியொரு வைப்புச்சொல்லப் பண்பாகச் செம்பாலேபாலேபண்ணி, கார்க்கவே கல்லுப்புப் பொடியாய்ப்பண்ணி காண் தூக்குப்பதினாறில் வெடியுப்புச்சீனம், ஏர்க்கவேநிருத்தந்தபாலேயிலே போட்டு இதமானபழச்சாறுமோரும்வார்த்து, ஆர்க்கவே மேல்மூடிப் புதைத்துப்போடு ஆறுதிங்களானபின் பெடுத்துப்பாரே. 562

எடுத்துப்பார் பச்சையாய்க்கட்டியாக இதமான வயிரம்போல் துரிசியாகும், அடுத்துப்பாருப்பதுவுஞ்சத்தியாச்சு அப்பனேசெம்பது வுஞ் சிவமுமாச்சு, கடுத்துப்பார்தயிரதுவும் விஷ்ணுவாச்சு கலந்த நின்றபழச்சாறு பிருமாவாச்சு, தொடுத்துப்பாரிதைக் குருவுசெய்யில் வேதை துலையாதுவாதத்திலாதியாமே. 563

வாதத்திலாதியென்றசூதக்கட்டு வகைசொல்வேன் பச்சையென்றுமயங்கவேண்டாம், நீதத்தில்துரிசியதுபலமுமொன்று நேர்பாகப்பொடிபண்ணி வைத்துக்கொண்டு, பூதத்திலிரும்பானகரண்டிதன்னைப்புதுக்கியேதண்ணீர்விட்டுக் கழுவிப்போடு, சூதத்தைநிறுத்தல்லோபலமும்போட்டு சுறுக்குடனேதண்ணீரை மூக்கால்வாரே.

தண்ணீர்தான்கொதிக்கையிலே துரிசித்தூளைச் சாதகமாய்த் தூவிவரத்தண்ணீர்மேலே, தண்ணீர்தான்சுண்டிடவே மறுதண்ணீர் விட்டுச்சாகாமல்தூவிவரத் தண்ணீர்சுண்டும், வின்னீர்தான்மூன்றுதரம்விட்டுக்காய்ச்சு மெழுகுபோலுருண்டிருக்குஞ் சூதந்தானும் தண்ணீரைவிட்டுநன்றாய்த் தோய்த்துத் தோய்த்துச் சிறப்பாகக் கழுவிவிடத் தீர்க்கமாமே. 565

தீர்க்கமாயுருட்டியதை வைத்துக்கொண்டு செப்பரிய மத்தங் காய்க்குள்ளேவைத்து மூர்க்கமாய்ப் புடந்தன்னைப்பேர்த்துப்போடு முயற்சியாய்ப்பின்பெடுத்துக்கழுவிப்போடு, ஆர்க்கமாய்வெள்ளியதன் விராகனிடைபத்து வாழாகச்சிமிழ்போல திருவள்ளைத்துப்பண்ணி, தூர்க்கவேசூதவுண்டை நடுவேவைத்துத் துப்பரவாய்மேல்மூடி திருவிப்போடே. 566

திருவியே மறுசுற்றால் நல்லயெண்ணை சிறப்பாகக்கல்வத்திலரைமட்டம்வார்த்து, மருவியேவெள்ளியென்ற கின்னிதன்னை வட்டமிட்டுவுஞ்சல்போல் கல்வத்திட்டு, தருவியேமேலோடு கொண்டுமூடிச் சாங்கமாய் மராஷமண்மேலேபூசி, கருவியேகலசத்தின் கழுத்துதன்னில் கடுகியேபணம்போலத் தமருபோடே. 567

தமரிட்டுக்கலசத்தை ஆணிமேல்வைத்துத் தயங்காதேவிரல்பரு மன் கிரியைப்போட்டு, கமரிட்டுவிளக்கேற்றி நாலுசாமங் கலங்காதே யெரியிட்டு ஆறவிட்டு, அமரிட்டு வெள்ளியென்ற கின்னிதன்னை அசையாமல் திருகிவிடு உன்டைவாங்கி, பமரிட்டுத் தண்ணியிலே கழுவிப்போட்டு பத்துவிசையவிப்புடமாய் காயில்போடே, 568

காயிலேபோட்டபின்பு தண்ணீரிற்கழுவிக் கசகாமல் வெள்ளி யிட சிமிளில்வைத்துப், பாயிலேமூன்போல யெண்ணையிலே போட் டுப் பக்குவமாய்நாற்சாம மெரித்துபின்பு, போயிலேயிப்படிதா னாறு புடம்போடு பேரானயெண்ணையிலே பத்துவிசைபோடு, தோயிலே வெள்ளியைத்தா நடித்துப்போடு சிறப்பானவெள்ளியைத்தா னீயம் விட்டுதே. 569

ஊதியேமூன்னிரையில் சிமிள்போலப்பண்ணு உத்தமனே புடம் பத்து யெரிப்புப்பத்து, பாதியேயிப்படிதான் செய்துகொண்டு பரி வாகக்கரியில்வைத்து வுருக்கஆடும், கோதியேதங்கமிட்டு வுருக்கிக் கொண்டு குறிப்பானநாகமதுகூடவிட்டு, ஆதியேசகனுகப் பொடி யாய்ப்பண்ணி அற்றகெந்தி சூதமிடை சரியாய்க்கூட்டே. 570

கூட்டியேகல்வத்திற் பொடியாய்ப்பண்ணி கொடியான மல்லி கையின் சாற்றாலாட்டி, நீட்டியேமூன்றுநா ளரைத்தபின்பு நேராகப் பொடிபண்ணி குப்பிக்கேற்றி, மூட்டியே வாலுகையின் மேலேவை த்து முயற்சியாய்த் தீயிட்டுக்கமலம்போல, ஆட்டியேபனிரெண்டு சாமமாறு லருணநிறம்போலாகும் வேதைகேளே. 571

கேளப்பா நூற்றொன்று லோகத்தோடுங் கெடியான மாற்றென்ன யெட்டுமாகும், வேளப்பாகுளிகைக்குச் சாரணையேசெய்தால் விரவியே கோடிலட்சங் காணலாகும்,தாளப்பா ஆசுண்டு தயங்கவேண்டாந் தயங் காதமூலிகையி லாச்சுமெத்த, பாளப்பாதுரிசுவிட்டு சூதக்கட்டு படு சுருக்கு மூலிகையிற் காட்டாதென்னே. 572

என்னவேவுபசுரங்கள் நூற்றிரண்டுபத்து இலைகளினுல்சுருக்கிட் டால் சத்துவாரா, பண்ணவேபாஷாண மறுபத்துநாலும் படுமூன்னே கட்டாகச்சுன்னமாகா, மண்ணவே யுப்புவகை யிருபத்தஞ்சு மல்லிகை பூப்போல்மலர்ந்து சுன்னமாகா, தன்னவேகாரசாரங்களாலே சகல மூந்தான் கடின்மாங் குருவுமானே. 573

ஆமப்பாமூலிகையிற் சிறிதுவுண்டு அந்தவித மூலிகைதான் மனுடருக்கெய்தா, வாமப்பாமலைகளிலே யுண்டுவுண்டு மகத்தானகல்

லருகில் சூதமுண்டு, தாமப்பாமணிதரங்கே சஞ்சரிக்கப்போகார் சஞ்சரிப்பார் நாதாக்கள் ரிஷிகள்சித்தர், போமப்பா மணிகருக்குச் சாரகாரம் புகழாதிவாதத்தில் துரிசியாமே. 574

ஆதியாந்துரிசியொன்றில் களங்குசொல்ல அறைகிறேன் பண்பாக வறிவுள்ளோர்க்கு, பாதியாந்துருசியிலே ஒருபலமே தூக்கு பண்பாகக்கெந்தியது பலமேமூக்கால், வாதியாஞ்சூடனது பலமரைதான் போடுமாசற்றவீரமது பலமூங்கால்தான், பேதியாமிதுமூன்று மூமிநீர்விட்டுப் பிலக்கவரைநாற்சாமம் பின்புகேளே. 575

கேளுநீமெழுகாகும் பதத்தில்வாங்கிக் கெடிபடவே துரிசியின்மேலப்பிப்போடு, வாளுநீயுலர்ந்தபின்பு அதின்மேற்போட வகையாகச் சுண்ணாம்புக்கவசம்போடு, தாளுநீயுலர்ந்தபின்பு சீலைசெய்து தணவிலேயூதிநன்றாய்க் கவசம்வாங்கி, நீளுமேநீறிபதைக் குகையில் வைத்து நேராகவிட்டிருக்க மணியுமாமே. 576

மணியெடுத்து அடித்தாக்கால்ரவியுமாகு மாசற்றவெள்ளிதனில் நாலுக்கொன்று, தனியாகவுருக்கிடவே மூன்றுமாற்று தப்பாதுகை கண்ட தொழிலுமாகும், அணியாகயிச்செம்பு களங்குசெய்ய அப்பனேசெந்தூரங் குருந்தான்செய்ய, கணியாகநாலாறுங் காணுங் காணுங் கருத்திதுக்கருளென்றால் கெந்திதானே. 577

தூனாகுந்துரிசியென்ற செந்தூரந்தைச் சாற்றுகிறேனிதுவேகுமுன்னேபாரு, தேனாகும்வெடியுப்புச் செயநீர்தன்னில் சிறந்துநின்ற துரிசியொரு பலந்தானெட்டு, காணுகுஞ்செயநீரில் தோய்த்துத் தோய்த்துக் கடுரவியில்போட்டுவர தனந்தானேழு, பானுகும்வெடியுப்பு மூன்றுபத்துபலந்தான் பண்பானசீனமது முப்பத்தஞ்சே. 578

அஞ்சவேகல்வத்திற் பொடியாய்ப்பண்ணி யப்பனேகழுதைப்பிடரத்தம்வார்த்துத், துஞ்சவேயரைத்துநன்றாய் வில்லைபண்ணித் துடியானரவிதனிலே யுலரப்போட்டு, மிஞ்சவேகல்வத்திற் போட்டுநீயு மேலானசக்கரமாம் பானைவைத்து, கெஞ்சவேயுருந்தரைந்துச் சீலை செய்து கெடியானவடுப்பேற்றித் தீயைமூட்டே. 579

மூட்டவேமேலோடிப் புகையோடொக்க மூக்காலேசலம்விழுகும் வெள்ளைநீராய் ,ஆட்டவேவெள்ளையைத்தா னகலவைத்து அதன்பின்பு சிவந்தசலம்வருகுமக்காள், பூட்டவேபீங்கானில் வாங்கிவாங்கிப் போனஅரக்காலே குப்பிபண்ணி, நீட்டவேயதில்வாரு கரையாதப்பா நேரானலோகமென்றால் கரைந்துபோமே. 580

போமெனவேரவியில்வைத்துத் துரிசைநீவாங்கிப் பொடிபண் ணிக்கல்வத்தில் திராவகத்தைவார்த்து, ஆமெனவேயறுசாம மரை த்தபின்பு அப்பனேமறுபீங்கான் றன்னில்வைத்து, காமெனவேநீர் குத்தி ரவியிற்போடு கலங்காதேமூன்றுநா ளானபின்பு, தாமெனவே தணலுக்குள் வறுத்துப்போட்டுத் தயங்காதேபொடிப்போலே மேருக் கேற்றே. 581

ஏற்றியேதிமூட்டுபணி ரண்டுசாமம் இதமாகக்கடந்தபின்பு ஆற விட்டு, மாற்றியேபுடைத்தெடுத்துக் கல்வத்திலிட்டு வாகானதிராவ கத்தி லரைத்துமுன்போல், தூற்றியேபெரும்பீங்கான் றன்னில் வைத்து துடியானதிராவகத்தைக் குத்துகுத்து, ஆற்றியேதணலுக் குள் வறுத்துப்போடு அதீதமாங்காசியென்ற மேருக்குப்போடே.

போட்டுமேவாலுகையின் மேலேவைத்துப் பொலிவாகத்தீபம் போல் தீயைப்போடு, ஆட்டுமேபணிரண்டுசாமமாறு லப்பனே ஆற விட்டு யெடுத்துப்பாரு, காட்டுமேஜங்துதர மிப்படியேபண்ணு கச டற்றவருணனைப்போல் சிவந்துகாணுங், தீட்டுமேஅம்மரத்தைக் கத்தி கொண்டு செதுக்கியதோர் வாருக்குந் துரிசியாட்டே. 583

ஆட்டானசெந்தூரம் நவலோகத்தி லணைத்திடவே பத்தரைதா ழையிரத்துக்கொன்று, மூட்டானசூதகத்தைக் கரண்டியிலேவிட்டு மூந்துநின்ற செந்தூரமாரையிலேக்கட்டு, காட்டானசாறததனைப் பிழிந் தாயானால் கனகம்போல் திரண்டுருண்டு மணியுமாகும், வாட்டான சூடன்தீக் குள்ளேவாட்டி மருவநன்றாயுருக்கிடவே சோதியாமே.

சோதியாங்குளிகைதனை வாயில்வைக்கச் சுக்கிலத்தம்பனையா கும் வசியமாகும், வாதிபாங்கைக்குளிது இருந்துதென்றால் வாதாடி சண்டையிட்டோர் வணக்கமாவார், சாதியாங்குலங்களென்று தர்க் கம்பேசிச் சண்டையிட்டுமயிர்பிடித்துச் சாகவேண்டாம், பேதியாங் காயத்தை சித்திபண்ணி பேரானசித்தினிட மரயில்நில்லே. 585

சித்தரென்றநாமமது யெதினாலாச்சு சிவவிந்தைகட்டியதோர் தீர்மையாலே, பத்தனென்றநாமமது யெதினாலாச்சு பானமென்ற தூசிக்கா பருவத்தாலே, நித்தனென்றநாமமது யெதினாலாச்சு நிலைத் தாறுதலங்கண்ட நினைவினாலே, முத்தனென்றநாமமது யேதுக்காச்சு மூச்சற்றஞானவிடங்கண்ட ஞானியோர்க்கே. 586

ஞானிநானென்றுசொல்லி வாய்ப்பேச்சால் மாண்பர் நலமான அவ்வேடம்பூண்டுகொண்டு, யோனிதனக்காசை சாத்திரங்கள்சொல்லி

வுண்மையாயென்ற மந்திரங்களுபதேசித்து, பானியென்ற பணம்பரித்துப் பொய்கள்சொல்லி பார்த்துக்கொள்வேனென்று நரகத்தில்புக்கி, சூனியென்றநோய்வந்தா லமைத்தபடியென்று சுழன்றலைவார் ஞானியல்ல வேடத்தோரே. 587

வேடமாந்தூரிசியென்ற செந்தூரம்பலந்தான் விளங்கியதோர் சுத்தித்தபூரமொன்று, காடமந்ததங்கமென்ற ரேக்குத்தானுங் கடுகவேயரைப்பலந்தான் கூடவிட்டு, பாடமாம்பொற்றலையின் சாற்றால் ஆட்டு பக்குவமாய்ப்பொடியாக்கிக் குப்பிக்கேற்றி, வாடமாம்வாலுகையின்மேலேவைத்து வளமாகபணிரண்டு சாமத்தீயெரியே 588

தீயெரித்துஆறவிட்டு எடுத்துப்பாரு சிவப்பென்றால் வெகுசிவப்பு அருணன்போலாம், ஆயெரித்தாகவேலோக மாயிரத்தாக்கொன்று அணைத்திடவேபதினாறு மாற்றுமாகும், பாயெரித்துபணவிடைதான் தேனிலுண்ணு பளபளக்குமுடம்பெல்லா மண்டலத்தில், மனம்வெருத்துவறுமையுற்று லென்னஞானம் வழங்கியதோர்சித்தியெல்லா மண்ணாய்ப்போமே. 589

மண்ணைகொண்டல்லோ சிறிதுபேர்கள் மாயபாம்வாசனையி விறந்துபோனார், பெண்ணைகொண்டல்லோ சிறிதுபேர்கள் பொன்தோற்றுப்பேயராய் மாண்டுபோனார், உண்ணைகொண்டல்லோ சிறிதுபேர்கள் உலுத்தராய்ப்பிச்சையெடுத்துாண்டிறந்தார், கண்ணைபசுவுக்குயிருக்குமாப்போல் கலக்கமற்றஞானிக்குவேடமென்னசொல்லே.

## இந்துப்பு வைப்பு

வேடமாமிந்துப்பு வைப்புச்சொல்வேன் விளங்கியதோர் நாலடுப்பு வரிசையாய்க்கட்டி, பாடமாம்தனத்த சட்டிவைத்து பருவமாய்க் கடனீரிலுப்புக்காய்ச்சி, கோடமாந்தினந் தினமுங் காய்ச்சிக் காய்ச்சிக் கொட்டியேவடிப்பார முள்ளபானை, கூடமாய்நிறைந்திட்டு வடுப்பிலேற்றிக் காடாக்கினியாகவே தீயைமூட்டே. 591

மூட்டவேவெந்துருக்கிச் சலமாய்நிற்கு மூணாக முப்பத்துக்கொன்றுசினம், நீட்டவேவெடியுப்பு முப்பத்துக்கொன்று நேராகப் பொடிபண்ணி பதிலேபோடு, ஆட்டவேவெந்துவொன்றாய்க்குழம்பாய் நிற்கும் ஆறவிட்டும் பானையைந்தா னுடைத்துவாங்கி, காட்டவே வெளுப்பாகக்கட்டியாகும் கல்லுப்பில்செய்தாக்கால் சிவந்துபோமே.

சிவக்கின்றஇந்துப்புவாதத்துக்காய்ச் செய்கின்ற பேர்களுககுக் கல்லுப்புச்சுளுகு, பவக்கின்றலோகத்தோர் கல்லுப்பில்செய்வார் பா

ங்கியென்றால்கடல்நீரி லுப்புக்காய்ச்சி, கவக்கின்றவண்ணார்தன் னுப்பு
போலச் சதுரமாய்க்கட்டில்வைத்துச் செய்வாரையா, அவக்கின்ற கட்
டியாய் வெளுப்புமெத்த ஆகையால் சுண்ணாம்புக்கிதுதானென்றே.

## கெந்தியுப்பு

நன்றெனவேகெந்தியுப்புவைப்புக்கேளு நலமாகக்கடல்நீரி லுப்புக்
காய்ச்சி, கண்டனவேயடிகனத்த பானையிலேபோட்டுக் காய்ச்சினதோ
நுப்புக்குப் பதினாறிலொன்று, தண்டனவேசுரைகெந்தி பொடித்துப்
போட்டுச் சாதகமாய்முப்பத்துக் கொன்றுநீலம், பண்டெனவே வெடி
யுப்பு மப்படியேயாகும் பாங்காகபொடித்ததெல்லாங் கூடப்போடே.

கூடவிட்டுவெடுப்பேற்று மெரிநால்சாமங் கோடிகோடாக்கினியாந்
தீயைப்போடு, ஆடவிட்டுஉப்புருகி நிற்கும்போது அதிற்போடு மருந்
தெல்லாம் பொடியாய்ப்பண்ணி, வாடவிட்டுநால்சாமம் மெரித்தபின்பு
மயங்காதேநசிதளமா யாறப்போடு, நாடவிட்டுப்பானையைத்தா னுடை
வாங்கிநலமானவயிரம்போ லுப்புமாமே. 595

உப்பானகெந்தியது திராவகத்துக்காதி உத்தமனே சாரணைக்கு
முதலியாகும், கப்பானசொல்லில்லை கருமறைப்போயில்லை சத்தியமாய்
நான்பார்த்த படிநான்சொனனேன். கப்பானஅஞ்சுகொம்பில் மனந்
தான்சென்று கலகத்தில்விழுகாதே கருத்தூன்றிப்பார், அப்பான வுப்
புப்போல் நேர்மையாரு அழும்பருடன்பேசாம லிருக்கநன்றே. 596

## குடோரி

நன்றெனவே குடோரியொன்று சொல்லக்கேளு நலமானவெடி
யுப்பு நாலாங்காய்ச்சல், கன்றெனவேபலம்நாலு கல்வத்திலிட்டு, காணி
துக்கு சமனுப்பூநீறுபோட்டு, வின்றெனவேவெள்ளையென்ற பாஷா
ணந்தான் வெங்காரம்பலம்நாலு பொறித்துப்போட்டு, நன்றெனவே
நாளகமும்நாலுபலமேபோட்டுச் சாதகமாய்சூதமது பலமும்நாலே.

நாலோடுஅரைபலந்தான் சாரம்போடு நலமாககல்லுப்பு வறுத்துப்
போடு, சாலோடுநாலுபலங் கூட்டிப்போடு தனையெல்லா மெருக்கினுட
பாலினாலே, காலோடுமறுசாம மரைத்துநன்றாய்க் கனமானரவிதனிலே
பொடியாய்ப்பண்ணி, மேலேலிகாசியென்ற மேருக்கேற்றி விரவியே
யரைவாசி மட்டும்போடே. 598

போட்டுமே வாலுகையின் மேலேவைத்துப் பொலிவாகத்தீ
மூட்டு கமலம்போல, வாட்டுமேபனிரெண்டு சாமந்தானும் பதறாமல்

போட்டுவா கமலத்தீயாய், ஆட்டுமேயாறவிட்டு யெடுத்துப்பாரு அரகராவயிரம்போல் பதங்கித்துநிற்குங், காட்டுமேசந்துதனில் கறைநீராகக் கண்விட்டு சயம்போ லிருக்குந்தானே. 599

## சூடன் வைப்பு

தானென்றசூடான துவைப்புகேளு தணிந்துநின்ற வாழையுட கிழங்குத்தண்ணீர், தேனென்றபடிபத்து அளந்துகொண்டு சிறப்பான செம்பினுட பாண்டத்தில்விட்டு, வேனென்ற வெடியுப்பு நாலுபத்து பலந்தான் வெகுளாமல் பொடிபண்ணிக் கூடப்போட்டு, மானென்ற வடுப்பேற்றி யெறிநேர்பாக வற்றியெல்லாம் குழம்புபோல் வருகும் பாரே. 600

வருதல்கண்டு கருவாயின் பட்டைதன்னை வகையாகத் தூள்பண்ணித் தயிலம்வாங்கித், திருதல்கண்டுபடிதானுங் கூடவிட்டு சிறப்பான புட்டான பதத்திற்காய்ச்சி, கருதல்கண்டு இறக்கியே ஆறவிட்டுக் கசகாமலுளிகொண்டு வெட்டிவாங்கி, அருகல்கண்டு பரணிதனி லடைத்துப்போடு ஆச்சரியஞ்சூடனென்ற பேருமாச்சே. 601

ஆச்சிந்த சூடனைத்தான் பொடியாய்ப்பண்ணி அகண்ட செம்பு பானைதனிற் கால்வாசிபோட்டு, பாச்சிந்தசெம்பினுட குடந்துநீரைப் பக்குவமாய் மேல்வைத்துச்சீலைசுற்றி, காய்ச்சிந்த அடுப்பேற்றிக் கமலம்போலக்கைபொருக்கத் தண்ணீரைப் பதந்தைப்பார்ந்து, கீச்சிந்த ஆவிவிடுத்துப்பார்க்க கிண்ணியென்ற கற்பூரமாகும்பாரே. 602

பாரப்பாகிண்ணியென்ற கற்பூரத்தில் பக்குவமாய்க் கட்டுதோர் சரக்கையெல்லாம், வாரப்பாபரிசுற்றி வாட்டென்றதெல்லா மைந்தனே யிதினுடைய தீயில்வாட்டு, நேரப்பாபுகையடங்கி பரியுள்ளவாங்கி நேர்ப்பாகச் செந்தூரமாகும்பாரு, காரப்பா விளக்குதான் கற்பூரவிளக்குக் கருகாமல் சிவக்குமிந்த தீபந்தானே. 603

## அயமுறுக்கு

தானென்ற அயமுறுக்க வித்தைகேளு சாதகமாய்யவியாலம் பால் ரண்டுசேரில், கானென்ற கெந்தகத்தைப் பொடியாய்ப்பண்ணி கனமானநாலுபலங் கூடப்போட்டு, வேனென்ற வெண்காரம் பலமும் ரண்டு மெலிவானகுபோரி கால்பலமும்போடு, ஊனென்ற செவ்வல்லிக் கிழங்குதானும் உரலிவிட்டு யிடித்துச்சார் சேரவாரே. 604

வார்த்துடனே யெள்ளெண்ணை ரெண்டுசேரு வாகாகவிதுவெல்லாமயச்சட்டியிட்டு, பேர்த்துடனே யடுப்பேற்றி யெறித்துமெள்ளப்

பொங்காமல் தயிலமென்ற பதத்தில்வாங்கு, சேர்த்துடனே யரப் பொடிதான் பலமும்நாலு திறமானகாந்தத்தா லெடுத்துக்கொண்டு ஏர்த்துடனே சிங்கானிற் பொடியைப்போட்டு இதமாகத் தயிலத்தில் பிசறிவைத்து 605

வைத்துமே மூன்றுநாளானபின்பு வச்சிரமாங் குகைதன்னி லடைத்து, பொய்த்துமே சரவுலையில்வைத்தூத பேரான அயந் தானு முருகியாகும், தைத்துமே பொடியாக்கித் தயிலத்திற்கிளறி நல மாக்மூன்றுபால வுருக்கிக்கிருந்திரு, தைத்துமேவஞ்சுதர முருக்குத்தீர்ந் தால் கனமான அயந்தானுகா நந்தானே. 606

நாகபாஷாணந்தானுஞ் சிவத்திருக்கும் நண்பாகவிடைக் கிடைதான் தங்கத்திலிட்டு, பாகாயுருகையிலே நாகமீயப் பதையாமல் நாகமங் கேகட்டிப்போகும், சாரமாங்கல்வத்திலிதனையிட்டு தனைப்பொடித்து நாகமிடைச் சேர்த்துக்கட்டி, ஆகமாஞ்சூதத்தில் ரெட்டிகெந்தி யரைத் துமே மல்லிகையின் சாற்றுலாட்டே. 607

ஆட்டியது நாகரசமானபின்பு அப்பனே ரவியில்வைத்து பொடி யாய்ப்பண்ணி, பூட்டியது காசியென்ற மேருக்கேற்றிப் பேரானவாலு கையின் மேலே வைத்துக், காட்டிவாய்ப் பணிரண்டுசாமத்தீயைக் கம லம்போ லெரியிட்டுக் கலரவாங்கி, ஊட்டுவது நவலோகம் நூற்றுக் கொன்று உட்புகுந்து பத்தரைதான் தப்பாவாறே. 608

வாறுகேள் செந்தூரங்குன்றியுண்ணு மண்டலத்தில் நரைதிரைக ளெல்லாமாறும், கூறுகேள்தேகமது கருங்கல்லாகுங் குத்திஞல் மலைக ளெல்லாம் பொடியாய்ப்போகும், தேறுகேள்தேகமது வுவர்ந்தகாலஞ் சென்றாலும் பதினாறுவயதுபோலாகும், வேறுகேள் வாசியெல்லா முள்ளேநிற்கும் மொளியோடே மனங்கலங்கப்பண்ணும்பாரே. 609

## காந்தசத்து

பண்ணவே காந்தத்தின் சத்துகேளு பருக்கையாய்ப் பொடித்து அயச்சட்டியிட்டுக், குண்ணவே கொள்ளிலையின் சாறுவாங்கிக் குன் றுதே நால்சாமஞ் சுறுக்குப்போடு, விண்ணவே வெள்ளாட்டு வுதிரம் வார்த்து விளங்கவேயத்தின்தோலில் வைத்துக்கட்டி, கண்ணவே குழி வெட்டி குப்பைக்குள்வைத்து கலங்காதே யிருபதுநாள் மூடிப்போடு.

போட்டபின்பு யெடுத்து அதைக்கல்வத்தாட்டி புகழானகொள் ளயின் சாற்றினாலே, நீட்டபின்பு கலசத்தில்சாறுவிட்டு நினைவாக வதற்குள்ளே காந்தம்வைத்து, வாட்டபின்பு மேல்மூடிச் சீலைசெய்து

வலியபுடம்போட்டெடுத்து வைத்துக்கொண்டு, காட்டபின்புநல்லெ
ணெய்படிதானென்று நலமானகுன்றிமணியிடை பலந்தான்போடே.

போட்டதனைக்குள்சாற்றி லூறவைத்துப் புகழாகவூறியபின்
வத்தாட்டி, நீட்டதனைமெழுகதுபோல வரைத்துவாங்கி நினைவாக
லெண்ணெய் தன்னிற்போட்டு, ஆட்டதனையெலிபாலப்பால் சே
விட்டு அழகான கொள்ளிலைச்சாற்சேரவிட்டு, சேட்டபின்பு கொ
கந்தா ஜூலுபலம்போட்டு கெடியானவெண்காரம் ரண்டுபலம்போடே

போட்டப்பாகுடோரியொரு பலமுங்கால்தான் பொடித்தே
லாங்கொள்ளியிலையின் சாற்றுவாட்டி, காட்டப்பாகல்லெண்ணெய் த
னிற்போட்டு நலமாகவடுப்பேற்றி பெறிசெருக, கட்டப்பாகுழம்ப
மிறக்கிவைத்துக் கொடியகொருகாந்தத்திற் பிசறிகொண்டு, ரூ
டப்பாமூன்றுநாளானபின்பு மூச்சைக்கேபெடுக்கிட்டு வுருக்கிடாதே

உருக்கவேவெந்துருக்கிக் காதிமாகும் உத்தமனேயுடைத்தெ
துப் பொடியாய்ப்பண்ணி, கருக்கவேமூன்குழாய்பிற் பிசறிவைத்து
சாதகமாய்முன்போலே வுருக்கித்திரு, பருக்கவேயிப்படிதா னே
மூது பண்பானகாந்தமது சத்தேயாகு, மிருக்கவேகதம்பாந்தக
மென்று மென்மகனே பெழுகுகட்டிக் கின்னரிவாரே. 6

வார்த்திக்ககின்னரியிலே பானம்பண்ணி வகைவகையாய்க
மெல்லா மதிலேயுண்ணு, போர்த்திக்ககின்னரியிலே அடுப்வார்த்
புகழானகருவூமத்தஞ் சாறுவிட்டு, பேர்த்திக்கவாலுவகையின் மேல்
வைத்து பிரியமாய்த்தீயெரிக்க வுண்டையாகும், பார்த்திதனையெ
தெடுத்துக் கழஞ்சிநிறையாக பக்குவமாயுண்டைபண்ணித் தம
போடே. 6

தமரிட்டுவுண்டைபண்ணி மதிலேபோட்டு சாதகமாய்மூன்
தினங் கழிந்தபின்பு, அமரிட்டசெம்பட்டில் கோர்த்துக்கொண்டு
யாம்பராபரியைப் பூசைபண்ணி, கமரிட்டவஸ்துசத்தியர்ச்சனை
செய்து காரணமாஞ்சாம்பவி விமோசனமேபண்ணி, குமரிட்டுஆ
திராதாரம்பார்த்து கொள்கியதோர் சபைதன்னில் மனதையுன்னே

உன்னியபிரசத்தங்கேளாப்பக்கம் உவந்திருந்து நிஷ்டையி
செபமேசெய்து, கன்னிமேயஞ்செழுத்து மூன்றெழுத்துமோதிகா
மாங்குருசொல்லவுறுதிகேட்டு, பன்னிமேமதியில்நின்று அமுதத்
யுண்ண பரிதிகண்டபனிபோல பாவம்நீங்கி, மன்னிமேசிலம்பெ
நாதங்கேட்டு மகிழ்ச்சியாய்ப் பரபத்தையுண்டுதேறே.

தேறவேகாந்தசத்து பலத்தைவாங்கிச் சிறப்பாகத் தங்கத்தை யிடைக்கிடையேகூட்டி, மாறவேரண்டுமொன்று யுருகும்போது மைந் தனைநாகமொருபலத்தைப்போடு, ஆறவேகல்வத்தி லிதனைக்கொட்டி அதட்டியேபொடிபண்ணிச் சூதஞ்சேர்த்து, காறவேரண்டுபலங் கெந்தியிட்டுக் காரியமாய்ப்பொற்றலையின் சாற்றாலாட்டே. 618

ஆட்டியேஅறுசாமம் ரவியில்வைத்து அப்பனேபொடிபண்ணி குப்பிக்கேற்றி, நீட்டியேவாலுகையின் மேலேவைத்து நினைவாகத்தீ போட்டுபனிரண்டுசாமம், பூட்டியேசெந்தூரப் பதத்தைப்பாரு புகழா கச்சிலாகைநுனிக்கருட்புக்காணும், வாட்டியேயாறவிட்டு இறக்கிக் கொட்டி மைந்தனே தங்கமென்ற சிமிளில்வையே. 619

வைக்கவேநவலோகம் நூற்றுக்கொன்று மாட்டிடவேபனிரண்டு மாற்றுமாகும், மெய்க்கவேபணவிடைதான் தேனிலுண்ண மேனியெல் லாந் தங்கமயமாகும்பாரு, நைக்கவே நரைதிரைகளெல்லாமாறு நம னென்றசொல்லுமில்லை கற்பகோடி, சைக்கவேபுளியுப்பிரண்டும்விட்டுக் கள்ளியின்மேலாசைவிட்டு உண்ணுஉண்ணே. 620

உண்ணவேகற்பத்துக் குறுதிகேளு உப்பாகாபுளியாகா பெண்ணு மாகா. கண்ணவேதுவர்ப்பாகா மோருமாகா கசிந்தயெள்ளுநல்லெண் ணெய் சுண்ணும்பாகா, விண்ணவேநித்திரையின்சோம்பலாகா வேறுண மாங்கிஷங்கள் மச்சமாகா. பண்ணவேகடுகுள்ளிகாயமாகா பலபலவாஞ் சிந்தையெல்லா மறுத்துத்தள்ளே. 621

தள்ளியேயுண்ணுகிற பத்தியத்தைக்கேளு சார்பானநெய்யாகும் பாலுமாகும், அள்ளியேசிறுபயறு முருங்கையாகு மப்பனேவெள்ளாட் டுக் கரியுமாகும், துள்ளியேதூதுவளை யிலைகாயாகுஞ் சுண்டெலியாங் கவுதாரிகாடையாகும், பள்ளியேபழமாகும் கஞ்சாவாகும் பழுவெல் லாந்தேனுகும் பானமாமே. 622

ஆமப்பாசிறுகீரை யரைக்கீரையாகும் அதிதமாம்புளியாரை நல் லாரையாகும், போமப்பாபொன்னிகல்லாங் காணியாகும் புளிப்பான நெல்லிக்காய் வூற்காயாகும், தேமப்பாவழுதலங்காய்ப் பீர்க்கங்காயா குஞ் சிறப்பானமுசலாகு மூர்க்குருவியாகும், வாமப்பாமரையாகு மானுமாகும் வகையாகஇப்படிதான் பத்தியமாயுண்ணே. 623

உண்ணுறதுமூருசேரை யரிசியப்பா உத்தமனேஒருபொழுது வெந்நீர்கொள்ளு, பண்ணுறதோர்மருந்துகளில்காந்தி கொண்டால் பசுவின்பால் ராக்காலமொருசேர்கொள்ளு, விண்ணுறதுவுள்ளமுட

## முப்பொடி நாதுவினை அமுர்தம்

மண்டலந்தானுண்டபின்பு சொல்லக்கேநெ வாகானதுாதுவளை யிலையிேைடு, விண்டலந்தான் தக்கோலஞ் சாதிக்காயு மேலான வாலு ழுவைவித்திடுேடு, குண்டலந்தான் கொடிவேலி பொற்கொன்றைப் பூவு கூரானநிலப்பனையின் கிழங்குகூட்டி, மண்டலந்தான் பொடி செய்து வைத்துக்கொண்டு முக்கழுஞ்சுமுட்பன்றி நெய்யிற்கொள்ளே.

கொள்ளவேவாதத்தை யகற்றிப்போடு கொடிதானபித்தமெல்லா மறிந்துபோகும், கள்ளவேசிரசில் நிற்குங்கறபத்தைச்சாடுஞ் சங்கிலே போற் கோழையுருக் தமர் திறக்கும், விள்ளவோமதிதன்னி லமுதஞ்சேர் க்குமெய் நிறைந்தாடியெல்லா மிறுகிக்கொள்ளும். துள்ளவேயிந்திரியச் சேறுபொங்குந் துடியாதே காமநோய் கொல்லுந்தானே. 638

கொல்லுகிற காமத்தை மதியிலேற்று குறிபார்த்துத் தலங்களெல் லாங் கூர்ந்துபாரு, வொல்லுகிற மனக்குரங்கு அந்தக்கொம்பிற்றுண்ட விடுகாதே போகமென்ற வாளால்வீசு, மல்லுகின்ற யோகத்தைச் சதா நித்தம்பகரு மதியினிற்கு மமுதத்தைச் சிந்தையுண்ணு, அல்லுகிற ஆக்தாளநித்தம்பூசி யரிவில்நின்ற குருபதத்தை யடுத்துக்கேளே.

### கரிசாலை

கேளப்பாகரிசாலைக் குப்பைமேனி கெடியான காந்தையொடு வல் லாரைநீலி. வாளப்பாபொற்றலையின் சமூலமோடு வகையாக நிழலுலர் த்தா யுலர்த்திக்கொண்டு, தாளப்பாயிடித்து நன்றாய்ச் சூரணமேசெய்து சாதகமாய் வெருகடிதான் தேனிலுண்ணு, கேளப்பா கட்டியதோ வேகம்போலச் செணத்திலே காயசித்தி யிருவேளை யுண்ணே. 64[illegible]

உண்ணப்பா மண்டலந்தான் நோய்மூன்றுபோம் உத்தமனே உ ரத்தில் கிருமிபோகுங், கண்ணப்பா பவளம்போல் சிவந்திருக்குங் கா மெல்லாம் சம்பளத்தின் வாசம்வீசும், விண்ணப்பா அந்தரத்து மீன் ளெல்லாம் வெகுளாமல்பகல் காணத்தோற்றுவிற்கும், வண்ணப்ப பாதாளநிதிகள் தோற்றும் வாய்திறந்ததளமாறும் வெளியாய்ப்போபே

### வேம்பு

போமப்பாயிதுகடந்த பின்புநீதான் புகழ்பெறவே நூறுண்டி வேம்மைப்பார்த்து, ஆமப்பாபட்டையைத்தான் வெட்டிவந்து அ யனே நிழலுலர்த்தா யுலர்த்திபின்பு, காமப்பா யிடித்துநன்றாய்ச் சூ ணமேசெய்து கரிசாலைமல்லிகையின் சாறுவார்த்து, தேமப்பா யே தரம் பாவனையேசெய்து சிறப்பான வெருகடித்தூள் கொண்டிடாயே

கொண்டிடவே யனுபான வகையைக்கேளு குறிஞ்சித்தேன் தனிற்குழைத்து நாற்பதுநாள்கொள்ளு, விண்டிடவே யந்திசந்தி நினைவாய்க்கொள்ளு மெய்யெல்லாங் கருங்காலின் வயிரமாகும், சுண்டிடவே நரைதிரைக ளெல்லாம்போகும் சுக்கிலந்தான் மேலிறுகிக் கீழோடாது கண்டிடவே யாறுதலம் வெளியாய்க்காணுங் காலனுமே யஞ்சிடுவான் காணுகாணே. 643

## சர்க்கரைவேம்பு குமரி மலைமூலி

காணவேமலைதோறுஞ் சர்க்கரைவேம்புண்டு காய்தின்றால் கற்கண்டுபோலே தோன்றும், பூணவேயிலைதின்றால் மண்டலத்தில் சித்தி புகழானகாய்தின்றால் பட்சத்தில்சித்தி, தோணவேபூதின்றால் வாதத்திற்சித்தி தொகுத்ததொகை சித்தருக்கு யிதுவேயாகும், ஆணவே கிழவழிபார்க்குமப்பா ஆச்சரியமிதுதேடி அறிந்துகொள்ளே. 644

கொள்ளவேசிவப்பான கற்றாழைதானுங் கொண்டுவர மண்டலந் தானந்திசந்தி விள்ளவேதேகமது கஸ்தூரிவீசும் வேர்வைதான் தேகத்திற்கசியாதப்பா, துள்ளவேநரைதிரைக ளெல்லாமாறுஞ் சோம்பலென்ற நித்திரையுங் கொட்டாவியில்லை, கள்ளவேகாமமிது வுடம்பிலூறும் கண்களுமோ செவ்வாளிப் பூப்போலாமே. 645

ஆமிந்தச்சோறெடுத்துச் சூதத்துக்கு அனலிலே வைத்துமெள்ள சூறுக்குப்போட, வாமிந்தச்சூதமது மணிபோலாமே வகைவகையாய் பாஷாணங் கட்டிப்போகும், சேமிந்தத்தங்கத்தை யுருக்கிச்சாய்க்க க்ஷணத்திலே செம்பாகுந் தூரவோடும், நாமிந்தப்படி பார்த்தோங் காரீயஞ்செம்பாம் நாதாக்களிப்படியே பார்த்திட்டாரே. 646

பார்த்திட்டமலைகளிலே மூலிகையைக்கேளு பரிவான கருநெல்லி கறுத்தநொச்சி, பூர்த்திட்டபுறச்சோதி பெரியசோதி புகழ்பெரிய வெள்ளைப்பூ துத்தியோடு, ஏர்த்திட்டகல்லுக்குள் கோசஞ்சம்பா எளிதான ரேமவிருட்சம் எருமைவிருட்சம், கார்த்திட்டகருநீலி சுணங்கல் விருட்சம் கறுத்திருக்கும் கொடுவேலி செந்திராயே. 647

செந்திராய்வெண்புரசு வெள்ளைக்கண்டா செங்கள்ளி சேம்பல்லி குண்டலமாம்பாலை, கந்திராம்கசப்பான பசலையோடு கடியதொருபொற்சிந்தி சாய்கைவேதி, அந்திராய்கருவீழு சிவதத்தில்லை அதிவெள்ளை தூதுவளை கறுத்தவாளை, கந்திராய் கருப்பான கரியசாலை கறுத்த மத்தை வெண்கரந்தை கல்லரையுமாமே. 648

ஆமப்பாமூலிலே குருந்திறேடு ஆச்சரியங்கருந்தும்பை வெள்ளைக் காந்தி, ஓமப்பா வெண்டான ஆதண்டையோடு உத்தமனே முப்பத்து ரண்டுமூலி, வாமப்பாமலேதோறு முண்டுவுண்டு மகத்தானமூலிகைதான் பரிசுவேதை, காமப்பாஒப்பின்றி சூதங்கட்டும் கலந்துநின்ற வாசனை பாஷாணஞ்சாகே. 649

சாகவேசரக்கான வறுபத்துநாலுந் தனித்தனியே வேதையுமாஞ் சகஸ்திரத்துக்கோடுஞ், சாகவேவுபசரங்கள் நாற்றிரண்டுபத்துஞ் சவனை போல் சத்தாக பிறங்கும்பாரு, சாகவே லவணமுத விருபத்தஞ்சும் தனித்தனியேகட்டாகுஞ் சரக்கைக்கொல்லும், சாகவேபன்றும விரு த்திவிக்குஞ் சங்கற்பவிருப்பமென்ற சட்டைபோக்கே. 65(

கிளிமூக்கு மாங்காய்

போக்கானகிளிமூக்கு மாவொன்றுண்டு புகழானகிளிபோலே கா யுங்காய்க்கும், வாக்கானயிலையதுவு மரசிலேபோற்காணு மைந்தனே இதனுடைய பழத்தையுண்ணு, நோக்கானகெவுனவழி கூறாக்காயோ டும் நொடியிலேகாயசித்தி கிடைக்குமப்பா, போக்கானபூப்பூத்த பத்து நாள்பழமாம் புண்ணியராஞ்சித்தருக்கு மெய்தும்வாறே. 65

வாறுகேள்விடத்தோல்வேர் பட்டைவாங்கி மருவைநன்றாய் நிழ லர்த்திச் சூரணமேசெய்ய, பேறுகேள்பலம்நாலு நிறுத்துக்கொண் ஏச்சரியசூதமது பலந்தானாலு, தாறுகேள்கல்வத்தி விதனைப்போட் சாதகமாய்மல்லிகையின் சாறுவிட்டு, தேறுகேளெண்சாம மரைப் மைபோல் தேன்வார்த்துவுண்டைசெய்து வைத்துக்கொள்ளே. 65

வைத்ததொருமருந்தெடுத்து அந்திசந்தி வகையாக மண்டலந்தா னுண்டாயானால், கைத்ததொருபித்தமறுங் கபத்தைச்சாடுங் கசடான ஆறுதளந் திறந்துபோகும், வெய்த்ததொருவாதமென் பதுவும்போகும் மேலானசிலேத்துமமு மகன்றுபோகும், வித்ததொருசரசோதி நிர்த் தஞ்செய்வள் வீணைபோலொளியாகும் வாக்குத்தானே. 653

தானென்றபொற்சீந்தி யானால்நன்று சாதகமாய் சிகப்புநன்று கிடையாவிட்டால், பானென்றநற்சீந்திமேல் தோலைப்போக்கி பருந் தண்டாய்க்கொண்டுவந்து கிழித்துப்போட்டு, கோனென்ற நிழலுலர்த் திச் சூரணமேசெய்து கூறுனகற்கண்டு சமபாகஞ்சேர்த்து, வேனென்ற வொருகடித்தா ளந்திசந்தி வெருளாதேமண்டலமு முண்டுபாரே. 654

பாரப்பாமேகமென்ற தெல்லாம்போகும் பரிவாகவாதபித்தம் பக் குவமாகுஞ், சேரப்பாகபாலத்தின்வெட்டைபோகுஞ் செகமறிய அட்ட

சுர வேகம்போகும், காரப்பாதாதுமுற்றுந் தழைக்குந்திரேகம் சதி ரானஆறுதளம் வன்னிமீறும், பேரப்பாசிந்திக்குச் சாவேயில்லை பேரி ன்பசாஸ்திரத்தைப் பேணிப்பாரே. 655

## நெல்லிக்காய்

பேணிப்பார்நெல்லிக்காய்முத்தல்வாங்கிபேரானபால்விட்டவித்து கொண்டு, ஊணிப்பாநிழலுலர்த்திச் சூரணமேசெய்து உத்தமனே சுத் தித்த கெந்திசரிகூட்டி, பேணிப்பார்தேனதனிற் குழைத்து வுண்ணு பேராகமண்டலந்தா னுண்டாயானால், ஆணிப்பார்முன்னெடுத்த தேகம் போக்கி ஆச்சரியஞ்சிவசத்தி தேகமாச்சே. 656

சத்தியதுயேதென்றால் கெந்தமுமாச்சு தனித்துநின்ற சிவந்தா னுஞ் சூதமாச்சு, புத்தியதுயேதென்றால்மூலமாச்சு புகழானவாறுதளந் துன்னிப்பாரு, பத்தியதுவயதென்று லறிவுட்புக்கி பராபரத்தி லிச்ச துவே பத்திபத்தி, முத்தியதுவதென்ற மவுனந்தாண்ட மோசமில்லை சைதன்னிய முத்தியாமே. 657

## சிவனார் வேம்பு

ஆமப்பாயிதுகடந்த சிவனார்வேம்பை அப்பனே யிடித்துநன்றாய் சூரணமேசெய்து, தேமப்பாவாலுமுழவை சரியாய்க்கூட்டி சிறப்பாக காந்தச்சார் வார்த்தரைத்து, தாமப்பாவில்லைபண்ணி நிழலுலர்த்திச் சாதகமாய்ப்பூப்புடத்தில் தயிலம்வாங்கி, வாமப்பாமுக்கழஞ்சு அந்தி சந்தி மறவாதேமண்டலமுங் கொண்டிடாயே. 658

கொண்டிடவேகுட்டமெல்லாம் போகும்பாரு கூரானசரீரத்தில் வாதம்போகும், விண்டிடவே விஷங்களெல்லா மகன்றுபோகும் மேனி யோமாந்துளிர் நிறமுமாகும், கண்டிடவேகன்னியர்கள் வசமதாவார்க் காரியமாயைம்புலனை யடுத்துச்சாடுந், துன்றிடவேஆசையற்றால் காய சித்திபோகுந் தூசித்துக்கன்னியரைத் தொடலாகாதே. 659

## அண்ட கற்பம்

ஆகவேயண்டத்தின் கற்பங்கேளு அப்பனேகருங்கோழிச் சாவ லுடன்போடு, வாகவேவளர்ந்ததின்முட்டை யெல்லாம்வாங்கி வகை யாக கல்லுப்புக்குள்ளே வைத்து, ஏகவேயிருபதுநாள் கழிந்தபின்பு எடுத்தல்லோ அயச்சட்டிக் குள்ளேவைத்து, போகவே கெருடனிட கிழங்குசார்விட்டுப் புகழாகவடுப்பேற்றி யெரித்திடாயே. 660

எரித்திடவே சாறெல்லாஞ் சுண்டிப்பாரு மிதமாக ஆறவிட்டு வைத்துக்கொண்டு, பரித்திடவேமேலோடு அண்டமொன்று வாங்கி பதருமல்ரண்டாக்கி யந்திசந்திகொள்ளு, தரித்திடவே தினமொன்று மேலோடுவாங்கிச் சாதகமாய்தினந்தினமு மொவ்வொன்றாக, மரித்திடவேயெரித்தசலங் கற்பாநதகாலம் வைத்திருக்கவே ணுமென்றால்மண் கலந்தான்கொள்ளே. 661

கொள்ளவேகாயமிது சிவந்துமின்னுங் குறிப்பான கண்கள்ரண்டு செய்தஞ்சம்போலாம், விள்ளவேகைகால்ரண்டுங் கறுறாளுகு மெலி வானநரம்பெல்லா மிருகிக்கொள்ளும், துள்ளவே யனுபவித்தால்விந்து விழாச்சுக்கிலந்தா னிறுகியங்கேமேலேயோடுந், தள்ளவே செட்டை யொன்று கக்கிப்போகுஞ் சமர்த்துடனேயிவ்வளவுஞ் சாதித்தேறே.

சாதித்துத்தலைமுழுக வரிசைகேளு சாதகமாய்பட்சத்துக்கொருக் காலப்பா, பேதித்துமிளகோடு மஞ்சள்நெல்லி பேரானவெப்பரிசி கடுக் காய்தானும், வாதித்துசமபாகம் நிறுத்துக்கொண்டு வளமான ஆவின் பால்விட்டுஆட்டி, காதிச்சுத்தலைதனிலே தேய்த்துக்கொண்டு கனமான வெந்நீரில் முழுகிடாயே. 663

முழுகிடவேகபாலமது கெட்டியாகும் மூச்சான வாசியதுமேற் கொள்ளாது, நழுகிடவேரோமமது தும்பிபோலாம் நனைந்தாலுங் குளி ராதுவன்னிமீறும், அழுதிடவேகண்ணீர் தண்ணீர்விழாது அந்தரத் தின்மீனெல்லாம் பகலிற்றோனும், விழித்திடவேயுடலிலுள்ள விஷநீர் வற்று மேனியுமேபொன்னிறம்போ லாகும்பாரே. 664

பார்க்கவேவார்த்துமிக வுருகிக்கால்தான் பரிவாகஆவின்நெய் தேய்த்துக்கொண்டு, ஏர்க்கவேபசும்பாலு மரைப்பாய்ப்பண்ணி எளிதாக வெந்நீரில் முழுகிவாநீ, கார்க்கவேரோமமது கருவண்டுபோலாங் கண் ணுக்குளொளிமீறுந் தாகமில்லை, தோர்க்கவேசுழிமுனையும் கெட்டிட் டேறுஞ் சுள்ளாமல்பிரபஞ்ச மாயைநீக்கே. 665

நீர்க்கவேதாம்பூலந் தின்பதற்கு நினைவாகச்சுண்ணம்பு செய்யக் கேளு, கார்க்கவேகற்பூரச் சிலையின்மேலே கல்லுக்குள் சுன்னத்தைக் கவசம்போட்டு, பார்க்கவேகறியோட்டி லூதுவூது பஞ்சுபோல்பொரு மியங்கே சுன்னமாகும், தோர்க்கவேகல்நாரிப் படியேயூது அடியான அண்டத்தோ லூதிடாயே. 666

ஊதிடவேகெருடப்பட்சி பவளமுத்து உத்தமனே யிவ்வகையுஞ் சுன்னமாகும், கோதுவதுகொட்டைப்பாக் கதனைச்சீவி குறிப்பாகப்

பழுத்தவெள்ளிலையிற்பூசி, ஓதுவதுமுன்சாற்றை யுமிழ்ந்து போட்டு
உத்தமனேதாம்பூலந் தின்றுத்துப்பு, வாதுவதுவாதபித்தம் கேட்டு
மத்தைப்போக்கு மகத்தானவுபசாரத்தின் சுன்னந்தானே. 667

தானென்றகாலையிலே வழலைவாங்கச் சாதகமாய்ச்சொல்லுகி
றேன் மக்காள்கேளுநட், வானென்றகரிசாலஞ் சாற்றிலேநொடு வளமான
ஆவினெய் சமனாய்ச்சேர்த்து, ஊனென்றஅங்குட்ட விரலில்தோய்த்து
உத்தமனேயண்ணாக்கில் பிரளதேய்த்து, தேனென்றசங்கிலிபோற்
சபந்தான்வீழுஞ் சிறப்பாகப்பதினாறு தாமும்வாங்கே. 668

வாங்கியேமண்டலந்தா னிப்படிதானப்பா மாலையிலேசெய்கிற
வரிசைகேளு, பாங்கிலாயேரண்டத் தெண்ணெய்தன்னைப் பரிவாகத்
தான்துணியிற் றேய்த்துக்கொண்டு, தேங்கியேபாவைபோற் காலையூன்
றிச் சிறப்பாகக்குஞ்சனத்தில் சுத்துநூலு, ஓங்கிவாயிடசரி திருப்பு
நூறு ஒளித்திருந்தஆமெல்லாங் கழன்றுபோமே. 669

ஆமமேகழலாட்டால் காயசித்தியில்லை அண்ணாக்கில்வீழாட்டி
லமுதஞ்சிந்தாம், வாமமேயில்லாட்டால் பூசைபோச்சு மாயிங்கே
சொல்வதுவு மறைந்துபோச்சு, ஏமமேபிறப்பதுவு மண்ணாய்ப்போச்சு
எடுத்ததொருகுளிகையுட வேகம்போச்சு, காமமேகெதியென்று விருக்
கவேண்டாம் கைம்முறையாயிருகலத்தின் சட்டைதள்ளே. 670

தள்ளியேமூலிகையைக் கறுப்புப்பண்ணச் சாதகமாயரைமட்டுங்
குழிதான்வெட்டித், தெள்ளியேசெங்கொட்டை ஒன்றிரண்டாய் வெட்
டிச் சிறப்பாகநீளகுசாம்பல் பரப்பிமேலே, அள்ளியேகரம்பைமண்
ணை மேலேபோட்டு அழகாகப்பாத்திகட்டி நீளவிட்டு, நள்ளியே யழக
விட்டு மூன்றுதினங்கள் நலமாகக்கொத்தியே யாறப்போடே. 671

ஆறவிட்டுப்பதிப்பதற்கு விபரங்கேளு அழகானகுமரியொடு
ஓமங்கஞ்சா, தேறவிட்டுவெல்லாரை கரிசாலை சிறப்பானசெருப்படை
யும் நீலிவீழி, ஏறவிட்டுப்பொற்றலையி ஞெச்சிநெல்லி யிதமானகரந்
தையோடு மத்தந்தும்பை, சீறவிட்டுக்கொல்லனி கோவைவாழை சிற
ப்பாகப்பதித்துவைத்துத் தண்ணீர்வாரே. 672

வார்த்தல்லோபயிராக்கித் தண்ணீர்வார்த்து வாகாகக்காய்ந்த
பின்பு விரையைவாங்கிப், பார்த்தல்லோமுன்போல சேங்கொட்டை
யிட்டுப் புகழானமறுபடிதான் விரையைப்போடு, கோர்த்தல்லோரண்
டத்தில் கொட்டையிட்டுக் கொடுஞ்சுறுக்காய்மாறியே பயிரைப்
போடு, ஏர்த்தல்லோவிப்படிதா னுழுதரம்போடு என்மகனேமுழுக்
கறுப்பாய் மூலிதானே. 673

தானென்றமூலிகைதான் மலைகள்தோறுஞ் சாதகமாய்வைத்தாரே
ரிஷிகள்சித்தர், வானென்றகருப்புக்குப் பரிட்சைகேளு வாகாக
கொக்கிறகு கொண்டுவந்து, பானென்றயிலைகசக்கி மேலேபூச
பரிவாகக்காகத்தி னிறகேயாகும், கோனென்றயிலைதின்றால் காயசித்தி
கொடுஞ்சுறுக்காய்க்கொடியவரை யிறுத்துந்தானே. 674

இறுத்தியதோர்குமரியுட கற்பமுண்டு எழுபதுதான்கோடியுக
மிருந்தார் பாட்டர், அருந்தியதோர் ழமமுண்டு காலாங்கிநாய னறுபது
தான்கோடியுகம் வாதம்பார்த்தார். அருந்தியதோர்கஞ்சாதால் கோரக்
கர்தானும் மனதொன்றில்சமாதியிலே எழுயுகம்நின்றார், திருந்தியதோ
கரிசாலை கற்புமுண்டு சிவயோகிமுனியுடைய திறமைகேளே. 67

கேளப்பா அஞ்சுயுகம் நாதாக்களோடே கொடியாகத்தான்சித்த
வேதாந்தம்பார்த்தார். கேளப்பாநீயுண்டு ராமதேவர் விழைந்தே
லட்சமப்பா யோகம்பார்த்தார், நாளப்பாவாமமுனி செருப்படைமை
யுண்டு நாலேழுலட்சமப்பா சமாதியுற்றார், தேளப்பா ழமமுண்டு ஆ
ந்தநாசர் செகத்திலுள்ளவதிசயங்கள் பார்த்திட்டாரே. 67

பார்த்திட்டுவிழிகொண்டு கஞ்சமலைசித்தர் பத்துயுகம்ஆறுட சமா
தியிலேநின்றார், ஏர்த்திட்டபொற்றலையார் கொங்கணர்தானப்பா ஏ
யுகங்குளிகைகட்டிவாதம்பார்த்தார், கார்த்திட்டபதஞ்சலிதான்சாங்
யுண்டு கைகொட்டிச்சிதம்பரத்தில் நடனங்கண்டார், போர்த்திட்
கொல்லனுட கோவையுண்டு போகர்முனியென்றசொல்லிப் புளகி
தேனே. 67

புளகித்துக்கோடியுகம் வாதம்பார்த்து போக்கோடேயொவ்வொ
ன்றாய் விரித்துயானும், இளகித்துஏழுகாண்ட மிதுவேசொன்
னேனையுந்தானெழுநூறாய் நிகண்டாய்க்கோர்த்தேன். அழகித்த
கண்டபடி சொன்னேன்மாக்கள் ஆச்சரியம்வெட்டவெளி மறைப்பே
யில்லை, ஊகித்துவுப்பைநன்றாய்க் கட்டியுண்ணு ஒருசொல்லுந்தப்பா
சித்தியாமே. 67

## உப்புக் கட்டு

சித்தியாமன்னத்தி லுப்புக்கூட்டச் செப்புகிறேனுதாக்கள் சொ
லாதெல்லாம், பத்தியாய்ப்புங்கம்வேர்ப் பாலைவாங்கு பாரையுப்ப
தோய்த்தெடுத்து ரவியிற்போட்டு, முத்திபாயேழுநாள் ரவியிற்போட
முனையானவெடியுப்புப் பலந்தானஞ்சு, வெத்தியாய்சீனமது பலந்
னைந்து வெண்காரம்பலமஞ்சு கல்லுப்பஞ்சே. 6

அஞ்சோடுசாரமஞ்சு பூநீரஞ்சு ஆதியாங்கடநுரையுஞ்சூடனஞ்சு, பிஞ்சோடுசெவ்வீர பலந்தான்ரண்டு பேயானபுங்கன்வேர் பாலிலாட்டி, நஞ்சோடுயேழுநாள் வார்த்தரைத்து நலமானரவிதனிலே யுலரப்போட்டு, குஞ்சோடுஅண்டநீர் பலந்தானைந்து குழப்பியேபாவாலே வைத்துக்கொள்ளே. 680

கொள்ளவேபாரவுப்பில் தோய்த்துதோய்த்து குறிப்பாகக்கரிவோட்டில்வாட்டுவாட்டு, மெள்ளவேதனை லுக்கு ளடர்ந்துவாட்டு வெகுப்படங்கியுப்பதுவுஞ் செம்மையாகுந், தள்ளவேசுண்ணும்பு முப்புநேரே சமனுகப்பொடித்துமைபோல் முறியறவே, துள்ளவே ரண்டடையாய்த் தட்டிவைத்துத் துடியாகவிசித்தவுப்பை வைத்துவையே. 681

வைத்துமேலடைமூடிச் சட்டியில்வைத்து வாகாகநாற்சாமந் தீயைமூட்டி, மொய்த்துமேல்மூடியொரு சீலைசெய்து முசியாமல்நூறெருபுடத்தேபோடு, தைத்துமேயாறவிட்டு யெடுத்துப்பாரு தவளம்போற் பளிங்குநிற மாகிநிற்கும், நைத்துமேகரிச்சோரிலிந்த வுப்பையிட்டு நலமாகநாள்தோறுங் கொண்டிடாயே. 682

கொண்டிட்டாலிந்தவுப்புக்கட்டை யெல்லாந்தள்ளுங் கூசாதே வாசியெல்லாம் நெட்டிட்டேறும், விண்டிட்டபுருவமையத் தமர்திறக்கும் விழியோடேமனங்கலங்க பண்ணிவிக்கும், தண்டிட்டஅமுரியிலே யிரங்காதுப்புச் சாதகமாய்ப்பச்சையுப்புத் தின்றுயானால், மண்டிட்ட சித்தியெல்லாம் பாழாய்ப்போகும் வாய்த்திருந்தகருவெல்லாம் மண்ணுப்போமே. 683

போமென்றவுப்புக்குக் காரமேற்றிப் பொலிவாகச்சுன்னமென்ன குகையிலூத, ஆமென்றபூப்போலே சுன்னமாகு மந்திடைக்குச்சாரம் விடச் செயநீராகும், வேமென்றசரக்கான வறுபத்துநாலும் வெகுளாமல்மணிபோலக் கண்விட்டாடும், சாமென்றசாவுபொய்யாம் வேதையாகும் சகஸ்திறந்தான்மாற்றுகுந் தன்னிற்பாரே. 684

பாரப்பாவுப்புநின் றுருகும்போது பரிவோடுயிடைக்கிடையாய் நாதம்போடு, காரப்பாநாகயிடை சூதம்போடு கனமானகெந்தகந்தான் ரெட்டிப்போடு, சேரப்பாயெடுத்துடனே களங்குமாகுஞ் சேர்ந்தநவலோகத்தி லன்பதுக்கொன்றி, ஓமப்பாமாற்றுறு காணுங்காணும் வெகுளாதேபணவிடைதான் தேனிலுண்ணே. 685

ண்ணவேமண்டலத்தி லொளியோமீறு முத்தமனேகால்கள்ரண்டுங் கற்றூணுகும், விண்ணவேபச்சைரச மென்றுதின்னு வெகுளாதே

பாஷாண மெல்லாந்தின்னு, கண்ணவேசபாசத்தின் ...த்தின்னு லங்காதேவாசிகொண்டு வுள்ளேபூரி. பண்ணவேகடக்கையிலுமிருக் கையிலுநீதான் பழக்கமுண்டுமூலத்தைப் பாருபாரே. 686

பார்க்கவேவுப்பென்ற களங்கந்தன்னைப் பலபலவாம்லோகத் ன்பதுக்கொன்றியக்து, ஏர்க்கவேயிதைவிற்றுச் செலவுசெய்து எ நாகஅன்னவரை தண்ணீர்கொள்ளு, கார்க்கவேயொருசேசைாசமைத் வுண்டு கனமானகற்பத்தை யுண்டுதேறு, தேர்க்கவேவுப்புருந் மூலம்பாரு தொடுகுறிபோலாறுதளம் வெளியாய்ப்போமே. 68

வெளியானவப்பிரேக சத்துகேளு விளங்குகின்றவப்ரேக முத மரந்தான், ஒளியானரத்தவர்ணம் ரண்டாம்பட்சம் முயர்ந்தமூன்று காந்தான் கிருஷ்ணவர்ணம், அளியாதவப்பிரேக நவநீதம்பண்ணி பனேகிளிபோலக் கட்டிக்கொண்டு, களியானகொள்ளிலையின் சா தன்னால் கலங்காதேநாள்மூன்றுலை யாக்கே. 68

ஆர்க்கவேவோலைபோற் சட்டியிலேவிட்டு அசையாதேகொ ளிலையின்சார்தன்னாலே, பார்க்கவேயடுப்பேற்றி எரித்துபின்புபரும ழைக்கிழங்குச்சார் மூன்றுநாள்தான், காக்கவேயறுசாம மூறப்போ டுக் கலங்காமல்வடிகட்டி யெடுத்துக்கொண்டு, நீக்கவேவாலுகை லடுப்பிலேற்றி நிதானமதாயெரித்துமெள்ளக் குளிகைவாங்கே. 68

வாங்கியேபலம்பத்து கல்வத்திற்போட்டு வகையானவெங்கார பலந்தான்பத்து, தேங்கியேகாரமைந்து கட்டுப்பூவொன்று கிறப்பா சர்க்கரைதேன் பழமும்போடு, ஓங்கியேஆதளையின் பாலைவார்த் உறுதியாங்குடோரியொரு பலமும்போட்டு, நீங்கியேமூன்றுநா நெகிழவாட்டி லேசானவடைதட்டி யுலரப்போடே. 69

உலர்ந்தபின்பு வங்கமென்றதாரத்தாலூது உத்தமனேசரவு யில் வைத்தூது, அலர்ந்தபின்புயப்பிரேகஞ் சத்தாய்விழு மாராய்ந் சத்தெல்லாம் பொறுக்கிக்கொண்டு, கலர்ந்தபின்பு காடேடுத்துக்கல்வ தாட்டி கலங்காதேமுன்போல மருந்தரைத்துக்கூட்டி, நலர்ந்தபில் வில்லைதட்டிச் சரவுலையிலூது நலமாகவப்பிரேகஞ் சத்துமாமே. 69

ஆமப்பாகடேடுத்து முன்மருந்துக்கூட்டி அரைத்துநன்று வில்லைத்தட்டி ஐந்துதரமூது, ஓமப்பாசத்தெல்லாமொன்றாய்ச்சேர்த் உத்தமனேவெண்காரஞ் சரியாய்க்கூட்டித், தாமப்பாருகையிலிட வுருக்கிநன்றாய்ச் சாய்க்கவேநல்லெண்ணெய் தேங்காய்ப்பாலும், கா

பாயிலுப்பைப்பூ நெய்யுந்தேனுங் கலந்தொன்றுமத்தித்து சாய்த்தி டாயே. 692

சாய்த்திடவேமூன்றுதரங் கன்மிசங்கள்போகுந் தங்கமதூண் டுக்கு அப்பிரேகம்நாலு, பாய்த்திடவேரண்டுமொன்று யுருக்கிக்கொ ண்டு பரிவாகமெழுகுகட்டிக் கிண்ணிவாரு, மாய்ந்திடவே சீலையது திறமாய்செய்து வாலுகைமேல்வைத்ததற்கு கூதம்பாரு, வய்த்திட வேகருமத்தஞ்சார்விட்டுகிண்ணிக் கிதமாகவைத்திடவே வெண்ணெ யாமே. 693

வெண்ணெயெல்லா வழித்துமொருமொத்தையாக்கி மேலான குளுந்ததண்ணீரிற்போட்டுத், திண்ணெய்தாயிறுகியது கல்லுப்போ லாஞ் சேர்த்தெடுத்துயாரையிலே கவசங்கட்டி, தண்ணெயாயவிர்ப்புட மாய்ப்பத்துப்போட்டு தயங்காதேமத்தங்காய்க் குள்ளேவைத்துப் போடு, விண்ணெயாய்விராலிமலைக் குள்ளேபோடு விதமானவிராலி யிலைக் குள்ளேபோடே. 694

போட்டெடுத்துச்சூடனுட தீயில்வாட்டிப் புகழாகக்கரண்டியி லெண்ணெய்க்குத்தியுருக்கி, ஆட்டெடுத்துவொன்றுக்கு நாலுதங்க மழகாகச்சூதத்திற் பாதிநாகம், நீட்டெடுத்துவுருக்கியொன்றாய் மணி யாய்வாங்கி நேரப்பாகல்வத்திற் பொடித்துநன்றாய்த், தொட்டெடுத் துச்சுத்தித்த கெந்தியானுந் தூரிசாகசூதயெடை கெந்திகூட்டே. 695

கூட்டியெல்லாம்பொற்றலையின் சாற்றாலாட்டி குறிப்பாகப்பொடி பண்ணிக்குப்பிக்கேற்றி, ஆட்டியேவாலுகையின் மேலேவைத்து யறு சாமமானபின்பு கடுந்தீப்போடு, நீட்டியேபணிரண்டு சாமமானால் நிலை த்துநிற்குபாதளம்பூ நிறத்தைப்போல, வாட்டியேநவலோகம் நூற் றுக்கொன்று மாற்றென்னபணிரண்டாம் பணவிடைதா னுண்ணே. 696

உண்ணவேமெய்டலந்தா னந்திசந்தி வுத்தமனேயுகாந்தவரை யிறுத்துந்தேகம், நண்ணவேயிருட்டறையி லிருந்தாயானால் சந்திரனோ சூரியனோ வென்பார்பாரு, கண்ணவேமேனியது கஸ்தூரிவீசுங் கம லம்போல்கால்கைரண்டு மிருதுவாகும், எண்ணவேகற்பமெல்லாம் படிபடியாயேறு மிருந்துபார்சமாகிக்கேட்ட கற்பமொன்றே. 697

நன்றானகெந்தகந்தான் பலமோபத்து உத்தமனேசுத்திபண்ணி அயச்சட்டியிட்டு, கன்றானகுமரிச்சோர் கீழ்மேலுமிட்டுக் கலறவே கொதிப்பாக நாலுசாமம், பன்றானபழச்சாறு சுருக்குப்போடு பருவ

மாய்ப்புங்கம்பால் நாலுசாமம், கன்றனதிழலுலர்த்திக் கல்வத்திட்டுக் கடுகவேபொடிபண்ணி மாக்கலிடின்சாறே. 698

சாறதினாலெண்சாமமட்டு மாட்டி தயங்குமணித்தக்காளிச் சாற்று லாட்டு, பேறதினால்மந்தாரை வெள்ளைப்பூவைப் பிசைந்தரைச்சாற் றினா லெண்சாமமாட்டு, வாறதினாற்புளிப்பான மாதளையின்பழந்தான் வகையானசாரதினா லெண்சாமமாட்டு, தேறதினாற்தாமரைப்பூச் சாற்றலாட்டிச் சிறப்பாகக்காந்தமைந்து பலந்தான்போடே. 699

போடவேவெண்காரம் பலந்தானைந்து புகழானகுடோரி யொரு பலமும்போடு, நீடவேகுன்றிமணிக் கட்டுவுப்பு நிலைக்கவொரு பலம் போட்டு ஆகளையின்பாலால், வாடவேயெண்சாம மாட்டிப்பின்பு வகை யாகவில்லைதட்டி யுலரப்போட்டு, நாடவேநல்லெண்ணெய் பலந்தா னொன்று நயமானவயச்சட்டி யுள்ளேவாரே. 700

வார்த்துமே யடுப்பேற்றி வில்லைத்தட்டி வாகானகமலம்போ லெரி நேர்ப்பாக, ஏர்த்துமேபொறுத்த பதந்தன்னில்வாங்கு யிருபுறமுந்துரு த்தியிட்டுச் சரவுலையிலூது, பேர்த்துமே மணிமணியாய்ச் சத்துவிழும் பேராகக்கட்டையெல்லாஞ் சோதித்துவாங்கி, காற்றுமே முன்போ லக் காரங்கூட்டி கலங்காதேஐந்துதர மூதிடாயே. 701

ஊதியேசத்தெல்லா மொன்றாய்ச்சேர்த்து உத்தமனே வெண்கா ரங் கூடக்கூட்டி, காதியே ஐங்குதுகையிலிட் டுருகஆட்டிக் கனமான அப்பிரேகஞ் சாய்த்தாப்போல, சாதியேசாய்க்கால வருணான்போலத் தயங்காதே சத்தாகுங் கெந்திசந்தி, வாதியேயிதைக் காணப்போற்றி மாண்பர் மாசற்றநா தாக்களாடும் ஆட்டே. 702

ஆட்டான கெந்தகத்தின் சத்துவேகம் ஆறிவார்சிவயோகி யல் லூர்காணார், நீட்டான அம்பலத்திற் சோழன்றனும் நிலைத்தநடராச ரைத்தான் வார்க்கச்சொன்னார், பூட்டான சிற்பர்கள்தான் கருக்கட்டி வார்த்தார் பின்புபின்பு போகவுமே சிற்பரேங்கிக், கூட்டான மனது நொந்து திகைக்கும்போது கொடுமூலநாயனங்கே வந்திட்டாரே. 703

வந்திட்டுசிற்பரைதான் வரவழைத்து மனக்குறைதா னென்ன சொல்லும் மைந்தாவென்ன, மெந்திட்டு விக்கிரகம் வார்க்கவார்க்க வின் னமாய்ப்போகுதெனசெய்வோமென்ன, நொந்திட்ட மனதுகண்டு திரு மூலர்தாமு நொடிக்குள்ளே வார்த்திடுநீ யென்றுசொல்லிக், கந்திட்டுக்க செடைதான் செம்பையீந்தார்கடுகவேசிர்ப்பருந்தான் வார்த்திட்டாரே

வார்த்திடவே தங்கமெல்லாஞ் செம்பாய்ப்போச்சு மனம்புண் ணாய்நிற்கு மப்போசோழன்வந்தார், ஏத்திடவே விக்கிரகம் வார்ப்பித் தாயோ எடுத்துவாநீயென்றிடவே கொடுமுன்வைத்தார், பார்த்திடவே தங்கமெல்லா மெடுத்துக்கொண்டு பரிவாகச்செம்பாலே வார்த்தா யென்று, வேர்த்திடவே ஆக்கினைதான் பண்ணச்சொன்னார் விடுபட் டார்சோழன்முன்னே நாயன்தாமே. 705

ஆமப்பாசிற்பரைதான் சொல்லவேண்டாம் அதிகமாய்ப் பொன்னு னக்குத் தாரோமென்று வேமப்பாவெள்ளியைத்தா னுருக்கச்சொல்லி விரைந்தமூவாயிரத்திற் காசெடைதான் போட்டார், தாமப்பாமாற் றதுவு மிருபதாச்சு சாதகமாய் குளிகையிட்டு மறைந்துபோனார் சேம ப்பா தவசியங்கே யென்றுகேட்கத் தேடியெங்கும் பார்த்திட்டுத் திகை திட்டாரே. 706

திகைத்திட்டு வந்துசொன்னார் சோழன்முன்னே சிவசிவா வென்றுசொல்லி வாயைப்பொத்தி, நகைத்திட்டு சிற்பருக்கு வெகுமா னஞ்செய்து நாதாக்கள்மகிமை சொல்லயெவரால்கூடும், மிகைத்திட்டு விடுதிக்குப் போனார்சோழன் வேண்டியதோர் கெந்தகத்தின் சத்து வேகம், பகைத்திட்டுச் சித்தருபங்களுக்குஞ் சொன்னேன் பாரிதுக் குள் செந்தூரஞ் செய்யக்கேளே. 707

கேளப்பாகட்டியதோர் சூதமொன்று கெடியாக வுருகையிலே சத்துவொன்று, நீளப்பா தங்கமொன்று நாகமொன்று நேராகவுருக்கி யொரு மணியாய்வாங்கி, வேளப்பா கல்வத்திற் பொடியாய்ப்பண்ணி மிளங்கினின்ற தாளகமுஞ்சிலையு மொன்றுபோட்டு, நாளப்பா பொற்றலை யின்சாற்றாலாட்டி நலமாகத் தெல்லுப்போல் வில்லைபண்ணே. 708

பண்ணியதோர் வில்லைதன்னையகலிலிட்டு பாய்ச்சியே மூடியொரு சிலைசெய்து, கண்ணியேபத்தெருவிற் புடத்தைப்போடு கண்கொள்ளா வருணன்போற் செந்தூரமாகும், கண்ணியே செந்தூர மாயிரத்துக் கொன்று நாட்டிடவேபதினாறு மாற்றுமாகும், புண்ணியமே செய்த வற்கு செந்தூரமாகும் பொல்லாத துரோகிக்கு எய்தவாறே. 709

வாறுகேள் செந்தூரங் குன்றிபுண்ணு மண்டலந்தா நந்திசந்தி, மறவாமல்நீயும் தேறுகேதேகமது செப்புத்தூணும் சிதறடித்தால் மலைகளெல்லாந் தவிடுபொடியாகும், காறுகேள்கத்தியினால் வீசினைக் கால் கவீரென்று வெங்கலத்தி னோசையாகும், நாறுகேள் நாமமெல் லாஞ்சிவந்துகாணும் நாதாக்கள் சித்தியெல்லா மிதற்குள்ளாச்சே. 710

## மயூரச் செம்பு

ஆச்சப்பாமயூரத்தின் செம்பெடுக்க அறைகிறேனுறிந்த மட்டுந்தானும், வாச்சப்பாமயிலிறகு கொண்டுவந்து வளமாகத் திரித்திரித்து நல்லெண்ணெய் தோய்த்து, நீச்சப்பா சுட்டெடுத்து கரியாய்ப்பண்ணி நிலைக்கவொரு செருபட்டு நிறுத்துக்கொண்டு, தேச்சப்பா கல்வத்தி லிதனைபோட்டுத் துரியாகக்காரமொடு பலந்தானஞ்சே. 711

அஞ்சானவெண்காரம் பலந்தானஞ்சு யாதியாங்குமோடையொடு பலமுங்கொண்டு, நஞ்சானவீரமொரு பலமுமூன்று நாயகமாம் கல்லுப்புபலமுமொன்று, பிஞ்சானகுன்றியணி யென்னுமொச்சை பேசாதேயொவ்வொன்று பலமும்போட்டுக், கஞ்சானவாதனையின் பாலை வார்த்துக் கடுகிபேதிரைமூன்றுநாள் வில்லைகட்டே. 712

கட்டியேவில்லைதன்னை நாளத்தூதிக் கட்டோடேமணிமணியாய் ரவிதனினிற்கும், ஒட்டியேதேசெம்பெல்லா மெடுத்துக்கொண்டு ஓகோகோகரடெல்லா முன்போலூது, தெட்டியேபேதாரைந்துதா மருந்திட்டுத் தெல்விப்போல்வில்லைதட்டி ஊதூதூது, வெட்டியபேதா செம்பெல்லாங்காரமிட்டு வாட்டியேகாரமுன்போல் சாய்ந்திடாமே.

சாய்த்திடவேசெம்பாலே சூதங்கட்டுஞ் சமுசயங்களொன்றுமே பாஷாணஞ்சாகு, மாய்த்திட்டஅரவமது தீண்டாதையா மகத்தா விஷங்களொன்றுங் கிட்டாதப்பா, பாய்த்திட்டசெம்போடே தங்க சேர்த்து பாங்கானகைவளைகள்பண்ணுபண்ணு,காய்த்திட்டகுண்டலி கள் விக்கிரகம்பண்ணு காட்டினுள்ளேசித்தரெல்லாந் தரிப்பார்பாரே

பாரப்பாமயூரத்தின் செம்புஒன்று பாங்கானதங்கமொன்றுநா மொன்று, சேரப்பாமூன்றுமொன்று யுருக்கிக்கொண்டு செயலா சூதத்தை யொக்கக்கூட்டி, காரப்பாகல்வத்திற் பொடியாய்ப்பண்ணி கசடற்றகெந்தகத்தைப் பாதிகூட்டி, வாரப்பாசெருப்படையின் சா றுலாட்டி வளமாகக்கல்லுபோல் வில்லைகட்டே. 71

கட்டியேயஞ்செருவிற் புடத்தைப்போட்டு கைம்முறையாய விட்டு எடுத்துப்பாரு, தட்டியேமாதளம்பூப் போலேயாகுந் த யெடுத்துயாயிரத்துக் கொன்றேபோடு, மட்டியேமாற்றென்ன ம றுகாணு மைந்தனேபனவிடைதான் பாவிலுண்ணு, எட்டியேக மது யிருப்புத்தூணை மென்னென்னகடித்தாலுஞ், செந்நாய்ப்போமே.

## அயச் செம்பு

போமென்றஅயத்திறுட செம்புகேளு புகழானரோமமதுயெள் ளெண்ணெய்தேய்த்து, ஏமென்றஅயச்சட்டிக் குள்ளேயிட்டு அப் பனைமூன்றுபத்து பலத்தைபோடு, காமென்றயரப்பொடிதான் பல மோபத்து கைம்முறையாயறைப்பொடியைப்பிசரிவைக்கத்,தேமென்ற படுப்பேற்றி ரோமத்தின்றயிலஞ் சிறப்பாகவேயுண்ணப் பிரட்டித் தீரே. 717

தீரென்றுரோமமெல்லாங் கரியாகுமட்டுஞ் செய்முறையாயரப் பொடியைப் புரட்டிவாங்கிக், காமென்றகரியோடேவைத்துக்கொண்டு நார்த்திகையின் கிழங்கதுவும் பலமும்பத்து, சேரென்றசெவ்வல்லிக் கிழங்குபத்து சேர்த்திடித்துசாறுஒரு படியும்வாங்கி, ஆரென்ற ஆதளையின்பாலைவார்த்து அழகானயெள்ளெண்ணெய் படிதான்வாரே.

வார்த்தெல்லாங்குழம்புபோல் வருதல்கண்டு வகையானவெண் காரம் பலந்தானைந்து, சேர்த்தெல்லாந்துரிசியொரு பலந்தானைந்து தேசில்லாகெந்தகந்தான் பலமுமூன்று, கோர்த்தெல்லாம்பொடியாக்கி யெண்ணையிலேபோட்டுக் கொதிப்பித்துக்குழம்பான பதத்தில்வாங் கிக், நார்த்தெல்லாம்வழித்துவொரு கல்வத்திட்டுக் கைம்முறையா யரைப்பொடியை பிசரிவையே. 719

வையப்பாரோமமென்ற கரியினோடே மயங்காதேகுகையிலிட்டு மாட்டியூது, தையப்பாமணிமணியா யிறங்கும்பாரு தணைபெடுத்து டைத்துமுன்போல் தைலத்திற்பிசரி, கையப்பாஅஞ்சுதரம் உருக் கித்திரு கசடற்றவெள்ளிபொன்போற் கண்விட்டாடு, மையப்பாகச டற்ற செம்போயாகும் வயதையிதில்முடிவுசொல்ல விண்கொள்ளாதே.

கொள்ளாத அயச்செம்பு பலந்தானாறு குறிப்பானதங்கமொன்று நாகமொன்று, விள்ளாதஈயமொன்று வுருக்கியாட்டி விரவிடுநீகல்வத் திற் பொடியாய்ப்பண்ணி, அள்ளாதசூதமது பலந்தானொன்று அசடில் லாக்கெந்தகந்தான் பலமுநாலு, துள்ளாதமல்லிகையின் சாற்றாலாட் டித் துடியாகவெண்சாமம் ரவியிற்போடே. 721

போட்டெடுத்துப்பொடியாக்கி மேருக்கேற்றிப் புகழானவாலு கையின் மேலேவைத்து, ஆட்டெடுத்துப்பணிரண்டு சாமந்தீயை ஆற விட்டுப்பார்த்தாக்கால் செந்தூரமாகும், பூட்டெடுத்துஆயிரத்துக் கொன்றுபோடு புகழாகப்பதினாறு மாற்றுகாணும், நீட்டெடுத்துமண் டலந்தான் தினங்குன்றியுண்ணு நேரானசட்டைகக்கிப் பாலையாமே.

## காந்தசத்து

ஆமென்றகாந்தமது பலந்தான்பத்து அப்பனேதுன்றிபோ லுடைத்துக்கொண்டு, காமென்றசெம்பிலிப்பால் படிதானாலு கல விட்டுசுருக்கிடுநீ நாலுசாமம், தாமென்றகல்வத்தில் செம்பிலிப்பா விட்டுத் தாக்கியரைநால்சாமம் புடைத்துப்போடு, ஆமென்றபாலாடு யரைத்தரைத்து அப்பனேஐந்துபுடம் போட்டுத்தீரே. 72

தீர்ந்தபின்புபொடியாக்கிச் சட்டியிட்டு செம்பிலியின்ரோமம பலந்தான்பத்து, ஆய்ந்தபின்புசுருக்கிட்டு ரோமந்தன்னை அப்ப தயிலத்திற்பிரட்டிபோடு, காய்ந்தபின்புரோமத்தின் றயிலமெல்லா கரியோடேவாரிவைத்து கருத்தைக்கேளு, தேய்ந்தபின்புகருங்கு றிச்சாறதுவும்படி தான் சிறப்பானகொள்ளிலைச்சார் படிதானேன்

ஒன்றானபொன்னிறை வாரையின்சாறு உயர்ந்தஆதளையின்பா படிதானென்று, நன்றானசெவ்வலிக் கிழங்குசாப்படிதான் கார்த் கையின் கிழங்குச்சார்படிதானென்று, தின்றானபுளியரணைக் கிழங்கு சாறு சிறப்பானநல்லெண்ணெய் சமனாய்க்கூட்டி, நன்றானதிப்பே றிக் கமலம்போலெரித்து நலமாகக்குழம்பான பதத்திற்பாரே. 72

பார்க்கவேகெந்தகந்தான் பலமூன்று பரிவானவெண்கா பலமுமைந்து, ஏர்க்கவேயிதைவிற்றுச் செலவுசெய்து வெளிதா வீரமது பலமுமொன்று, கார்க்கவேதுடோரியது பலமுமொன் கல்வத்திலிட்டெல்லாம் பொடியாய்ப்பண்ணிச், சேர்க்கவேமு மருந்திலொக்கப்போட்டுச் சிறப்பாகக்குழம்பான பதத்தில்வாங்கே

வாங்கியேகல்வத்தில் பிசறிக்கொண்டு வளமாகச்சரவுலையி லூ ஊது, தாங்கியேகாட்டோடு சத்தாய்வீழுந் தப்பாமல்சத்தெல்லா பொருக்கிக்கொண்டு, தேங்கியே கரடெடுத்துத் தயிலத்தில்பிசற் செப்பரியநாளத்தா லூதித்தீரு, பாங்கியேஐந்துதரமூதித்தீரு பரி போற்செம்பாக நிறமுமாச்சே.

செம்பானகாந்தமது பலந்தானாலு திறமானதங்கமது பலந் னென்று, கம்பானநாகமது பலந்தானென்று கருதியதோர்கட்டா சூதமொன்று, நம்பானயிதுநாலு மிருக்கிக்கொண்டு நலமாகக்கல் திற் பொடியாய்ப்பண்ணு, கொம்பானகுலாமல்லிச் சாற்றாலாட் கூறவேமுன்னநாள் ரவியிற்போடே.

போட்டுவாமுன்சொன்ன சூதத்திலாட்டி பெரிதானகெந் தைச்சுத்திப்போடு, கேட்டுவாபொடிபண்ணி மேறுக்கேற்றிக் மே

பானவாலுகையின் மேலேவைத்து, நாட்டுவாபனிரண்டு சாமந்தீயை நலமாகஆறவிட்டு யெடுத்துப்பாரு, காட்டுவாய்மாதளம்பழம் பூப்போலேபாகுஞ் சாத்திறத்திற்கொண்டாடும் வேதைதானே. 729

தானென்றசெந்தூரங் குன்றியுண்ணு சாதகமாய் மண்டலத்திற் சட்டைகக்கும், கோணைகாயமெல்லாஞ் சிவந்துமின்னுங் கொடிதான நாகமெல்லாம் பவளம்போலாம், பாணைவஸ்துவுண்டா லாகிரியில்லை பாஷாணவர்க்கங்கள் கறிசோறுகும், ஊனைசடந்தானுங்கோடிகாலம் உத்தமனேசமாதியிலே யிருக்கலாமே. 730

இருக்கவே லோகமென்ற திராவகத்தை யியம்பிடவே யானந்தாற்றுக்கேளு, பருக்கவே வெடியுப்பு பலந்தானூறு பரவியதோர் சீனமது எண்பத்தைந்து, சுருக்கவே துரிசியது நாற்பதாகுஞ் சுளுவான சாரமது இருபதாகும், உருக்கவே கல்லுப்புப் பலந்தான்பத்து உயர்த்தியாம்பூநீறு பலந்தானஞ்சே. 731

அஞ்சான சத்தியென்ற சாரம்காலு அழகானகெந்தியுப்பு பலந்தான்மூன்று, வஞ்சானவுருவியுப்பு பலந்தானொன்று வகையெல்லாம் பொடித்துமொரு சட்டியிட்டு, கஞ்சானகழுதையுட ரத்தம்வார்த்து கடுகைரைத்து ஏழுநாள்ரவியிற்போட்டு, துஞ்சான அடிகனத்த கலசத்திட்டு துயாறவேயடிக்கலச மட்டும்போடே. 732

போட்டதின்மேற் சக்கரமாம் பாலைச்சட்டி பொருந்தவே மேல்கவிழ்த்து மாஷைந்தன்றால், நாட்டதின்மேல் சீலைசெய்து ரவியில்வைத்து நலமாகவடுப்பேற்றி யெரிநேர்பாக, நீட்டதின்பின் மேங்காணல் கிண்ணிவைத்து நேர்ப்பாகச் சட்டியின்மேல் தண்ணீர்குத்தி, பூட்டதின்மேற் புகைபோடச் சலந்தான்வீழும் பொருந்திமுன்னீர்தனை யகற்றிப் பின்னீர்வாங்கே. 733

வாங்கியே முன்வைத்த சரக்குதன்னை வகையாக ஐந்துபங்கு பண்ணிவைத்து, தேங்கியேஒருபங்கி லிதனையூத்து சிறப்பாக முன்போலே கலசத்திட்டு, தாங்கியேயடுப்பேற்றி யெரித்துவாங்கி சாதகமாய் முன்போலே மறுசரக்கிலூற்றி, பாங்கியேயுலரவிட்டுக் கலசத்திட்டு பக்குவமாய் ஐந்துதரமிப்படியே வாங்கே. 734

வாங்கியே அரக்காலே குப்பிபண்ணி வளமாக திராவகத்தை யதிலேவாரு, தேங்கியே சூதமொரு பலந்தானெட்டு சிறப்பாக கல்வத்தி லிட்டுக்கொண்டு, வாங்கியே தினமூன்று திராவகத்தாலாட்டி

மறுபீங்கான்றன்னிலே வழித்தெடுத்து, தாக்கியே கரிபோட்டில் வறுத்துக்கொண்டு சமரசமாய்ப் பொடிபோலே மெழுக்கேற்றே. 735

ஏற்றியே வாலுகையின் மேலேவைத்து இதமாகத் தீயெரித்து பணிரண்டுசாமம், போற்றியேயாறவிட்டு யெடுத்துக்கொட்டி புகழு கத் திராவகத்தி லரைத்துலர்த்தி, தூற்றியே கொடிபோலே குப்பிக் கிட்டுச் சுகமானவாலுகையின் மேலேவைத்து, பாற்றியே பணிரண்டு சாமந்தானும் பக்குவமாய்த்தீயெரித்து ஆறவிட்டுவாங்கே. 736

வாங்கியெல்லா முன்போல வரைத்தெடுத்து வரிசையாயைந்து முறைதீர்த்தபேறு, தாங்கியேசெந்தூர மருணன்போலத் தலத்திலே யிருக்குமப்பா யிதனின்வகை, ஓங்கியேகொடிக்கு ஒன்றுகூடும், உத் தமனேகதலியுட பழத்தைவாங்கி, தேக்கியேபணவிடைதா னுள்ளே கொள்ளச் சிவசிவாசூரியன்போல் தேகமாச்சே. 737

ஆச்சப்பாதிராவகத்தி லனந்தம்விந்தை ஆராய்ந்து ஒவ்வொன் றாய்ப் பார்த்துத்தேறு, வச்சப்பாகட்டினபோ உருக்கினபோ கொடி யெடுத்தோடுங் குளிகைமுதல் செந்தூரங்கோடி, வாச்சப்பா நன்ன முதற்களங்குகோடி வழங்கிபதோர் குருக்கோடி மெழுகுகோடி, பாச் சப்பா ஒவ்வொன்றில் வேதைகோடி பரிசிக்கத்தாம முதமெட்டு லெட்டுமாமே. 738

## தூரிசி திராவகம்

ஆமென்றதுரிசியுட திராவகத்தைச் சொல்லுவன் அப்பனே துரிசியொரு பலந்தானாறு, காமென்றவெடியுப்பு பலந்தானாறு கலங் காதசீனமது பலந்தானாறு, வேமென்றநவுட்டுப்பு பலமுமைந்து வெகுளாலே வளயலுப்பு பலமுமைந்து, காமென்ற கெந்தியுப்பு பலமு மைந்து தங்காதேயிந்துப்பு பலமுமைந்தே. 739

அஞ்சோடுசத்தியென் றகாரம்பத்து அப்பனேகல்லுப்பு பலமும் பத்து, நஞ்சோடுவீரமது பலமுமூன்று நவாச்சாரமும் பத்துபலமும் போடு, பிஞ்சோடுகருவங்க பலமுமூன்று பேசாதவானையுப்பு உருவி யுப்பு, பஞ்சோடுமணியுப்பு மேனியுப்பு பதறாதே ஒவ்வொன்று பல மும்போடே. 740

போட்டெல்லாம் பரங்கியுட சாரயம் வார்த்துப் பொருந்தவே மூன்றுநாளாட்டிஆட்டி, ஆட்டெல்லாம் ரவிதனிலிட்டு ஐந்துபங்கு பண் ணி அப்பனேஒருபங்கு கலசத்திலிட்டு, பூட்டெல்லாம் பாலையென்ற

சட்டிமூடிப் புகமூாகமாஷத்தால் சீலைசெய்து, மூட்டெல்லா மடுப் பேற்றி பீங்கான்வைத்து முயற்சியாய்த் திராவகத்தை வாங்கிடாயே.

வாங்கிட்ட திராவகத்தை மறுசரக்கிலூற்றி வளமாகரவியிலிட்டு கலசத்திற்போட்டு, தேங்கிட்டதிராவகத்தை வாங்கித்தீரு சிறப்பாக வைந்துதா மிப்படியேவாங்கு, பாங்கிட்ட அரக்காலே குப்பிப்பண் ணிப் பதனமாய்மூடிவைத்து பாங்கைக்கேளு, தேங்கிட்டபாறையுப்பு பலமீரேழு சிறப்பாகத் திராவகத்தில் தோய்த்திடாயே. 742

தோய்த்துமேதினமேழு ரவியிற்போடு தொன்மையாம் வெடி யுப்புச்சீனங்காரங், காய்த்துமே கடல்நுரையுங் குடணிந்து கலங்காத நீரிற்காரம்வீரம், தேய்த்துமே நவாச்சாரந்துரிசு வெள்ளை சிறப்பா கப் பதினொன்று திராவகத்திலாட்டி, ஏய்த்துமே வில்லைகட்டு யுலரப் போடு இதமாக அகலிலிட்டு அவிர்ப்புடமாய்ப் போடே. 743

புடம்போடு அரைத்தரைத்து ஐந்துதாந்தானும் புகமூாக யெரு வெடுத்து பத்துமட்டும், இடம்போடு திராவகத்தில் பலந்தானேழு சிறப்பாகப்புடம்போட மருந்தைத்தானும், கடம்போடு குழம்பாகக் கரைத்துக்கொண்டு கல்லுப்பில் பிசறியல்லோ கரியோட்டில்வாட்டு, நடம்போடு குழம்பெல்லாந் தோய்த்து வாட்டுவாட்டே. 744

வாட்டியேகவிசிக்கு மருந்துகேளு வகையாகயேறவென்ற கிளிஞ் சில்தன்னை, காட்டியே சுண்ணாம்புஞ் சவுட்டுமண்ணுங் கலங்காதே தண்ணீரிற் கலக்கிக்கொண்டு, ஓட்டியேதீயெரித்து வற்றுமட்டும் உத் தமனே புடம்போட்டுத் தூளாய்ப்பண்ணி, நாட்டதியே திராவகத்தா லரைத்தரைத்து நலமாகஐந்துபுடம் போட்டுத்தீரே. 745

தீரவேபுடம்போட்ட மருந்துதன்னை திராவகத்தா லரைத்துருட் டிமெழுகுபோல, ஆறவேமுன்னுப்பில் கவசங்கட்டி அசையாதே கல சத்திற்பூநீறுவைத்து, ஊரவேயதின்மேலே உப்பைவைத்து உத்த மனேமேலுமந்த பூநீறுபோட்டு, தேறவேசில்லிட்டுச் சீலைசெய்து தீர் க்கமாய்க் கெஜபுடமாய்ப் போட்டுவாங்கே. 746

வாங்கியேயுப்பு பண்ணிப்பார்த்தால் மக்காள் வயிரம்போ லிருகி யது தங்கம்போலாம், ஓங்கியேகரியில்வைத்து உருக்கிப்பாரு உத்த மனே தங்கம்போல் கண்விட்டாடும், தேங்கியேகரியில்நின்று கம்பித் தானல் சிறப்பாகமுன்போலப் புடத்தைப்போடு, ஏங்கியே ஒருவரு டன் பேசவேண்டா மேத்தியேகடுங்காரச் சுன்னத்திலூதே. 747

ரி கடுரவியிற்போட்டிடவே குருவுமாகும், வாமிந்த துரிசியினால் சூதங் கட்டும் மகத்தானலிங்கமது ஒருபலந்தான். 753

ஒருபலந்தான்கட்டியாய் வாங்கிக்கொண்டு உத்தமனேஅயச்சட் டிக் குள்ளேவைத்து, கருபலந்தான்சுருக்கிடவே மெழுகாய்ப்போகும் கூட்சாதிவேதைகள் கோடியுண்டு, கருபலந்தான்ரவிமதியுஞ் சேர்த்து கண்காணுமாற்றதுவு மதிகங்காணும், நிருபலமாய்நவலோக நூற்றி கீய நிச்சயமாய்மாற்றென்ன பணிரண்டாமே. 754

## மகாதிராவகம்

ஆமப்பா திராவகத்தைச் சொல்வேனப்பா அப்பனேஎருக்கோடு துப்பைமேனி, போமப்பா நாழையொடு அறுகுவாழை பேரானமத் தையொடு ஆத்திகள்ளி, நாமப்பாதென்னியையும் நாயுருவிநாணல் தயங்காதபிரண்டையொடு முடக்கொத்தானும், சாமப்பாபுரசோடு முள்ளங்கித்தினைப்புல் தயங்காதேகாயவைத்துச் சாம்பலாக்கே. 755

காயவைத்துச்சுட்டுமே சாம்பலாக்கிக் கலங்காதேவெவ்வேறாய் தண்ணீர்கரைத்துத், தேதாயவைத்துமூன்றுநாள் தெளிவைவாங்கிச் சுகமாகவடிப்பெரித்து உப்பாய்க்காய்ச்சி, மேயவைத்துஒவ்வொன்றாய்க் காய்ச்சிவெவ்வேற் கெகிழாமலோவ்வொன்று பலமூந்தூக்கிச், சாய வைத்துமாணிரெஞுடுஆடியானை தயங்காதஒட்டையொடுகழுதைதானே.

தானென்றகுதிரையொடு மாடுயேழுந் தனித்தனியேநீர்வாங்கி உரைப்பாய்க்காய்ச்சி, வானென்றரண்டுபலந் தூக்கிக்கொண்டு வள மானமுசல்புழுக்கை யெலிப்புழுக்கை, தேனென்றவவ்வாலின் புழுக் கையோடு சிறப்பாகயிவைமூன்றுஞ் சுட்டசாம்பல், கானென்றரண்டு பலம் கடல்நீர்தன்னில் கரைத்திறுத்தெளிவிறுத்து உப்பாய்க்காச்சே.

காய்ச்சியதுபலம்பத்து நிறுத்துக்கொண்டு கடிதானவீரமது பலமுமூன்று, காய்ச்சியேதாளகமும் பலமுமூன்று தயங்காதசிலையது வும் பலமுமூன்று, பாச்சியேவெள்ளையது பலமுமூன்று பரிவானகெந் தகமும் பலமுமூன்று, வாச்சியேதுத்தமது பலமுமூன்று மகத்தான பேதியது பலந்தானுறே. 758

ஆறுகச்சாரமது பலந்தானாறு அடைவானகல்லுப்பு பலந்தா னாறு, ஏறுகாயிந்துப்பு பலந்தானாறு எளிதானவளகிலுப்பு பலந்தானாறு, பேராகவெண்காரம் பலந்தானாறு பெலத்துநின்ற சத்தியென்ற சாரமாறு, நீறுகப்பூநீறு பலந்தானாறு நிலைத்தகெந்திவுப்பதுவும் பலந் தானெட்டே. 759

எட்டாதகடல்நுரைதான் பலமூமெட்டு இயல்பானதுரிசியது பலந்தானெட்டு, காட்டாதவெடியுப்பு பலந்தானாறு கலங்காதசின மது பலமூம்நீறு, கெட்டாதபரங்கியுட சாராய்மார்த்து சிறப்பாக யேழுநா ளரைத்துலர்த்து, பட்டாதஜந்துபங்கு பண்ணிவைத்து பக்குவமாயொருபங்கு கலயத்தூட்டே. 760

ஊட்டியேமேற்சட்டி கவிழ்த்துமூடி உத்தமனேமாமிஷத் தாற் சீலைசெய்து, நீட்டியேஅடுப்பேற்றி யெரிபோர்பாக நிலைத்தவுப்பு கையோடே சலந்தான்வீழும், காட்டியேபுகைநின்றுய் திராவகமும் நிற்குங் கலங்காதேமுன்வைத்த சரக்கில்வார்த்துச், சூட்டியேயாவி யில்வைத்துக் கல்வத்திட்டு, துடியாகத்திநீரை வாங்குவாங்கே. 761

வாங்குமேஜந்துதர மூட்டியூட்டி மறவாதேஅரக்கான குப்பி யிலேவாரு, தேங்குமேமணற்கல்லு ரோமமத்தி சிறப்பானநவலோக மெல்லாஞ்சாம்பல், எங்குமேமுகத்திலந்த தூபம்பட்டால் ஏனிதிலே கண்களெல்லாங் கரைந்துபோகும், பாங்குடனேதூபமுகம் பார்த்து நின்று பதறுதேவிறகைமெள்ள அடுப்பிற்போடே. 762

போட்டிடுதூரத்தே நின்றுகொள்ளு புகைமேலேபட்டுதென் றால் சடம்விரிந்துபோகும், வாட்டிட்டுசரக்குகளிற் றேய்ந்துப்போட மகத்தானமெழுகாகும் வேறேதயாகும், நீட்டிட்டுயேறலென்ற நிளிஞ் சில்தன்னை நீரோடேயுவர்மண்ணுங் கண்ணிலேபோட்டு, காட்டிட்டு அடுப்பேற்றி யெரித்துவாங்கி கனபுடமாய்ப்போட்டெடுத்துத் தூளா ய் பண்ணே. 763

பண்ணியேதிராவகத்தி லிதனைப்போட்டு பதுமேலேமூன்றுதரங் கழிந்தபின்னே, நண்ணியேகல்வத்தி லரைத்தூட்டி நலமாகஅகவி விட்டு புடத்தைப்போடு, கண்ணியேயைந்துதரந் திராவகத்திலரைத் துக் கடுகியேபுடமைந்து போட்டுத்தீரு, திண்ணியேபொடியாக்கிப் பீங்கானில்வைத்துச் சிற்பரம்போல்சாரமொரு கட்டிவாங்கே. 764

## சாரக்கட்டு சுன்னம்

வாங்கியொருகலசத்திற் பொடிக்கீழிட்டு வாகானசாரமென்ற கட்டிவைத்து, தேங்கியேமேலுமிந்தப் பொடியைப்போட்டுச் சிறப் பாகமேல்மூடி சீலைசெய்து, தாங்கியேஐந்தெருவில் புடத்தைப்போட் டயங்காதேஆறவிட் டெடுத்துக்கொண்டு, ஓங்கியேபொடியெல்லாம் பொடித்துக்கொண்டு உத்தமனேமுன்போலக் கட்டிவையே. 765

கட்டிவைத்துமுன்போலப் புடத்தைப்போடு காணப்பாயேழு புடம் போட்டுத்தீரு, அட்டிவைத்ததந்தம்போ விருக்கும்பாரு ஆச்சரியசாரத்தின்முடிவு சொல்லப்போகா, முட்டிவைத்துச்சாரத்தில் செயநீர்கோடி மூதண்டகுருக்கோடி செந்தூரங்கோடி, பொட்டிவைத்துத்திறந்ததுபோல் வாதமாச்சு போக்கிதிலேமெத்தவுண்டு புகட்டியாட்டே. 766

ஆடவேசாரத்தைக் கட்டியாக அதின்மேலேசவ்வீர பூரம் போட்டு, நீடவேபுழுகோடு சூதமைந்தும் நேரானவாய்நீரா லரைத்துப்பூசிக், கூடவேசுண்ணாம்புக் குகையிலிட்டு கூசாதேகரியோட்டி யூதிவாங்கி, சூடவேநீராகும் பிங்காணில்வைத்துத் துடியாகப்பனியில்வைக்கச் செயனீராமே. 767

ஆமின்னஞ்செயநீரால் சொல்லக்கேளு ஆச்சரியஞ்சூதவித்தை கல்வத்திட்டு, வெமுன்னஞ்செயநீரா லரைத்தரைத்து வெகுளாதே ரவிதனிலே காயப்போடு, நாமின்னமிருபதுநா ளரைத்தரைத்துச் சார்பாகரவிதனிலே காயப்போடு, சேமின்னமேழுசட்டை நீக்கிப் போடு சேர்ந்திருக்கும்சகநாளுஞ் செய்திகேளே. 768

சேதிகேள்தெங்காயின் குடுக்கையிலேவார்த்துச் சிறப்பாகமெழு கடைத்து வைத்துக்கொண்டு, வாதிகேள்ரவிமதியில் தகடுவாங்கி வளமானரசந்தடவிப்புடத்தைப்போட்டு, பாதிகேள்பதினாறுமாற்றுமாகும் பாசத்தில் வேதையுமாம் பாருபாரு, சோதிகேளிந்தரசந் தின்றால் காயஞ் சுறுக்காகச்சட்டைகக்கி வாலையாமே. 769

## கெந்தகத் தயிலம்

ஆமின்னங்கெந்தகத்தின் தயிலஞ்சொல்வேன் அப்பனே கெந்தகந்தான் பலமும்பத்து, காமின்னங்கற்றாழைக் குள்ளேவைத்து கடு ஆவினெய்பாலிற் சுத்திபண்ணி, தெமின்னங்கல்வத்தி லிதனைப்போட்டுச் சிறப்பானகுருகத்தி விரையைவாங்கி, ஓமின்ன மயிற்கொன்றை விரையினாடே உற்பனமாய்ச்சமனுக்கி வெங்காய்ச்சாறே. 770

சாற்றினாலரைத்தரைத்து வில்லைகட்டி சார்வாகப் பூப்புடத்தில் தயிலம்வாங்கு, தேற்றினால்தயிலம்விட்டுக் கெந்தகத்தை சிறப்பாக இருபதுநா ளாட்டிஆட்டி, பேற்றினால்துரிசிவெள்ளை பலந்தானொன்று பேராகக்கட்டியதோர் சாரமொன்று, காற்றினால்கட்டியதோர் உப்பு வொன்று கலங்காதேகூடவிட்டு மூன்றுநாளாட்டே. 771

ஆட்டியபின்காசியென்ற மேருவிலேபோட்டு அப்பனே மூக்கின் வாய்க்கதம்பைவைத்து, மூட்டியபின்கும்பித்துச் சட்டியிலேபோட்டு மூக்கின்வாய்ப்பிரம்பைவிட்டு மண்ணைக்கொட்டி, தீட்டியபின் அடுப் பேற்றி யடுப்புக்குள்ளே சிறப்பாகப்பீங்கானும் பரணிவைத்து, ஓட் டியபின்கட்டியிலே எருவைப்போட்டு உத்தமனே தயிலமெல்லா மெடு த்துவையே. 772

தயிலமெல்லாம்வீழ்வதற்கு மூன்றுபுடம்போடத் தங்கமிறங் கிப்போம் பீங்கானுள்ளே, அகிலமெல்லாமீந்தாலுந் தயிலமில்லைக்கொவ் வா தாச்சரியம் பரியேலேபூசிக்காய்ச்ச, மயிலமெல்லாந்தங்கமதுசெம் பேயாகும் மாசற்றசெம்பொன்னு நவலோகங்கோடி, கயிலமெல்லா முன்கையிலேசெம்பையீயக் கண்கொள்ளாவேதையுமாங் கண்டுபாரே.

## கேசரத்தின் தயிலம்

பாரப்பாகேசரத்தின் தயிலஞ்சொல்வேன் பரிவானகேசரந்தான் பலந்தானாறு, சேரப்பாயிளவயது ரோமந்தன்னை சியக்காய்கொதியிட் டுக் கழுவிப்போட்டு, சாரப்பாபெள்ளுபோல் நறுக்கிக்கொண்டு சாகாம லெண்ணெய் தன்னில்தோய்த்து, சிரப்பாசட்டியிலே வறுத்துக் கொ ண்டு சிறப்பாககலுவத்தி விதனைப்போடே. 774

போடவேகெந்தகந்தான் பலமும்பத்து புகழானதாளகமும்பலமு மைந்து, நாடவேசிலையதுவும் பலமுமூன்று நஞ்சானவீரமது பலமும் ரண்டு, கூடவேகட்டியதோர் சாரமொன்று குறிப்பாகக் கட்டியதோர் கல்லுப்பொன்று, தேடவேநரிசுருரு பலந்தானொன்று சிறப்பாகக் கூடவிட்டுத் திறமாயாட்டே. 775

ஆட்டுவதுயெருக்கம்பால்நாலுசாமம் அப்பனேமெழுகாகும்பதத் தில்வாங்கி, பூட்டுவதுநெல்லுப்போல் வில்லைகட்டி பேரான பூப்புடத் தில் தயிலம்வாங்கி, நாட்டுவதுபரணியிலே படைத்துவைத்து நலமாக அரப்பொடிதான்பலமுமெட்டு, மூட்டுவதுதயிலத்திற் பிசறிக்கொண்டு முயற்சியாயக்காரமிட்டு வுருக்கிடாயே. 776

## அயச் செம்பு

உருக்கிடவேயைந்துதாரந் தயிலத்தில்பிசறி உத்தமனே ரவிபோ லே செம்புமாகும், சொருக்கிடவேமதிதனிலே வைம்பதுக்கு ஒன்று துடியாகமாற்றேறுகாணுங்காணும், அருக்கிடவேதங்கமிட்டு வுருக்கி கொண்டு ஆருயென்றகூதமிட்டுக் கெந்தியிட்டு, பருக்கிடவேவாலுவை யில் செந்தூரித்தால் பதினைமாற்றாக விளங்கும்பாரே. 777

பாரின்னநந்தாளகத்தின் செம்புசொல்வேன் பருகல்லுஞ் சுண்ணாம்பு சுட்டுக்கொண்டு, காரின்னம்தாளகத்தைக் கிளிபோற்கட்டுக் கச்சுண்ணங் கீழ்மேலும்மூடிநன்றாய், வாரின்னம்வெந்நீரைவிட்டுநீற்று மறவாதேயிருபத்து வென்றுநீயும், சேரின்னங்கூழ்பாண்டங் காடியிலேபோட்டுத் திறமாகக்கொதிக்கவிட்டு யிறக்கிடாயே. 778

## தாளகம்

இறக்கியேகல்வத்திற்சேரைபோட்டு இதமானகுலாமல்விச்சாற்றாலாட்டி, அறக்கியேயுலரவிட்டுமைந்துநாளாட்டி ஆடுதின்னாப்பாளைசார் நாலுசாமம், மறுக்கியேசிறுகுட்டித் தக்காளிச்சாறு மைந்தனே யமுரிமிலைச் சாற்றாலாட்டு, நறுக்கியேயெருக்கினுட பழுப்புச்சாறு நலமான வகத்தியுட பழுப்புச்சாறே. 779

பழுப்பானகெருடனுட கிழங்குசாறு பரிவான யெருக்கினுட கிழங்குச்சாறு, கொழுப்பானவெள்ளாட்டு ரத்தத்தோடு கூரானமுசல் ரத்தம் கோழிரத்தம், கொழுப்பானவெள்ளை மந்தாரைபூச்சாறு திறமானயிந்திரமாங் கோபப்பூச்சு, நழுப்பானபூநாகம் நூறுபோட்டு நல்கரைத்து ஒவ்வொருநா ளுலரப்போடே. 780

உலர்ந்தபின்புதுரிசிபலம் நாலுபோடு உத்தமனே வெண்காரம் பலந்தான்மூன்று, அலர்ந்தபின்பு வெடியுப்பு பலந்தானிரண்டு அப்பனேவீரமது பலந்தானொன்று, கலந்தபின்புசீனமது பலந்தான்போடு கற்பூரசிலாசத்துப் பலந்தானிரண்டு, குலந்தனக்குக்கோடாவிகுடோரியொன்று கூசாதேகூடவிட்டு அரைத்திடாயே. 781

அரைத்திட்டேவெயெலியாலம் பாலாலாட்டி அப்பனே மூன்றுநாள் அரைத்தப்பின்பு, நிரைத்திடவேநெல்லுப்போல் வில்லைகட்டி நேராக சாவலைபிலூதுலூது, துரைத்திடவேயுருகியது சத்தாய்வீழுஞ் சிதறுமலெடுத்தெல்லாங் கட்டைதானும், புரைத்திடவே பின்பொருகாலுருக்கிப்பாரு பொன்போலாஞ்சத்தெல்லா மெடுத்துக்கொள்ளே.

கொள்ளவேகுகையில்வைத்துக்காரமிட்டுக் கூசாதேவுருக்கியெல்லா மணியாய்வாங்கே, விள்ளவேநவலோகம் நூற்றுக்கொன்று மேவியகாசெடைதான் சத்தையீய, துள்ளவேபதினாறு மாற்றுமாகுந் துடியானசத்திலே கிண்ணிவார்த்து, அள்ளவே சிலைசெய்து வாலுகையில் வைத்து அதியான்கூதமிட்டுக் கொதிக்கவையே. 783.

கொதிக்கையிலே கருமத்தஞ்சாறுவாறு கூசாதேவெண்ணெயைப் போலாகுமட்டும், விதிக்கையிலேவெண்ணெயெல்லாம் வழித்துக்கொண்டு மேலானகுளிர்ந்ததண்ணீற்தன்னிற்போட்டு,மதிக்கையிலே ஆரையிலைக் கவசங்கட்டி வகையாகயீரஞ்சுபுடத்தைப்போடு, துதிக்கையிலே மணியாலேசிவத்தைதப்பண்ணுசெனனமென்றமுகிவேமோசுந்தானே.

தானென்றமணியாலே செந்தூரம்பண்ணு சமர்த்தாகக் குழி பண்ணு களங்குபண்ணு, வானென்றவெளிகடக்காசித்திபண்ணு மாசற்றயோகசித்தி கெவுனசித்திபண்ணு, தேனென்ன வழுர்தமங்கே சித்திபண்ணு செகசால வார்த்தையெல்லாஞ் சகம்போ லெண்ணு, கோனென்றகுருதேடி கூப்பிட்டாலேனென்பா ளாயிதானே. 785

## சாதிலிங்கவைப்பு

தானென்றசாதிலிங்க வைப்புக்கேளு சாற்றறியசூதமது பலந்தானூறு, தேனென்றகெந்தகந்தா னிருபத்தைந்து நேர்ப்பாககெந்தகத்தைதஓட்டிவிட்டு, வானென்றகணவில்வைத்து உருக்கிக்கொண்டு வரிசையாய்ச் சூதத்தையதிலேபோட்டு, கானென்றஅயத்துடுப்பால் கிண்டிக்கிண்டுக் கறுப்பாகத்தூள்போலே யாகும்பாரே. 786

ஆகுமப்பாகெந்தகத்தில் நாலத்தொன்று அரைசபாரேநவெப்பு பொடித்துப்போடு, வாகுமப்பாசெம்பாலே குடம்போலான வகையாகஅதற்குள்ளே தூளைப்போடு, ஏகுமப்பாஅரைவாசி மட்டும்போடு எழிலானவாலுகையின் மேலேவைத்து, போகுமப்பா தீயெரிப்பா யெட்டுநாள்தான் புகழாகப்பதங்கித்து லிங்கமாமே. 787

ஆமப்பாபதங்கித்துப் பவளம்போலே அரையாதுமேல்நின்றததுதான்லிங்கம், போமப்பாபாண்டமது செம்புந்தொட்டி புகழான அடியில்நின்றால் தீமுறுகலாச்சு, காமப்பாநடுவில்நின்றால் கார்முகிலு மாச்சு கடுகியிதைமெழுகுசெய்யில் வேதையாகும், சேமப்பாபாஷாண முப்பத்திரண்டு சிறப்பானவைப்புக்கு நாலுமாச்சே. 788

வைப்பானநாகமென்ற பாஷாணத்தை வகையாகச்சொல்லுகிறேன் வேதையாக, மெய்ப்பானநாகமது பலந்தான்பத்து விரவியே யிலுப்பை நெய்யிற்சுத்திபண்ணி, நைப்பானதகடுகெட்டிப் புளியிலே போல்நறுக்கி நயமானகூத்தனென்ற யிலையரைத்து, கைப்பானதகட்டுக்கு கவசங்கட்டி கடுகியைந்துவெருளிலே புடந்தைபோடே 789

போட்டபின்புயீரைந்து புடந்தானப்பா புகழான அயச்சட்டித் தனிலுருக்கி, நீட்டபின்புகுமரிவேர் பொடியாய்நறுக்கி நிறவாககூட

விட்டு அயத்தால்கிண்டு, மூட்டபின்புபனிரண்டு சாமந்தானு முத்த மனேவேர்போட்டுக் கிண்டக்கிண்ட, மாட்டபின்பு மஞ்சள்நிறம்பற்ப மாகு மைந்தனேயிதைநிறுத்திக் கல்வத்திற்போடே. 790

போடவேநாகமென்ற தூள்தான்பத்து புகழானசூதமது பலந் தான்பத்து, நீடவேதுரிசியது பலந்தானைந்து நேர்பானசூடனது பலமுமைந்து. வாடவேவெண்சாரம் பலந்தானைந்து வரிசையாய்க் கெந்தியது பலமுமைந்து, தேடவேவெள்ளையது பலமுமூன்று சிறப் பானவீரமது பலமுமூனே. 791

## தீமுறுகல் பாஷாணம், கார்முகில் பாஷாணம்

மூனோடுதாளகமும் பலமுமூன்று முயற்சியாஞ்சிலையதுவும் பலமுமூன்று, தூனோடுமிதுவெல்லாங் கல்வத்திட்டு துடியாமல் பொடிபண்ணி சூட்சங்கேளு, நாளுக்குமட்டிமாதளம் பூசாற்றில் கரைத்து யெட்டுநாள்ரவியில்வைத்து, பூனோடுபொடிபண்ணிக் குப்பிக் கேற்றி புகழாகவாலுகையில் வைத்திடாயே. 792

வைத்திட்டுதீயெரிப்பாய்ப் பனிரண்டுசாமம்வாகானகமலம்போல் தீயைமூட்டு, கைத்திட்டுஆறவிட்டு மூன்றுநாள்போடு சாதகமா யாறிய பின்னுடைத்துப்பாரு, மொய்த்திட்டுமேலேறிப் பதங்கிப்போகு மூர்க் கமாம்பாஷாணம் இந்திரனும், கைத்திட்டவிலாபக்கஞ் சோரமென்ற நாமங் காணப்பா அடியில்நின்றால் நாகமாமே. 793

ஆமென்றபாஷாண மூன்றுதானும் அன்றெரித்தார்மன்மதனை சென்றானும், ஓமென்றநெற்றிக்கண் சுவாலைக்கொக்கும் உத்தமனே சரக்குக் காலகாலன், போமென்றவெகுதீரன் யெட்டியோடும் போன பின்புகற்பகமாம் விருக்ஷமப்பா, வேமென்றகாலனுண்ட கற்பமப்பா விரைந்துண்ணக்காயசித்தி மண்டலத்தில்தானே. 794

சித்தியாஞ்சூதமென்ற பாஷாணவைப்பு செப்பரிதுசித்தருடநூலி லில்லை. பத்தியாம்பாஷாண பணந்தானென்பார் பரியாசபேச்சாச்சு வாதப்பேச்சு, முத்தியாஞ்சூதமென்ற பாஷாணத்தை முன்னூற்றுக் கொன்றிடவே பத்தும்பத்தும், வெத்தியாம்பாஷாணம் பச்சைதன் னில் வேதைவெகுநூலையாராய்ந்து சொன்னேன்காணே. 795

## இந்திரகோபம் பூத பாஷாணம்

காணப்பாயென்னூலி லொன்றுதப்பில் கடைகெட்டபோக ரென்று சொல்லிக்காட்டு, பூணப்பாகைதப்பில் போக்குதப்பும் புத்தி

யுண்டாய்ச்செய்திடிலோ வென்றும்பொய்யா, வீணப்பாஒருதரந்தா தப்பிற்ருனல் மீளவதைமூன்று தரமறைத்துப்பாரு, அணப்பாதுரும் பான வாறுபோலச் சொல்முறைமையமறவாதே சூட்டிப்பாரே. 796

சூட்டியதோரென்னூலில் பாஷாணங்கள் சுளுக்காகும்வேதைக்கு பச்சைதன்னில், பூட்டியதோர்பூட்டென்ன பாஷாணத்தில் பிரித்திதற் குள்வேதையென்று சொன்னேனில்லை, காட்டியதோடடித்துறையில் புண்தனக்குக் கண்மறையச்சிலையினுல் மூடினபோல், மூட்டென்ன விதுதான்மைந்தா முட்டாளேயிம்மட்டு மறிந்துஆடே. 797

ஆடவேசூதமது பலந்தான்பத்து அந்திடைக்குவெள்ளையென்ற பாஷாணந்தான், நீடவேகெந்தியது பலமுமைந்து நிலையானவெடியுப்பு பலமுமூன்று, வாடவேதுரிசியது பலமுமூன்று மகத்தானதாளகமும் பலமும்ரண்டு, மூடவேசிலையதுவும் பலமுமொன்று முபற்சியாய்க் கல்வத்திற் பொடியாய்ப்பண்ணே. 798

பொடிபண்ணித் தவசியென்ற முருங்கைச்சாற்றில் போக் கோடேயேழுநா ளரைத்துமைபோல், முடிபண்ணிரவியிலிட்டு மேருக் கேற்றி முபற்சியாய் வாலுகையின் மேலேவைத்து, அடிபண்ணி தீ யெரிப்பாய் பனிரண்டுசாமம் ஆறவிட்டுராமாறு மகலிற்போடு, கெடிப் பண்ணி பனிரண்டுசாமமானுல் கெடியாகக் குப்பியைத்தா னுடைத் துப்பாரே. 799

உடைத்திடவே மேலோடி பசுங்கித்துநின்ருல் உத்தமனே சூத மென்ற பாஷாணமாச்சு, அடைத்திடவே யடியில்நின்ற பாஷாணந் தான் அப்பனேநீலமென்ற பேருமாச்சு, குடைத்திடவே யடியிலநன ருல் காகபாஷாணங் கூறிதுக்குள் கரைகண்டு சொல்லப்போகா, நடை த்திடவே சிவகாமி சொல்லக்கேட்டு நாதாக்கள் பதமறியச் சொன் னேன்பாரே. 800

சொன்னதொரு சாத்திர பலங்களெல்லாஞ் சொற்பெரிய மணித் தாய்க்குக் குருவுமாச்சு, பன்னதொரு மனதிலுள்ள கருவையெல் லாம் பாடினேன் வெட்டவெளி யாகத்தானும், மன்னரொரு நாதாக் கள் நூலைப்பார்த்து மவுனமாய் வைத்ததெல்லாம் வெளியிற்போட் டார், இன்னதொரு சாஸ்திரத்துக் குள்வைத்து இழுக்காகும் நூல் களையே வெளிவைத்தாரே. 801

வைத்ததொரு சாஸ்திரத்தில் வழலைதன்னை வகையாகச் சொல் லாமல் கருமறைத்துப்போட்டார், மெய்த்ததொரு வீரமென்றப் போக்

சூதன்னை வெளியாகச் சொல்லாமல் சூத்திரமாய்ச் சொன்னார் தைத்தவொரு சரக்கான வைப்புதன்னை நலமாக ஒளித்துவிட்டார் வாதமெங்கே செய்வார், பைத்தவொரு வாதத்திலாதியென்ன பாங் கானவழலையொரு வீரந்தானே. 802

தானென்றவழலையது சுன்னமானால் சரக்கெல்லாங்கட்டுண்டு சுன்னமாகும், வேனென்ற மகாவீரம் வாச்சுதென்றால் வேதையென்ற சொல்லுக்கு உறுதியாகும், கானென்ற கல்லுப்பு கரியில்நீற்று கச மானசரக்கெல்லா மூறல்போகும், வேனென்ற மகாவீரம் வாய்க்கா விட்டால் வேதையென்ற சொல்லெல்லாம் விழலாய்போமே. 803

## குங்கும பாஷாணம்

போமென்றகுங்குமப் பாஷாணவைப்பு காட்டுகிறேன் புத்தியில் லாப் புல்லருக்குங்காண, வாமென்ன சூதமது பாஷாணம்பத்து அழ கான குதிரைப்பல் பாஷாணம்பத்து, வேனென்ற வெண்கார பொறி பலந்தான்பத்து வெளுப்பானசீனத்தின் பொரிதானைந்து, காமென்ற அன்னத்தின் பேதிபலமைந்து கடிதானகெந்தகமும் பலமுமைந்தே.

பலமானதாளகந்தான் சிலையுமானால் பாங்காகநிறுத்தல்லோ கல் வத்திட்டு, குலமாகுமெனுமிச்சம் பழச்சாறுவிட்டு குமட்டியரைத் தேழுநாள் ரவியிற்போட்டு, தலமாகுங்காசியென்ற மேருக்கேற்றி தளறுமல்வாலுகையின் மேலேவைத்து, நிலமாகும்பனிரண்டு சாமந் தீமூட்டி நிசமாகும்பதம்பார்த்து ஆறப்போடே. 805

ஆறவிட்டுஉடைத்துப்பார் கட்டியாகு மப்பனேகுஙகுமத்தி னிற மதாகும், நீறவிட்டசரக்குக் காலனுகும் நெடுங்காலமிருக்கவென்றால் வீசமிதையுண்ணு, தேறவிட்டுமண்டலத்திற் சட்டைகக்குஞ் சித்தர் கள் தானுண்டல்லோ காயசித்தியானற், மீறவிட்டுமெழுகாகப் பண்ணிக் கொண்டு விரவியதோர்சூதத்திற் போட்டுப்போடே. 806

போடவேஆனையைப்போல் வீறிட்டுச்சாகும் போக்கோடேதங் கமிட்டு காகமிட்டு, ஆடவேகெந்தியிட்டு செந்தூரித்து ஆயிரத்துக் கொன்றிடவே னயமைந்தாகும், வாடவேமயங்காமல் சரக்குவைப்பு வரிசையாயொவ்வொன்றாய்ப் பார்த்துத்தேறு, தேடவேகாயத்தைச் சுத்திபண்ணு செகச்சாலத்துன்மார்க்கச் சட்டைபோக்கே. 807

## லவண பாஷாணம்

போக்கானலவணமென்ற பாஷாணத்தை பொல்லாதவாதிக்குக் காட்டவேண்டாம், தேக்கானதெதினுலென்று கேட்கில் செகசாலமயக்

நத்திற் சிக்கிக்கொண்டு, நோக்கானபெண்ணாசை தனிலுழன்று கோ வெத்திக்குடிகெடுத்தால் நுணுக்கமாகித், தக்கானலோகத்தோர் குடி கெடுத்துச் சங்கியாதேயிருப்பாள் சண்டிதானே. 808

தானென்றமனதையுற்றுப் பார்த்தாரானால் சண்டாளகோபத்தை நிறுத்தமாட்டார், ஊனென்றசுகத்தையல்லோ ருசிச்சித்துக்கொண்டு உற்றுநின்றசையோகத் தாலேகெட்டு, வானென்றபொருள்தேட மாட்டார்மாண்பர் மகத்தானஅறுதலத்தின் தரிசனையைப்பார்ப்பார், பானென்றஞானவெள்ள மூண்டுகொண்டு பதருமலிருக்கரியார் மூடர் தாமே. 809

தானென்றவெடியுப்பு பலந்தானாறு சாதகமாய்ப்பாண்டத்திற் போட்டுப்பின்பு, கானென்றகாடியொடு யெலுமிச்சம்பழத்தால் கலந்து கொண்டுசமனுக உப்புக்குநாலு, பானென்றசாறுவிட்டு கரையக் காய்ச்சி பக்குவமாய் வடிகட்டிப் பதத்திற்காச்சி, வானென்ற யைந்து தரங் காய்ச்சிக்கொண்டு மார்க்கமாய் ரவியுலர்த்தி பிரம்பாய்வையே.

பிரம்பானபூநீறு பலந்தானாறு புளிப்பான காடியொடு எலுமிச் சம்பழச்சாற்கூட்டி, திரமானதெளிவிருத்து உப்பாய்காச்சிச் சேர்ந்து நின்ற உப்பதனை முன்போல்கரைத்து, அரம்பானவொரு நிரைக்கு காலு நிரைதண்ணீர் அரட்டையாய்விடுகாதே யைந்துதரங்காச்சி, உரம் பான உப்பெடுத்து ரவியில்வைத்து உத்தமனே கல்லுப்பு பலந்தா னாறே. 811

நூறேடுபழச்சாறு புளித்தகாடி நுகர்ந்துநின்ற நாலுாறு பல் தான்வார்த்து, காறேடு கொதிக்கவைத்துக் காய்ந்தபின்பு கலங்காமல் வடிகட்டி உப்பாய்க்காச்சு, வீறேடியைந்துதரங் காச்சிகாச்சி விளங் கியதோ ரவியிலிட்டுப் பலம்பத்து நிறுத்துத், தாறேடு காச்சியதோர் வெடியுப்புப்பார்த்து தாழ்ச்சியில்லாப்பூநீறு வுப்புபத்தே. 812

உப்போடு வெள்ளையென்ற பாஷாணம்பத்து உயர்ந்துநின்ற சூ மதுபலந்தான்பத்து, அப்போடுகெந்தமது பலமும்பத்து ஆதியென்ற துரிசியது பலமும்பத்து, வைப்போடு சாரமது பலமுமைந்து மாசற்ற சீனத்தின் பொறிதானைந்து, மப்போடு தாளகமும் பலமுமைந்து மாச ற்றதாளகமுஞ் சிலையதுவுமே. 813

மூணேடியிதுவெல்லாங் கல்வத்திட்டு முப்புரத்தை யெரித் குப்பைமேனிச்சாறு, பூணேடேழுநாளரைத்து மைபோல் பொடி யாக்கி காசியென்ற மேருக்கேற்றி, வாணேடு வாலுகையின் மேலே

வைத்து மறவாதேதீமூட்டிக் கமலம்போல, தூளேடுபணிரண்டு சாம மானால் துடியானலவணமென்ற பாஷாணமாச்சே. 814

ஆச்சென்றகொடுஞ்சிங்கித் தயிலஞ் சொல்வேன் ஆதளையும் வாலுழுவை புரசுருட்டி, நீச்சென்ற கஞ்சாவூமத்தைபுங்கு நெடிதான குருக்கத்தி அழிஞ் நெல்புன்னை, வாச்சென்ற தாளையொடு வாளம்வேம்பு வகையான நீர்வெட்டி சமூதைமுள்ளி, காச்சென்ற பதினைந்தும் விரைவைவாங்கி கணக்காகப் படியொன்று அளந்துபோடே. 815

போட்டெல்லாங் கெருடனுட கிழங்குச்சாற்றில் புகழாகவூற வைத்து மூன்றுநாள்காண், நாட்டிதெல்லாங் கல்வத்திலிட்டுவாட்டி அதிற்போடு மருந்தினைத்தா னுறையக்கேளு, நீட்டிதெல்லா மரிதாரஞ் சிலையுங்கெந்தி நேரானவெடியுப்பு சீனஞ்கூடன், பூட்டிதெல்லாஞ் சாம் பிராணிச் சாரம்வீரம் புகழ்ந்தகருங் குங்கிலியப் பூரீர்தானே. 816

தானென்ற தூரிசியொடு அன்னபேதி சாதகமாய் வகைக்கு ரண்டு பலந்தான்போடு, கானென்றமுன் மருந்தோடொக்கப் போட்டுக் கலந் தரைப்பாய்கெருடனுட கிழங்குச்சாற்றால், தேனென்ற வெட்டு நாள் மெழுகுபோலாட்டி, தெல்லுப்போல் வில்லைபண்ணி யுலரப்போடு பானென்ற பூப்புடத்தில் தயிலம்வாங்கி பாச்சியெல்லாம் பரணிதனி லடைத்திடாயே. 817

அடைத்திட்ட தயிலத்தில் தூரிசுவெள்ளை யப்பனே பலமொன்று நிறுத்துக்கொண்டு, கிடைத்திட்ட தயிலத்தில் மத்தித்தப்பா கெடி யான லிங்கத்திற் சுருக்குப்போட்டு, படைத்திட்ட லிங்கமது மெழுகு மாகும் பாங்கானநவலோகம் வேதையாகும், முடைத்திட்ட மெழுகா கும் பரிசினத்தில் மூதண்டவேதையுமாங் கண்டுபாரே. 818

## சூதக்கட்டு

பாறென்றசூதமொரு பலந்தானெட்டு பாய்ச்சியல்லோ கல்வத்தி லிட்டுநீயும், வாறென்றதயிலமது ஒருதுளிதான்குத்தி அரைத்திடவே வெண்ணெயைப்போ லாகும்பாரு, காரென்ற கிளிக்கட்டிச் சூடன் தீயில் கலங்காதே யிருநாழி வாட்டிப்பின்பு, சீரென்ற காண்டியிலே யெண்ணெய்குத்தித் திறமாகவுருக்கிடவே மணியுமாமே. 819

ஆமிந்தமணிதனக்கு சாரணையைச்செய்ய அண்டரண்ட பதமள வும் போகலாகும், போமிந்தமணிதனையே வாயில்வைத்துப் புகழான யுமிநீரை யுள்ளேகொள்ள, சாமிந்தசடந்தானும் சட்டைகக்கி சந்திரா

கள் சூரியர்கள் போலாங்தேகம், தாமிந்தப்படியுண்டோ பாட்டருண் டார் நாதாக்களிப்படியே உண்டிட்டாரே. 820

உண்டிட்டமனிதனுக்கு நாலத்தொன்று உத்தமனே தங்கமிட் நாகமிட்டு, பண்டிட்டகாரமிட்டு உருக்கிக்கொண்டு பாய்ச்சுதற்கு ச்ரியாகக் கெந்திகூட்டி, கண்டிட்டகல்வத்திற் பொடித்துக்கொண் கலங்காதே குலாமல்லிச் சாற்றாலாட்டி, மண்டிட்டமூன்றுநா ளரை, துப்பின்பு மயங்காதே காசியென்ற மேருக்கேற்றே. 821

ஏற்றியல்லோ முத்தீயு மூன்றுநாள்தா னிதமாக வாரவிட்டு யெ த்துப்பாரு, போற்றியல்லோ வருணனைப்போற் சிவந்துநிற்கும் பொ வாகப் பணவிடைதான் தேனிலுண்ணு, சாற்றியல்லோ மண்டலந் தான் தப்பாதுண்ணு சட்டைகக்கிச் சந்திரர்போல் முகமுமாகும், வாற்றியல்லோவுன்வழி சுறுக்குமெத்த வாச்சரிய சிங்கியென்ற தயி லந்தானே. 822

## துவாதசத்தின் தயிலம்

தானென்ற துவாதசத்தின் தயிலஞ்சொல்வேன் சாதகமாய்ச் சேங்கொட்டைநீர் வெட்டிமுத்து, தேனென்ற குருக்கத்தி வாலுழு வைவித்து சிறப்பானகுமட்டி வித்திேனாடு, வேனென்ற வாலுழுவை யரிசியோடு விரும்பியே சமனிடையாய்த் தூக்கிக்கொண்டு, பானென்ற பெருங்காட்டாமணக்குவித்துப் பகாரியகுன்றிமணி யழுஞ்சில்வித்தே. 823

வித்தோடுபிராயமணி பனிரண்டுங்கேளு விளங்கியதோர் யொன்று அளந்துபோட்டு, புத்தோடு செங்கணர் கிழங்குசாற்றில் பொலியாக வூறவைத்து மூன்றுநாள்தான், பத்தோடு கல்வத்தி லரை த்து மைபோல் பகாரிய கந்தகமுந்தாளகமும் சிலையும், கொத்தோடு கைவீரங் கெவுரிவெள்ளை கொடியதொரு பூநீறுஞ் சவட்டுஉப்பே. 824

உப்பானகல்லுப்பு வெடியுப்புச்சீனம் உத்தமனே அரிசியோடு கூடனிந்து, விப்பானமுன்மருந்தோ டொக்கப்போட்டு விரவியரை யெட்டுநாள் கிழங்குச்சாற்றில், அப்பாநீ, தெல்லுப்போல் வில்லை பண்ணி யாத்தியாம் பூப்புடத்தில் தயிலம்வாங்கி, செப்பான தீயிட்டு துருசுநீரிட்டுச் சீரானசரக்குகளிற் சுருக்குபோடே. 825

சுருக்கிடுவ தெதிலென்று லிங்கம்வெள்ளை துடியான மால்தேக் சிலையும்வீரம், முருக்கிட்ட கெவுரியொடு கெந்திசூத முனையான நாக மொடு காரீயம்வங்கம், நரிக்கிடுவதுரிசியொடு செம்புசாரம் நலமாக

சிங்கியொடு மெழுகுமாகும், கருக்கிடுவ தொவ்வொன்றில் வேதை கோடி கரையில்லை கணக்கில்லை கலந்துபாரே. 826

பாரப்பா சதமுகமாங் குருவிநாட்டு பண்பேதி செண்பேதி பெண் சத்தபேதி, தாரப்பா தூமமொடு சந்தானபேதி தயங்காத பரிசமொடு லேபனபேதி, சேரப்பா தீபமொடு எட்டுமாகும் சித்தருட நூல்களிலே யில்லையில்லை, யாரப்பா விதன்பெருமை யறியப்போறார் அரனறிவார் யாத்தாளறிந்தவாறே. 827

வாறனநீறுபதக்குவாரி மாட்டிதற்கு ளெட்டிலொன்று கல்லுச் சுன்னம், பேறனகழுதையுட மூத்திரத்திற் பிசைந்துநன்றாய் கலக்கி வைத்து மூன்றுநாள்தான், தாறனநாள் தெளிவைவாங்கி தயங்காத கல்லுப்புச் சூடன்பலம்டு, காறனவகைக்குரண்டு பலமேதூக்கி அப் பனே பொடிபண்ணித் தெளிவில்போடே. 828

போட்டுமே யடுப்பேற்றி யெரித்து உப்பாய்ப் புகழான பத்தெடு த்து கல்வத்திட்டு, மீட்டுமே மூன்றுநா ளரைத்தபின்பு மெழுகாகும் பதத்தெடுத்து வில்லைகட்டித், தீட்டுமே மூன்றுதரம் வில்லைதட்டி நிட்சயமாய்ச் சீனமொடு கல்லுப்போடு, தீட்டுமே ரவிதனிலே காயப் போடு செப்பில்வைத்துச் சீலைசெய்து புடத்தைப்போடே. 829

புடம்போட்டுவைந்தெருவி லாரவிட்டுவாங்கிப் பேராகமுன்போ லரைத்துக்கட்டி, கடம்போட்டுமூன்றுதரம் போட்டுத்தீரு கசகாமல் மூலையென்ற குருந்தானேந்து, திடம்போடுசெம்புக்குள் ளெடுத்துக் கொண்டுத் திறமானநாயுருவி சுட்டசாம்பல், புடம்போடுபதக்கெடுத்து யானேநீர்விட்டு அதட்டிநன்றாய்க்கலக்கிவைத்துத் தெளிவாவாங்கே.

வாங்கியே அண்டோடு சுண்ணம்பண்ணி வலமாகப்பலம்ரண்டு கூடப்போட்டுத், தேங்கியேயிந்துப்பு பச்சைபூரஞ் சிறக்கவேரண்டு பலம்கல்வத்திட்டு, தாங்கியேயரைத்துமைபோல் தெளிவிவிட்டு சார் பாகவடுப்பேற்றி யெரித்துவுப்பாய்ப், பாங்கியேகல்வத்தி விட்டுவாட் டிப் பதமாகமூன்றுநா ளாட்டிடாயே. 831

ஆட்டியேமூன்றுபுடந் தீர்ந்தபின்பு அசங்காமல்வெவ்வேறே யெடுத்துவைத்து, தேட்டியேபூரமென்ற திதுதானச்சு செகமெல்லா மெச்சுமிந்த குருதானட்டு, தட்டியேயெருக்குமிதைச் சமூலஞ்சுட்டு தயங்காமல்பதக்கெடுத்துக் குதிரைநீரில், மட்டியேயிருதூணி நீரிற் போட்டு மறவாமல்மூன்றுநாள் கலக்கிவையே. 832

வைத்தபின்புதெளிவிறுத்துப் பாண்டத்திலிட்டு மறவாமற்சங் நீரிரண்டு பலந்தான்போட்டு, நைத்தபின்புகடல்நுரையுஞ் சாரம்ரண் நலமாகப்பலம்ரண்டும் கல்வத்திட்டு, கைத்தபின்புபொடிபண்ண குழம்பில்போட்டுக் கலங்காதேவுப்பான பதத்தில்வாங்கி, மொய்த் பின்புமுன்னீரா லரைத்துக்கட்டி மூன்றுபுடம்போட்டெடுத்து பதன பண்ணே. 8

பண்ணியபின்சாரமென்ற குருதானுச்சு பகர்சதுரக்கள்ளிதனை சுட்டசாம்பல், நண்ணியதோர்பதக்கெடுத்துப் பாண்டத்திலிட்டு ந மானவெள்ளாட்டு மூரிதானும், கண்ணியதாலிருதூணி யமூரிவிட்டு கலக்கிவைத்துத்தெளிவிறுத்திக் கிளிஞ்சிற்சுன்னம், எண்ணியதா ரண்டுபலங்கூடவிட்டு இதமாகவடுப்பேற்றி யெரித்திடாயே. 8

எரித்திடவேகுறுகியது குழம்புபோலா மெளிதானவெண்கா துரிசிரண்டு, மரித்திடவேபொடியாக்கிக் குழப்பிவிட்டு வளமாக காய்ச்சியதை யுப்பாய்ப்பண்ணி, தரித்திடவேமுன்போலப் புடத்தை போடு தயங்காதேயெரித்துவைத்து மாட்டக்கேளு, குரித்திடே துரிசியென்ற குருதானுச்சு கொடுவேலிசமூலமே சாம்பலாக்கே. 83

சாம்பலதைத்தான்பதக்கெடுத்துப் பாண்டத்திட்டுச் சார்பானப வின்கோசலத்தைவிட்டு, சாம்பலைத்தான்கரைத்துவைத்துமூன்றுநா தான் வகையாகத் தெளிவிறுத்து நத்தைச்சுன்னம், காம்பலை தான்ரண்டுபங்கு கூடப்போட்டுக் கலர்குழப்பம்பக்குவத்தில் வெடியு ப்போடு, வேம்பிலைத்தான்விரமது பலமும்ரண்டு விரவிநன்றாய் பொடிபண்ணிக் குழம்பில்போடே. 83

போட்டபின்புஅடுப்பேற்றி யெரிக்கவுப்பாம் புகழாகமுன்னீர லரைத்துதட்டி, நாட்டபின்புமுன்போல மூன்றுபுடம்போட்டு ந மாகவெடுத்துவைத்துச் செம்புக்குள்ளே, ஆட்டபின்புவீரனென் குருதானுச்சு அப்பப்பாயிதன்வேக மண்டரண்டநீறும், நாட்டபின் கொடிக்கள்ளிசாம்பலாக நலமாகமனிதமுட வமூரியிலேபோடே.

போட்டுமேயகட்டிநன்றாய்க் கலக்கிவைத்துப் புகழாகத்தெ விறுத்து வடுப்பிலேற்றி, வாட்டுமேநாகமாம் வண்டுசுட்டு மருவியதே சுண்ணம்பாய் ரண்டுபலம்போடு, கேட்டுமேகுழம்பான பதத்தில்வாங் கிச் சிறப்பானவெள்ளையொடு சீனம்ரண்டு, ஆட்டுமேபொடிபண்ணி குழம்பில்போட்டு அடுப்பேற்றியெரித்தந்த வுப்பைவாங்கே. 83

வாங்கியேஊமையென்ற சிப்பிதன்னை வகையாகச்சுத்திபண்ணி

வடுப்பேற்றிக் குழம்பாய்க்காய்ச்சி, ஓங்கியேதாளகமும் வளகிலுப்பு
ஒக்கவேபொடிபண்ணி ரண்டுபலம்போட்டு, ஏங்கியேவுப்பாகக் காய்ச்
சிக்கொண்டு யெடுத்தரைத்துமுன்போலப் புடைத்துப்போடே. 839

போடென்றவமுரிசுட்டுச் சாம்பலாக்கிப் புகழாகப் பதக்களந்து
பாண்டத்திற்போடு, நாடென்றகடலில்நிற்குஞ் சிவந்திருந்தசொரியை
நலமாகயெடுத்துவந்து பாண்டத்துள்ளே, ஊடுனென்னவுப்பிடவுந்
தண்ணீராகு முத்தமனேயிருதுாணி நீரைவிட்டு, ஆடென்றமூன்று
நாள்கழித்தபின்பு அப்படியேதெளிவிருத்துப் பாண்டத்தில்வாங்கே.

வாங்கும்போதடுப்பேற்றி யெரிக்கும்போது வளமானநண்டோடு
சுன்னம்பண்ணி, தாங்கும்போரெண்டுபலங் கூடப்போட்டுதயங்காதே
யடுப்பேற்றி யெரிப்பாயானால், ஓங்குமப்போகுழம்பான பதத்தைப்
பார்த்து உற்றநின்றசரக்கையினிச் சொல்லக்கேளு, தூங்குமப்போ
குதம்ரண்டுபலத்தைப்போடு துடியானகெந்தியுப்பிரண்டுபலம்போடே.

போட்டெல்லாமடுப்பேற்றி யுப்பாய்க்காய்ச்சிப் பொலிவானபின்
பெடுத்துக் கல்வத்திட்டு, மூட்டெல்லாமுன்னீரா லரைத்துக்கட்டி
மூன்றுபுடம் போட்டெடுத்து வைத்துக்கொள்வாய், ஆட்டெல்லாஞ்
சூதத்திலாட்டு ஆட்டு அண்டபகிரண்டமுதல் வெந்துநீறும், காட்டெல்
லாம்வாழையுட சருகுசுட்டு காரியமாய்ப்பதக்களந்து பாண்டத்திற்
போடே. 842

போட்டுமேவாழையுடக் கிழங்குச்சாற்றில் புகழாகத்தெளிவிறு
த்து அடுப்பில்வைத்து, ஊட்டுமேசுண்ணும்பு சொல்லக்கேளு உயர்ந்த
வாங்கூமச்சி சுன்னம்பண்ணி, நாட்டுமேபலம்ரண்டு நிறுத்துப்போட்டு
நலமானகுழம்பாகும் பதத்திற்கேளும், ஆட்டுமேயன்னமென்றபேதி
யோடு அசையாதலிங்கமது ரண்டுந்தூக்கி, பூட்டியேபொடிப்பண்ணி
குழம்பிற்போட்டு புரட்டியெல்லாம் வாங்கியல்லோ கல்வத்தாட்டே.

ஆட்டியேமுன்போலமூன்று புடம்போட்டு அயச்சிமிழிலெடுத்து
வைத்துப்பதனமாகப், பூட்டியேதெர்ப்பைசுட்டுச் சாம்பலாக்கிப் புக
ழாகமூன்றுபடி பாண்டத்திற்போட்டு, மூட்டியேகள்ளென்ற காடி
தானு முசியாமலிருதுாணி விட்டுப்பின்பு, வாட்டியேமூன்றுநாள்
கலக்கிவைத்து மறவாதேதெளிவிறுத்து அடுப்பிற்காய்ச்சே. 844

காய்ச்சியேகுழம்பான பக்குவத்தில் கலந்திடுநீகெருடபட்சி
சுன்னம்ரண்டு, பாய்ச்சியேகுக்குட வெண்பலமும்ரண்டு பகரறிய
கெந்தகமும் பலமும்ரண்டு, தாய்ச்சியேபொடிபண்ணிக் குழம்பிற்

போட்டுச்சார்பாகவடுப்பெரித்துவுப்புவாங்கு, மூயற்சியேமுன்போலே வரைத்துக்கட்டி மூன்றுபுடம்போட்டெடுத்துப் பதனம்பண்ணே.

பண்ணியபின்சதமுகமாங் குருவுமாச்சுப் பணவிடைதான்பத்து மெடுத்தொன்றாய்க்கூட்டி, ஒண்ணிப்பின்கல்வத்தில் முன்னீராலாட்டி உத்தமனேசெம்புக்குளெடுத்து, நண்ணியபின் மேல்மூடிச்சீலைசெய்து நலமாகவஞ்செருவிற் புடத்தைதப்போடு, எண்ணியபின்றாறவிட்டு யெடுத்துக்கொண்டு இதமானபொற்சிமிளிற் பதனம்பண்ணே. 846

பண்ணியதோர்குருவெடுத்து விராலிக்கிட்டுப் பரிவாகச்சாறெடுத்து அயச்சாட்டிவார்த்து, ஒண்ணியதோர் நல்லகொழுக்கரியிலூதி உத்தமனேகாந்தமதிற் காட்டிற்தோய்ப்பாய், விண்ணியதோர்கொழுக் காய்ச்சித்தோய்க்கவிண்டு விண்ணு அகரதராலப்பொருமிவீழும், நண்ணியதோர்சாறெல்லாம் வற்றத்தோய்த்து நலமானஅகரெல்லாம் வாரிக்கொள்ளே. 847

வாரியேபெருங்காட்டாமணக்கி னெண்ணெய் வார்த்தல்லோ வெண்காரஞ்சரியாய்க்கூட்டி நாரியேகுகையிலிட்டு மூன்றுதரம்முருக்க நலமானஈயம்போற் சவளையாகும், ஏரியேவுடைந்ததுபோல் வாத வெள்ள மிரைக்கவேதுலையாது அயத்தூள்வித்தை, வாரியேபொங் கையிலே சதமுட்கொள்ளுநமகத்தானஅயமுருக்கில் கொல்லுந்தானே.

தானென்றநாகத்தை பதையாமற்கொல்லுஞ் சமுசயங்களெண் ணாதே சகலமுமுட்கொள்ளும், வானென்றசூதமது கட்டிப்போகு மாசற்றஅயனாக மாட்டிஆட்டு, தேனென்றசிவகாமி சொன்னமார்க்க செப்பரியநாதாக்கள் மெச்சும்வித்தை, பானென்றசெந்தூரங் களங்கு செய்யில் பரிவாகவாயிரத்துக் கோடும்பாரே. 849

ஓடுமேஅண்டத்தைப் பணம்போல்போற்று உத்தமனேகழச் செடைதான் குருவைப்போடு, வாடுமேசெந்துருக்க மேலேவைத்து மாசற்றரவிதனிலே சாமம்வைக்கத், தேடுமேமெழுகெல்லா மெழுகா ய்ப்போகுஞ் சேர்ந்தமூவாயிரத்துக் கொன்றேயோடும், பாடுமேவீணை யைப்போல் மெழுகுகொள்ள பரிவானஅண்டத்தி னுண்மைதானே.

அண்டவித்தையருக்காஞ் சிவயோகிக்காம் ஆத்தாளைப்பூசித்த வாமிக்காகும், பிண்டவித்தைமூம்மூல யோகிக்காகும் பேரானஅதை யைப்புட மூலிக்கொக்கும், வண்டவித்தைபொல்லாத துரோகிக்கெய், மகத்தானவேதாந்த ரிஷிகள்சித்தர், கண்டவித்தைமனதடக்கி யூமை யாவார் காரணமாஞ்சீஷருக்குப் போதிப்பாரே. 851

பாரென்றகுருவெடுத்துக் காசெடைதான் தூக்கிப் பரிவானசது ரக்கள்ளிப் பாலிற்போட்டுக், காரென்றசாமத்தில் சுத்தசலமாகுங் கல்வத்தின்கூதம்விட்டுச் சுத்திபண்ணிப், பாரென்றஅயச்சட்டிக் குள்ளேவிட்டுப் பதருமலொருசாமஞ் சுருக்குபோட, கோனென்றயிட்ளி போல்கட்டியாகுங் கூப்பிட்டாலேனென்னும் வாதந்தானே. 852

வாதந்தான்வேண்டுமென்றால் சூதத்தாட்டு மகத்தானஅஷ்டகர்ம மெட்டுமாகும், காதந்தான்கோடிபது நிமைக்குமுன்னே கலந்தோடிப் புக்கிவரு மணியிஞ்சை. வேதந்தான் திடத்துமே முடிவுக்கொக்கு மேவியதோர்சிலம்பொலியில் நாதங்கேட்கும், நீதந்தான்குகத்துக் கடுத்தவாறு நிமிஷத்திற்காபசித்து கெவுனசித்துமாமே. 853

ஆமிந்தமணிநின்று வுருகும்போது அந்நிடைக்குத்தங்கமிட்டு ஆட்டுஆட்டு, சேமிந்தகெந்தகத்தை ரெட்டுயிட்டு சிறப்பானபொற்றலையின் சாற்றாலாட்டி, போமிந்தசரக்கதனை குப்பியில்வைத்துப் புகமூகசீலைமண் வலுவாய்ச்செய்து, ஓமிந்தக்காசியென்ற மகருக்கேற்றி யுற்பனமாம்வாலுகையின் மேலேவையே. 854

வைக்கவேபனிரண்டு சாமத்தீயை மறவாதேமுத்தீயு மாட்டு மாட்டு, கைக்கவேதாளம்பூ நிறத்தைப்போலாஞ் சார்பாகச்சிலாக்கிட்டுக் கிண்டிப்பாரு, உய்க்கவேநவலோக மாயிரத்துக்கொன்று வுத்தமனேபதிறு மாற்றுமாகு, மொய்க்கவேசெந்தூரங் குன்றியுண்ணு மேனியுமேயருணன்போ லாகுந்தானே. 855

## வங்காளப் பச்சை

தானென்றவங்காளப் பச்சைவைப்புச் சாதகமாய்ச்சொல்லுகிறேன் மாணுக்காளே, ஊவென்றசெம்பான அரப்பொடிதான்பத்து வுத்தமனே தூரிசிபத்து வெடியுப்புரண்டு, வானென்றயெலுமிச்சம் பழச்சார்விட்டு மருவவேமத்தித்துக் கல்வத்திட்டு, தேனென்றகுப்பையிலே மூன்றுதினங்கள் புதைத்துத்திறமாகவெடுத்துப்பார் பச்சையாமே. 856

## செம்பு சுத்தி

ஆமப்பாசெம்புதனை சுத்திபண்ண அறையுறேன்கருங்குன்றிக் கொள்ளிலையின்சாறு, வாமப்பாகல்லுருவி நொச்சியோடு வகைநாலு மிடித்துநன்றாய்ப் பழச்சார்விட்டு, காமப்பாகுன்றிமணி யரைத்துப் போட்டுக் கலக்கியொன்றாய்மத்தித்து யதிற்குட்சாய்ப்பாய், சேமப்பா

வேழுதர முருக்கிச்சாய்க்கச் செம்பினுடவூறலெல்லாங் கழன்று போமே. 857

போகவேயிச்செம்பில் கிண்ணிபண்ணு புகழானசேங்கொட்டை நீர்வெட்டிமுத்து, வேகவேவெளிக்காட்டா மணக்குவித்து விரைந்து வேர்வாழைவித்துச் சரியாய்க்கூட்டி, சாகவேதுரிசியொன்று சார மொன்று சாதகமாய்க்கல்லுப்பு வெடியுப்பொன்று, எகவேயுரலிலிட்டு யிடித்திதெல்லா மிதமானகார்த்திகையின் கிழங்குசாறே. 858

சாற்றினால்மூன்றுநா ளரைத்துமைபோல் சந்திச்சுபில்லைகட்டி யுல ரப்போட்டு, பேற்றினால்பூப்புடத்தில் தயிலம்வாங்கி பீங்கானும்பரணி லடைத்துவைத்து, வாற்றினால்பதங்கமொன்று சொல்வேன்யானும் வகையானகல்லுப்பு வெடியுப்புசீனம், தேற்றினால்துரிசியொடு சாரந் தானுஞ் சிறப்பாகவொவ்வொருகா செடைதான்தூக்கே. 859

தூக்குவதுஅரிதாரஞ் சிலையுங்கெந்தி துடியானவெள்ளையொடு கெவுரிலிங்கம், ஆக்குமதுகடல்நுரையும் வீரந்தொட்டி அழகானகுதி ரைப்பல் அன்னபேதி, தேக்குவதுபூநீறுத் தியானமாகும் சிறப்பான வெண்காரங் காந்தஞ்சிங்கி, நீக்குவதுஅப்பிரேகம் ராசவர்த்தம் நேரானநிமிளையொடு பொன்னம்பர்தானே. 860

தானனஅரப்பொடியும் நாகம்வங்கம் சார்பானகாரியம்வெங்கலத் தின்பொடியும், தேனனவகைக்குமொரு காசெடையேதூக்கி சிறப் பாகமுப்பத்தி லொன்றுமாச்சு, வானனசூதமது முப்பத்தொன்று வகையெல்லாங்கல்வத்திற்பொடித்துப்போட்டு,கோனனதைலத்தைக் குத்திஆட்டிக் குறிப்பாகவேழுதர மரைத்துலர்த்தே. 861

## சூதப் பதங்கம்

உலர்த்தியேயிரும்பாலே யுள்ளங்கைபோ லுத்தமனேசாகச் சட் டிபண்ணி, மலர்த்தியேவரைவிட்டுச் செம்புகிண்ணி மருவவேவதைக் குள்ளே வழக்கம்பார்த்து, அலர்த்தியேசட்டியிலே மருந்துவைத்து அதன்மேலேகிண்ணிவைத்து பொருந்தப்பார்த்து, சிலர்த்தியேசந் துக்குச் சீலைசெய்யுந் திறமையாய்த்தான்வரிசை செப்புவேனே. 862

செப்பவேசெம்பினுட அரப்பொடியுங்கடுக்காய்த் திறமானயிரும் பினுட அரப்பொடியுங்கூட்டி, அப்பவேகருமணலுஞ் செம்புநீறு மட லானகுருந்தக்கல் மீனினெட்டி, நப்பவேவெண்கருவு மத்திப்பாகு நலமாகவிதில்விட்டு யிடித்துநைய, உப்பவேமெழுகுபோல் பதமாய் பண்ணி யுத்தமனேசந்துக்க ளடைத்திடாயே. 86

அரைத்திட்டசெம்புபோல் கவசம்பண்ணி அசகாமல்பதனமாய்ச் சீலைசெய்து, உடைத்திட்டுமுக்கவரில் சட்டிவைத்து உற்பனமாயினுட் பைநெய்யால் விளக்குவைத்து, படைத்திட்டுஅங்குட்ட பருமமாகட் பக்கத்தில்நின்றதிரி விளக்கையேற்றி, கடைத்திட்டுமூன்றுநா ளவியா மலெடுத்துக் கைகண்டபதங்கமது ஏறும்பாரே. 864

ஏறியதோர்பதங்கமெல்லாம் வழித்தெடுத்து இதமானவப்பிரேச நவநீதம்பண்ணி, கூறியதோர்வெண்கருவா லரைத்துவாங்கிக் குகை செய்துமேல்மூடி ரண்டுசெய்து, மாறியதோர்பதங்கத்தை யுள்ளேவை த்து வகையாகமேலேமூடிச் சீலைசெய்துத், தேறியதோர்கெசபுடத் திற் போட்டெடுத்துச் சிறப்பாகமருந்தெல்லாம் வாங்கிக்கொள்ளே.

வாங்கியேகுகையிலிட்டுக் காரம்வைத்து வளமாகயுருக்கியொரு மணியால்வாங்கி, தாங்கியேயெடுத்துப்பார் முத்துப்போலத் தவளம் போல்குதமது விருக்கும்பாரு, ஏங்கியே ஆச்சுதென்று மயங்கவேண் டாம் இயல்பாகக்கெந்தியிட்டுப் பதங்கஞ்செய்து, ஓங்கியேநாதமிட்டுக் கல்வத்திற்போட்டு உத்தமனேமயிற்கொன்றை சாற்றாலாட்டே. 866

ஆட்டியேகாசியென்ற மேருக்கேற்றி அப்பனேவாலுகையில் மே லேவைத்து, மூட்டியேபனிரெண்டு சாமந்தீயை மூசியாமலாறவிட்டு யெடுத்துப்பாரு, நீட்டியேசெந்தூர மருணன்போலாம் நேரானநவ லோகம் நூற்றுக்கொன்று, காட்டியேதனமாற்றாய்க் கண்டுபாரு கன மானபதங்கமது மகிமைதானே. 867

தானானஅரைவாசி வுப்பின்மேற்போட்டுத் தன்னுக்குள் சூதத் துள் பரப்பிவைத்து, கானானவதின்மேலே செங்கல்தூள்போட்டுக் கையாலேஅமிழ்த்திட்டு மேல்தோண்டிகவிழ்த்து, வானானைசந்துக்கு மண்ணைச்செய்து மருவியதோர்வடுப்பேற்றி யெறிப்பாயப்பா,தேனானை காடாக்கினி சாமம்நாலு சிறப்பாகவெரித்திடவே பதங்கமாமே. 868

மகிமையென்றபதங்கத்தை பலந்தான்தூக்கி மகத்தான கலுவத் திற் போட்டுப்பின்பு, மகிமையென்றஅரப்பொடியு நாலுபலம்போட்டு மகத்தானகாரமொரு பலமும்போட்டு, மகிமையென்ற பெருங்காட்டா மணக்கினெண்ணெய் வார்த்தரைத்துச் சாமமொன்று குகையிலிட்டு, மகிமையாய்மூன்றுதர முருக்கிப்போட மாசற்றஅயந்தானும் நாகந் தானே. 869

நாகமென்றஅயத்திடைக்குச் சூதங்கூட்டி நலமாகவுருக்கையிலே யிட்டு, மோகமென்றபுகையெழுப்பிக் கட்டிப்போகு முத்தமனே

கெந்தியிட்டுச் சூதமிட்டு, பாதமென்றபொற்றலையின் சாற்றலாட்டிப் பக்குவமாயைந்தெருவிற் புடத்தைப்போட்டு, வேகமென்றநவலோகம் நூற்றுக்கொன்று வேதிக்கமாற்றென்ன பணிரெண்டாச்சே. 870

## வெள்ளைப் பதங்கம்

ஆச்சப்பாவெள்ளையென்ற பதங்கங்கேளு ஆதிவெள்ளைப்பாஷாணக் குதிரைப்பல்லும், ஓச்சப்பாதாளகமும் பூநீறும்விரம் உத்தமனே சாரமொடு துருசுசினம், பாச்சப்பாகல்லுப்பு வெடியுப்புக்கெளரி பரிவாகவெள்ளையென்ற அப்பிரகத்தோடு, காச்சப்பாநாகமொடு வெள்ளீயப்பொடியும் கடல்நுரையுஞ்சங்குநீ ரண்டத்தோடே. 871

ஓடோடுஅன்னமென்ற பேதிதானு முத்தமனேசூடனொடு அரப்பொடியுஞ்சிங்கி, காடோடுவக்கிராந்த கஞ்சமென்றநிமிளை காந்தமொடு சத்தியென்ற சாரந்தானும், நாடோடுயிருபத்து ஐந்துமாச்சு நலமான சூடனது யிருபத்தைந்து, பாடோடுயெருக்காலம் பால்விட்டாட்டி பதறுமலேழுநா ளரைத்துலர்த்தே. 872

உலர்த்தியேவிமலையாய் வைத்துக்கொண்டு உத்தமனே வெள்ளியால்கிண்ணிபண்ணி, அலர்த்தியேஅயச்சட்டி யுள்ளங்கைபோல் அப்பனே வரையிட்டு பண்ணிவைத்து, மலர்த்தியேமருந்துதனை யுள்ளே வைத்து வகையாகமேற்கிண்ணிப் பொருந்தப் பார்த்து, பிலர்த்தியே முன்கவசம்போலேசெய்து பேராகமுக்கலரின் மேலேயேற்றே. 873

ஏங்கியேகல்வைத்துத் திரியைப்போட்டு இதமானமூள்ளி யென்ணெய் விளக்குயேற்றி, போற்றியேமூன்றுநா ளவியாமலேற்று பூரானபதங்கமது யேறும்பாரு, ஆற்றியேபதங்கமெல்லா மெடுத்து வாங்கி யாதிவெள்ளையப்பிரேக நவநீதம்பண்ணி, சாற்றியே குகையென்று சில்லிபண்ணிச் சார்பானஅண்டவெள்ளைக் கருவால்பண்ணே.

பண்ணியதோர்குகைக்குள்ளே மருந்தைவைத்துப் பரிவாகமே மூடிச்சீலைசெய்து, கண்ணியதோர்கெஜபுடத்திற் பேட்டெடுத்துக் கமானகுகைக்குள்ளே வைத்துருக்கி, நண்ணியதோர்சூதம்நின்று வருகும்போது நலமானகிண்ணியைநீ சமனும்போடு, திண்ணியதோ சூதமிடைவெள்ளீயம்போட்டுத் திறமாகக்காரமிட்டு வுருக்கிச்சாயே.

சாய்த்திடவேமருந்தெடுத்து நிறுத்துக்கொண்டு சார்பானநாலுக்குச் சூதமொன்று, போய்த்திட்டமருந்துக்கு நாலத்தொன்று புகழான வெள்ளியது நிறுத்துப்போட்டு, காய்த்திட்டமூலைப்பாலை விட்டுயாட்கனமானவில்லைசெய்து அயச்செம்பில்வைத்து, வய்த்திட்டயைந்தெருவிற்புடத்தைப்போடு எளிதானசெம்புவங்கம் நூற்றுக்கொண்ணே.

ஒண்ணனவெள்ளியது மாற்றுக்கேளு உற்பனமாயிருபத்து ஐந்து மாற்று, கண்ணனசூதமது வெள்ளியாகுங் காரீயம்வெள்ளீயம் நாகம் வெள்ளியாகும், விண்ணனசெம்பதுவும் வெள்ளியாகும் மகத்தானவய மதுவும் வெள்ளியாகும், விண்ணன அம்பலத்தை தெரிசித்தப்பா மேவியதோர்சிலம்பொலி நாதங்கேளே. 877

## ரசகற்பூர வைப்பு

நாதமென்றபச்சைரச கற்பூரம்பண்ண நலமாகச்சொல்லுகிறேன் கேளுகேளு, போதமென்றசூதமது பலந்தானெட்டுப் புகழான கெந்த கமே பலந்தானொன்று, நீதமென்றகெந்தகத்தை ஒட்டிவிட்டு வுருக்கி நினைவாகச்சூதத்தை யதில்விட்டுக்கிண்டு, நாதமென்ற கரிபோல தூளாய்ப்போகும் நலமாகவெடுத்துவை பாகங்கேளே. 878

கேளப்பாமண்ணாலே தோண்டிபண்ணிக் கெடியாகசசநதுவாய்ப் பொருந்தச்சுட்டு, நாளப்பாமேல்தோண்டிக் குள்ளேபூச நலமான மத்தைச்சார் மூன்றுதரம்பூசி, வேளப்பாவுலர்ந்தபின்பு அடித்தோண்டிக் குள்ளே விரவியதோர்கறியுப்பு அரைத்தோண்டிமட்டும், வாளப்பா பொடிபண்ணித் தோண்டியிலேபோட்டு மருவியதோர்செங்கல் மண்ணுழிதானே. 879

ஆமப்பாபதங்கமது மேல்தோண்டிக்குள்ளே அப்பனேயேறியது மாப்போல்நிற்கும், தாமப்பாபதங்கமெல்லா மயிற்குச்சுகட்டித் தகும் பாமலெடுத்தல்லோ குப்பிக்கிட்டு, வாமப்பாவாலுகையின் மேலே வைத்து மறவாமல்தீப்போடு பனிரண்டுசாமம், காமப்பாபதங்கமது யிறுகியேறிக் கம்பிபோல்வெளுப்பாக யிருக்கும்பாரே. 880

இருக்கிறதோர்கற்பூரம் விராகநாலு இதமானகெந்தியது விராக னொன்று, பருக்கிறதோர்கல்வத்திற் பொடியாய்ப்பண்ணிப் பணவிடை தானனுபானத் தோடேகொள்ள, செருக்கிறதோர்கடிவிஷங்கள் புண்கள்சூலை செருமியவெண்குஷ்டங்கள் பவுத்திரங்கள்கிரந்தி, அருக்கிற தோர் வியாதியெல்லா மகன்றுபோகும் ஆதித்தன்கண்டதொரு பனி போலாமே. 881

## ரச செந்தூரம்

பனியென்றபச்சைரசஞ்செந்தூரிக்கப் பாங்கான சூதமதுபலந்தா னெட்டு, கனியென்றகெந்தகந்தான் ரண்டுபலமாகுங் கனமான ஒட்டி விட்டுக் கணவில்வைக்க கொனியென்றகெந்தகத்தை யருக்கிக்

கொண்டு, சூதத்தையதில்விட்டு அயத்தால்கிண்டி, நனியென்ற சூத மது கரிபோலாகும் நயத்தோடேவாங்கிமெள்ளக் குப்பியிற்போடே.

போட்டுமேயரைவாசிக் குப்பிக்கப்பா புகழான வாலுகையின் மேலேவைத்து, நாட்டுமேஓடாலே மேலேமூடி நயமாகவடுப்பெரித்து சாமம்ரண்டு, ஓட்டுமேஓடதனை வாங்கிப்போட்டு உக்கிரமாயெரித்தாக் கால் கெந்தகந்தான்பத்தும், வாட்டுமேவகந்தகத்தின் நாலத்தொன்று மருவியதோர்தாளகத்தை நிறுத்துவையே. 883

வைக்கவேகொஞ்சமாய்க் குப்பியிலேபோட்டு மறவாமல் அயக் கத்தியால் கிண்டுகிண்டு, நைக்கவேதாளகத்தைப் போட்டுபோட்டு நலமாககிண்டிவரச் சாகையாலே, உய்க்கவேசரக்கெல்லாம் பதங்கமா கும் உற்றவெறுங்குப்பியா யடியிற்காணும், செயிக்கவேயடியிலே மருந்தில்லாவிட்டால் சிரானபதமென்று அடுப்பையாற்றே. 884

ஆற்றியேயிருநாழி யானபின்பு அயக்குறட்டால்குப்பிதனை வெளி யில்வாங்கி, போற்றியேநீர்தெளித்து ஆறப்போட்டு புகழாகக் குப்பி யெல்லாந் தள்ளிப்போட்டு, தேற்றியேசிவப்பாகக் கம்பிபோலாய்ச் சிறுகதிராய்ப் பலகைபோலிருக்கும்பாரு, சாற்றியே பணவிடைதான் றேனிலுண்ணத் தப்பாதுநோயெல்லாஞ் சாடிப்போமே. 885

சாட்டியே கல்வத்தி லிதனைப்போட்டுத் தயங்காமல் பொடிபண் ணிக் காட்டிச்செம்பு, நீட்டியே கிழங்கின்சாற் றுவைத்துக்கொண்டு நினைவாக யரைத்திடுவாய் மூன்றுநாள்தான், வாட்டியே ரவியில்வைத் துப் பொடியாய்ப்பண்ணி வளமான காசியென்ற குப்பியிலேபோடு; ஓட்டியே வாலுகையின் மேலேவைத்து உற்பனமா யடுப்பெரி ஆறவிட்டு வாங்கே. 886

வாங்கியேமுன்போலக் கல்வத்திற்போட்டு வளமான கிழங்குச் சார் விட்டுஆட்டி, தேங்கியேய்ரைத்திட்டு மூன்றுநாள்தான் திறமாகப் பொடியாக்கிக் குப்பிக்கேற்றி, ஓங்கியே யரைக்கையிலே பலந்தான் கெந்தி உற்பனமாய்ப் போட்டரைத்துக் குப்பிக்கேற்றி, தாங்கியே மூன்றுநாள் தீயையாட்டு தப்பாமலிப்படிதா னைந்துதரமேற்றே. 887

யைந்துமே வாலுகையின் தளத்தில்நிற்கும் அசங்காமலச்சிமிழி லெடுத்துவைத்து, உஞ்சுமே நவலோகம் நூற்றுக்கொன்று யுற்பன மாய்ப் பத்தரையே மாற்றுகாணும், செஞ்சுமே நோயெல்லாந் தவிடு பொடியாகுங் கெடியான காலனுமே யஞ்சிப்போவான், மிஞ்சியதோர் புளியுப்பு விட்டுத்தின்றால் மேவியதோர் சட்டைகக்கிப் பாலையாமே,

பாலையாஞ்சிவப்பான கெந்திதன்னைப் பகரக்கேள் பராபரைக்கு முதல்நாகந்தான், ஓலையாலெழுதவென்று விதனிருட்டு உத்தமனே கடல்தண்ணீர்க்கொப்பேயாகு, மாலையாங் கொன்றையைத்தான் றரித்தசிவன்மைந்தர் மயங்கினரிதினுடைய ஆட்டைப்பார்த்து, ஆலையாய் சரக்கெல்லாங் கொல்லும்கொல்லும் அம்மம்மா ஆயியுட நாதந்தானே.

நாதமென்று மிதுக்குப்பேர் சுத்திகெந்தி நலமான கோழித்தலைச் சூடனென்றும், போதமென்ற விதினுடைய வைப்புதன்னைப் போக்கோடே வெளியாகச் சொன்னேன்மக்காள், நீதமென்ற நெல்லிக்காய் கெந்தகத்தை நினைவாகப்பலம்பத்து நிறுத்துக்கொண்டு, கீதமென்ற செவ்வகத்தி செவ்வலரிமுருக்கு கெடியான செவ்வல்லி செம்பருத்திதானே. 890

தானானமாந்துளிருங் குமரிவேருந் தயங்குமணி தக்காளி சாறுக்கியோடு, பானைபுளியாரை பத்துங்கேளு பாங்காக வெவ்வேறாய் படிதான்சாறு, கோனாகவார்த்து வொவ்வொன்றாய்க் கலக்கிக்கொண்டு கொடியதொரு யிந்திரமாங் கோபப்பூச்சி, தேனைபூநாகம் ரண்டுங்கேளு தேசிக்காயளவரைத்து கிடப்போடே. 891

போடவேவெடியுப்பு சீனம்ரண்டு பொலிவாக வகைக்குமொரு பலமும்போட்டு, வாடவேபசுவின்பால் படிதானைந்து மாசற்ற எலுமிச்சம்பழச்சாறு சேரை, தேடவே கலக்கியொன்றாய் வைத்துக்கொண்டு திறமாகச்சட்டியிலே படிதான்வார்த்து, நீடவேசீலைகட்டி அதின்மேற்கெந்தினை நிவாகப்பரப்பியல்லோ மேற்சட்டிமூடே. 892

மூடியேசீலைசெய்து குழிதான்கெல்லி முயற்சியாய்ச் சட்டிதன்னைப் புதைத்துப்போடு, நாடியேமேற்சட்டி தெரியவிட்டு நழுகாமலை புடம்போடு பத்தெருவிலப்பா, தேடியேஆறவிட்டு யெடுத்துப்பாரு சிறப்பாக வுருகியெல்லாஞ் சாறுதனில்நிற்கும், வாடியேமணியெல்லாம் பொருக்கிக்கொண்டு மறுபடியுஞ் சாறுக்கப் படிதான்வாறே.

படிச்சாறுவார்த்துபே மறுசீலைகட்டிப் பாங்காக மணியெல்லாம் பொறுக்கிவைத்து, துடியாகபரப்பியே மேற்சட்டிமூடி துப்புரவாய்ச் சீலைசெய்து புடத்தைப்போடு, அடிச்சாறுவற்றவற்ற மறுசாறுவார்த்து அதட்டியேயிருபத்து ஒன்றுபோடு, கடிதுதள்ளிவிட்டு மணியெல்லாம் பொருக்கிக் கழுவியேதண்ணீரில் ரவியிற்போடே. 894

போட்டபின்பு யெடுத்ததனை கல்வத்திலிட்டுப் பொடிபண்ணிக் கல்வத்தில் மயில்நெய்வார்த்து, பூட்டபின்பு வாலுகையின் மேலே

வைத்துப் பொருந்தவேதீமூட்டிக் கமலம்போல, நாட்டபின்பு காடாக்கினி நாலுசாமம் நலமாகத்தீபாக்கினி யாறுசாமம், கேட்டபின்பு நாற்சாம மாறவிட்டுயெரிக்கச் சிவசிவா மாதளம்பூ நிறம்போலாமே. 895

சிறமான கெந்தகத்தில் வேகம்பட்டால் நினைக்குமுன்னே மது யேமமாகு, மறவானலோகத்தில் பரிசிக்கவேதை யானுண்டகற்பமிது யானுங்கொண்டேன், திறமானதங்கமது செம்புமாகுஞ் சேர்ந்த நவலோகத்தில் யிரத்துக்கோடும், குறமாதுமாமியுட நாதமப்பா கொண்டாக்கால் கடிகையிலே சித்தியாமே. 896

சித்தியாந்தேவருக்கு மைந் பூதம் செகத்திலுள்ள சித்தருக்கு மைந்துபூதம், முத்தியாமூவர்மனமு மைந்துபூதம் உயர்ந்தநிறை விருட்சமெல்லா மைந்துபூதம், புத்தியாம்பாம்பினமு மைந்துபூதம் போர்க்கானயைந்திறு லெல்லாமாச்சு, பத்தியாம்வாதத்தில் பஞ்சபட்சி பாஷாணவைப்பதனைப் பாடினேனே. 897

பாடினேன் வடமொழியைப் பிரித்துப்பார்த்து பரிவாக ஆத்தாளைக் கேட்டுக்கேட்டு, ஓடினேன் குளிகையிட்டு நாதாக்கள் பதத்தில் உகந்தடிமை யாகியல்லோ வாதம்பார்த்தேன், வாடினேன் மனமிளைத்து வாதம்பார்த்து மயக்கமெல்லாங் குருசொல்ல மனதிலெண்ணி, நாடினேனுலகத்தோர் நம்மைப்போலே நலிந்துயான் வெளியாகத திறந்திட்டேனே. 898

திறந்திடாதிருந்தாக்கால் சரக்குவைப்பைச் சகத்திலேவாதம் பொய்யாகுமென்று, இறந்திடாதிருக்க வெளியாகச்சொன்னே ஏழைமதிபோகாதே பார்க்கவென்றால், மறந்திடாக்கருவையெல்லா முன்னிப்பாரு மாயமாம்வாசினையால் மனம்புண்ணாகும், பிறந்திடாதிருக்கவென்றால் காயசித்திபண்ணு பெரியோர்கள் பதம்போற்றிக் கருவைக்கேளே. 899

கருவென்னதாளகமும் பலமுமைந்து காந்தாளப்பூப்போலான பூநிறைந்து, உருவென்னலிங்கமது பலமுமைந்து உயர்த்தியாய்ச் சிலையதுவும் பலமுமைந்து, குருவென்னகெவுரியது பலமுமைந்து கூட்டியெல்லாங்கல்வத்திற் பொடியாய்ப்பண்ணி, திருவென்னசெங்கீரைச்சாறுவிட்டுச் சிறப்பாகவேமுநா ளரைத்திடாயே. 900

அரைத்திட்டுப்பொடிபண்ணி மேருக்கேற்றி ஆறவிட்டுப்பரண்டுசாமந் தீயைப்போடு, வரைத்திட்டப்பதங்கமது யிறுகியே வகையானபஞ்சபட்சி பாஷாணமாகும், நரைத்திட்டுப்போகா

மெழுகிப்பண்ணிக்கொண்டால் நவலோகமாயிரத்துக் கோடும்பாரு, புரைத்திட்டுவீசமுடை பாலிலுண்ணு பொலிவான சட்டைகக்கி வாலையாமே. 901

## பவளப்புற்று பாஷாணம்

ஆமென்றபவளபுற்று பாஷாணந்தா நரையிறேணியான்றுனு மறிந்தமட்டும், போமென்றதாளகந்தான் பலமும்பத்து புகழான வெள்ளையென்ற பாஷாணந்தான், காமென்றபலம்பத்து கல்வத்திட்டு கனமாகவரைத்துநன்றாய்ப் பொடியாய்ப்பண்ணி, தேமென்றரெண்டு பலங்கெந்தியிட்டுச் சிறப்பாகக்காசியென்ற மேருக்கேற்றே. 902

ஏற்றியேவாலுகையின் மேலேவைத்து இதமாகக்கமலம்போல் தீயைமூட்டு, போற்றியேநால்சாமங் கமலம்போலாட்டு புகழாகஆற விட்டுத் தண்ணீற்குந்து, சாத்தியேகுப்பியைத்தா னுடைத்துப் பார்த்தால் சாங்கமாய்ப்பாஷாணம் புற்றுப்போலாகு, மாற்றியே பிதைக்கட்டி வேதையோடி லம்மம்மாவெகுதூர மோடுங்காணே.

## கெவுரி பாஷாணம்

காணப்பாகெவுரியுட வைப்புகேளு கடிதானவெள்ளையென்ற பாஷாணந்தான், ஊணப்பாபலம்பத்து நிறுத்துக்கொண்டு வுத்தமனே கெந்தகம் ரண்டரைபலந்தான், பூணப்பாபொடிபண்ணி மேருக்கேற்றிப் புகழானவாலுகையின் தீயைமூட்டு, வீணப்பாகமலம்போல் நாலு சாமம் விடுபடவேயெரித்திட்டு உடைத்துவாங்கே. 904

வாங்கியேயுடைத்தாக்கா லடிக்குப்போல வகையானசிவப்புமஞ்சள் போலிருக்கும், ஓங்கியேயிதைக்கட்ட ஆரலாகு முத்தமனே வெடியுப்புச் செயநீராகும், தேங்கியேவெடியுப்புச் செயநீர்கேளு சிறப்பானபெருங்கம்பி நாலாங் காய்ச்சல், பாங்கியேபலம்பத்து நிறுத்துக்கொண்டு பக்குவமாஞ்சாரமது காசெடைதானேந்தே. 905

## வெடியுப்புச் செயநீர்

ஐஞ்சோடுகல்லுப்பு காசெடைதானைந்து அழகானபூநீறு காசுமைந்து, நஞ்சோடுசீனமது காசுமைந்து நலமானவப்பிரேகம் காசுமைந்து, பிஞ்சோடுவெள்ளையது காசுமைந்து பேரானதுரிசியது காசுமைந்து, பஞ்சோடுசீனமது காசுமைந்து பாங்கானசூடனதுக் காசுமைந்தே. 906

காசுதானைந்தாகும் வெண்காரம்பூரங் காணிதுக்குள் சமனாகக் கடல்நுரையைப்போடு, மாசுதானிந்துப்பு அன்னபேதி மகத்தான

சத்துமெனற சாரத்தோடு, தூசுதானிதுவெல்லாங் கல்வத்திட்டுத் துடியாகப் பொடிபண்ணிச் சொல்லக்கேளு, பூசுதான்பழம்புளிதான் பலமும்பத்து புகழானகொறுக்காயின் பலமும்பத்தே. 907

பத்தானஎறலென்ற சதையிேைடு பாங்கானபருங்கொன்றை பழத்தைக்கேளு, வித்தானபலம்பத்து நிறுத்துப்போட்டு மேவிய தோரெலுமிச்சம் பழச்சார்விட்டு, முத்தாகவிடித்துமைபோல் மெழு காய்ப்பண்ணி முயற்சியாய்பில்லைசெய்து வுலரப்போட்டு, அத்தான பூப்புடத்தில்தயிலம்வாங்கி அழகானமுனமருந்தில் விட்டுஆட்டே.

ஆட்டியேயேழுநாள் ரவியில்போடு அழகானவடிகனத்த கலசம் வாங்கி, பூட்டியேகற்சுன்னங் குழைத்துக்கொண்டு புகழானவிரல்பரு மங் கனமாய்ப்பூசி, தேடியேகலயத்தி னுள்ளும்பூசிச் சிறப்பானதில் லுக்கு நடுவேபூசி, வாட்டியேகலயத்துள் மருந்தைவைத்து வஞ்சி யாகச்சில்லிட்டுச் சீலைசெய்யே. 909

செய்தபின்புநூறெருவிற் புடத்தைப்போடு திறமாகஆறவிட்டு யெடுத்துப்பாரு, கைதபின்புபொடிபண்ணிப் பீங்கானில்வைத்துக் கனமானபனியில்வைக்கச் செயநீராகு, மைதபின்புஇந்நீரில் வீரம்பூர மருவநன்றாய்பொடிபண்ணிச் செயநீரிற்போடு, எய்தபின்புசரக்கான வறுபத்துநாலு மிதமானசெயநீரிற் தோய்த்துவாட்டே. 910

வாட்டியபின்சுறுக்கிடவே மெழுகாய்ப்போகும் வகையானகட் டினமாம் நீற்றினமுமாகும், பூட்டியபின்செந்தூரங் களங்கமாகும் போக்கானசத்துவகை குளிகையாகும், நீட்டியபின்னவலோகம் வேதையாகும் நிலைநிற்குங்காவிக்கும் புடத்துக்கேக, ஒட்டியபின் செயநீரில் சுருக்காம்வேதை உற்பனமாங்காயசித்துக் கௌனமாமே.

## சார நீர்

சீனமாமப்பிரேகங் காசுமைந்து சிறப்பானசூடனது காசுமைந்து, பானமாம்பூரமது காசுமைந்து பகருகின்றவெண்காரங் காசுமைந்து, ஊனமாம்வீரமது காசுமைந்து உற்பனமாஞ்சத்தியென்ற சாரமைந்து, கானமாமன்னமென்ற பேதியைந்து கனமானகல்வத்திற் பொடியாய் பண்ணே. 912

பண்ணியே வெடியுப்பு நீரைவார்த்து பாங்காக வரைத்திடுவா யேழுநாள்தான், ஒண்ணியேகலசத்திற் சுண்ணம்பூசி வுத்தமனே யதற்குள் வைத்துப் புடத்தைப்போடு, நண்ணியே யாறவிட்டுப் யில்வைக்க நலமான வாரிதிபோற் நலமுமாகும், கண்ணியேயிக...... வீரம்பூரம் காசெடைதான் பொடித்திட்டு வைத்துக்கொள்ளே. 913

யாய்வுலாகொடுத்து நின்றாரங்கே, சண்டைபிடிம்ராவணனார் சமாதி கண்டார் சாங்கமுடன்ரிஷிகளெல்லா மங்கிருந்தார், தெண்டமுடன் சமாதியிடம்சென்றபோது தீரமுடனுளவைஎல்லாங் கேட்டிட்டாரே!

கேட்கையிலேசதகண்ட ராவணன்தான் கெடியானசமாதியது கண்டிட்டாராம், நாட்டமுள்ளசமாதியது நடுமையத்தில் நலம்பெரிய கோட்டைக்குமேற்புறந்தான், நீட்டமுடன்பன்னீரு காதமப்பா நிலையானசாமியுட கோட்டையாகும், வாட்டமுடன்சமாதியது கிட்டப் போனார் வாகுடனேசித்தர்முனி காவல்தானே. 407

## இராவணன் நவரத்தின சமாதி

காவலுடன்ரிஷிகூட்ட மசுராள்தானும் காவலனார்கோட்டையது சமாதிமுன்னே, ஆவலுடன்காணவென்று போகும்போது அங்குள்ள ராட்சதர்களசுராள் கூட்டம், ஏவலென்னும் கிங்கிலியராயிரம்பேர் எழிலானகோட்டைவழி தான்மறிப்பார், பாவலுடன் காலாங்கி வார்த்தைகூறி பதிபோகயுபாயமது கண்டிட்டாரே. 408

காணவேசமாதியது மேற்புரத்தில் கனகமணிநவரத்தின சமாதி கண்டார், வேணவேவுபசாரமுடன் காலாங்கிநாதர் விடுபட்டுச் சமாதியிடஞ் சென்றாரங்கே, நாணமுடன்தலைகுனிந்து வார்த்தைகூறி நலம்பெரியசமாதியிடஞ் சென்றிட்டாராம், பாணம்போல்வசரீரிவாக்கியந் தான் பாரினிலேசத்துமது கேட்கலாச்சே. 409

கேட்டவுடன்காலாங்கி நாதர்தாமும் கிருபையுடன்சமாதியிடம் போகவஞ்சி, நாட்டமுடன்நடுமையம்கோட்டைக்குள்ளே நலமுடனே காலாங்கி பெருமூச்சிட்டு, தேட்டமுடனிராவணனார்பாதம்காண தேர்வேந்தேயெனக்குகுறை நேரலாச்சு, கோட்டமுடன்மனக்குறைகள் நேர்ந்ததென்று கூறினார் காலாங்கிநாதர்தாமே. 410

தாமானகாலாங்கி நாதர்சாமி தன்மையுடன் அவர்களிடம்பேசாமற்றான், நேமமுடன்காலாங்கி நாதர்தாமும் நெறியுடனேயங்கிருந்து மறுபக்கந்தான், போமெனவேதன்மனதி லடக்கிசாமி பொலிவுடனே கீழ்ப்புரமாம் திரும்பும்போது, தேமமுடன்கோட்டைக்குள் ரிஷிகள் கோடி தெளிமையுடன்கண்டாராம் கோடிபேரே. 411

கோடியாம்ரிஷிமுனிவர் கோடானகோடி கோமகனார் கோட்டைக்குள் வாசற்பக்கம், நீடியேசமாதியிடம் நின்றிட்டாராம் நித்திலங்குப் பூமகனார்சமாதிபக்கம், தேடியேபார்க்குகையில் சமாதிமுன்

னை திகழானசித்தொருவ ரங்கிருந்தார், நாடியேயவரிடத்திற் கண்டு
பேசி நயமுடனேராவணன்சேதி கேட்டிட்டாரே.                                   412

## இராவணன் பாட்டன் துவாபரயுகத்துச் சங்கதி

கேட்கையிலேதுவாபரயுகத்திலப்பா கெடியான என்பாட்டன்
ராவணற்கு, சூட்சமுடன்ரிஷிசாபம் நேர்ந்ததென்று சூட்சமுடன்
எந்தனுக்கு சிந்துசொன்னார், வேட்கமுடன்ரிஷியினிட சாபத்தாலே
வேகமுடன்கோட்டையது வழியவென்றும், நீட்கமலசூர்ப்பனகி
பங்கமாகி நீடாழிகோட்டையது யிடியென்றாரே.                                   413

இடியென்றசாபத்தால் இலங்கைதானும் எழிலான பதிகள்முதல்
எல்லாம்போய்,நொடிக்குள்ளேவாரிதியுமிகவும்பொங்கி நோக்கமுடன்
ராவணனார் தம்பியானோர், படிகடந்துசமாதிக்குப் போகநன்று பட்ச
முடன்பாரினிலே யிருக்கலாகா, குடிகொண்டமயிலிராவணனொராக்க
கூட்டமுடன்சமாதிக்கு ஏகினாரே.                                   414

ஏகவேராமர்வெகு கோபத்தாலும் எழிலானசீதையின் சாபத்தா
லும், போகவேகோட்டைமுதல் யாவுங்கெட்டு பொன்னிலகு பதிதன
க்கு போகவென்று, சாகமுடன்சமாதிக்கு இடமுந்தேடி சட்டமுடன்
இலங்கைபதி கடலோரத்தில், பாகமுடன் கோட்டையது நடுமையத்
தில் சர்வரும்சமாதியது நின்றிட்டாரே.                                   415

நின்றதொருசமாதிமுத லெல்லாம்பார்த்து நேர்மையுடன் துவா
பரத்து சேதிகேட்டு, தன்றனதுவரலாறு யாவுஞ்சொல்லி சட்டமுட
னுபதேசம் பெற்றுமேதான், குன்றுமலைவாருதி யாரும்பார்த்து குவ
லயத்தில்காலாங்கி வந்துமல்லோ, சென்றுமேசமாதிக்குப் பருவமா
னார் சிறப்புடனேகாலாங்கி நாதர்தாமே.                                   416

நாதரும்சமாதிக்குப் போகுமுன்னே நலமுடனே யடியேனும்
போகர்தாமும், பாதமுடனவர்பாதம் பணிந்துகொண்டு பாரினிலே
யுபதேசம் யாவும்பெற்று, நீதமுடன்சீஷனில் நற்சீஷனாகி நிமையுடன்
நாதனுட னருளும்பெற்று, போதமுட னுலகுதனில் குளிகைபூண்டு
புறப்பட்டுப்போனேனே சீனந்தானே.                                   417

## சீனபதி பெண்களுக்கு கற்ப மெண்ணை

தானானசீனபதி சென்றேன்யானும் தகைமையுடன் கருவெண்
ணெய் சாற்றக்கேளும், வேனானசிற்றிருமணக்கி னெண்ணெய் விரை
வானவரிக்குமட்டி நதிக்குமட்டி, கோனானகழற்சிக்காய் முடக்கொத்

தானும் கூறுனவிரலியுடன் காட்டுள்ளிதானும், பானுனபிரமியுடன் வறுகுதானும் பாங்கானமூலிபிடச் சாறுகூட்டே. 418

கூட்டவேயெண்ணெயதுபங்கொன்றாகும் குமுறவேசார்மூலிபங் கொன்றாகும், நிட்டமுடன்சரியெடையா யெடுத்துக்கொண்டு நெடி தானபுங்கம்வேர் சங்கன்வேறும், வாட்டமுடன்கொடிவேலி பங்கம் பாலை வாகானகிளுவையுட வாகைதானும், மீட்டமுடன் கிளுவையது சங்குதானும் நெடிதானதலைச்சுருளி காக்கணமே. 419

காக்கமுடன்திருகுமரி வெள்ளைச்சாறை கருவான மூவகையில் வேறுங்கூட்டி, நோக்கமுடன்வகைக்கு ஒருபலமதாக நுணுக்கமுடன் றனிடித்து கூடப்போடு, தேக்கமுடன்கஸ்தூரிக் கள்ளிதானும் தேர்ந் துமேதானெடுத்து பிழிந்தசாறு, தூக்கமுடன் வகைக்குவொரு நால தாக துப்புரவாய் எண்ணெய்தனில் கலந்திடாயே. 420

கலந்துமேவதிற்போடு கற்பங்கேளு கருவானதிப்பிலியும் கடுகு தானும், அலந்தகடுக்காயுடனே கடுகுரோணி அப்பனே வால்மிளகு சீரந்தானும், மலர்ந்ததோர்வால்மிளகுகுரோசாணிதானு மார்க்கமுடன் கருஞ்சீரம் கஸ்தூரிமஞ்சள், நிலர்ந்தமஞ்சள் தன்னுடனே வரத்தை கூட்டி நெடிதானசிக்குடனே சிறுநாகப்பூவே. 421

பூவானயிந்துப்பு திப்பிலிதானும் பொங்கமுடன் பெருங்காயஞ் சாதிக்காயாம், மாவானசாதிக்காய் சாபத்திரி மார்க்கமுடன் சேங் கொட்டை தாளிசந்தானும், சேவானசிவதைநில வாசைவேறும் சிறப் பானகோறையிட கிழங்குதானும், காவானசுக்குடனே தான்றிக்கா யும் கருவானநெல்லியுடன் ஓமந்தானே. 422

ஓமமுடன் வாய்விளங்கம் விடையந்தானும் ஒப்பமுடன் மாசி யென்ற காயுங்கூட்டு, தாமமுடன்வகைக்கு ஒருபலமதாகத் தகைமை யுடன்றனிடித்து கூடப்போடு, வாமமுடன் வடிப்பேற்றி எரிக்கும் போது வாகானவெண்காரம் விராகனொன்று, தூமமுடனிந்துப்புவிரா கன் ரண்டு சுயமானகரியுப்பு விராகனென்றே. 423

ஒன்றானயிவையெல்லாம் பொடித்துப்போட்டு உத்தமனேமெழு குபதந் தனிலிறக்கி, நன்றானகலசத்தில் பதனம்பண்ணு நலமானமண் டலஞ்சென் றெடுத்துக்கொண்டு, தன்றான வீட்டுக்கு விலக்கமான தய வானமுதல்நாள்தான் மூன்றுநாளும், குன்றமல்காலையிலோ ராண்டு கொள்ள குணமாகுமாறுவித சூலைபோமே. 424

போமேதான்கெற்பமென்ற சூலைபோகும் பொல்லாத கெற்பத்தின் வாயுபோகும், தாமேதான்கெற்பத்தின் ரோகம்போகும் தனியானகெற்பத்தின் திரட்சிபோகும், வேமேதான்சூதகத்தின் வாயுபோகும் வெகுளாமல்குன்மத்தின்கட்டிபோகும், நாமேதான்சொன்னபடி பத்தியந்தான் நலமானவெள்ளாட்டுப் பால்தான்கூட்டே. 425

கூட்டவேநாலாம்நாள் வென்னீராலே குமுறவே ஸ்தானமது செய்யவேண்டும், நாட்டமுட னன்றுமுதல் நான்குநாளும் நலமாக விழுதியிலே பாலுங்கூட்டி, வாட்டமுடன்றானருந்தி வந்திசந்தி வாகாகயேழாநாள் யெண்ணெய்முழ்கு, நீட்டமுடன்மூன்றுமுறை யிப்படியே செய்ய நீனிலத்தில்கெற்பமது விளையும்பாரே. 426

பாரேதான்வாலுக்கு மிந்தபாகம் பட்சமுடன்றானருந்த ரோகம்போகும், சீரேதான்திங்களுக்கு வைந்துநாளும் திரமையுடன் மூன்றுமுறையுண்ணவேண்டும், நேரேதான்பத்தியமுமுன்போற்காரு நேரானமேகமது கசரோகம்போம், வாரேதான்காலாங்கி நாயர்பாதம் வணங்கியேபோகரிஷி வரைந்திட்டேனே. 427

அறைந்திட்டேன்பலகருக் கடையாராய்ந்து அப்பனே மானிடர்கள் பிழைக்கவென்று, திரைந்திட்டேன்சூத்திரங்க ளுறுதிபார்த்து தெளிமையுடன்பல நூலும் பெருநூல்பார்த்து, குறைந்திட்டசூட்சாதி சூட்சம்பார்த்து கூறினேன்சித்தர் நூலெல்லாம்பார்த்தேன், முறைந்திட்டேனிந்தவண்ணம் யாருஞ்சொல்வார் முயற்சியுடன் பாடிவைத்தேன் காண்டந்தானே. 428

தானனகாண்டத்தின் மூன்றுங்காண்டம் தகைமையுள்ள கருக்குருவு யாவுஞ்சொன்னேன், வேனனையென்னையர் காலாங்கிநாயர் விருப்பமுடனுபதேச மனேகஞ்சொன்னார், கோனனவுபதேசம் யாவும் கேட்டு கொட்டினேன்சத்தமென்ற காண்டமப்பா, பானன காண்டமேழாயிரந்தான் பாகமுடன்பாடிவைத்தேன் போகர்தாமே. 429

தாமேதான்மொழிந்திட்டா ரனேகங்கோடி தகைமையுடன்கண்டறிந்தேன் சதாகாலந்தான், வேமேதான்சித்தர்முனி ரிஷிகளப்பா வெனைப்போலயாருந்தான்சொல்லவில்லை, சாமமுடன் நூல்களெல்லாஞ் சாபஞ்சொன்னார் சாங்கமுடனுளவுகரு சொல்லவில்லை, நாமமுடன் அடியேனும் விரித்துரைத்தேன் நலமாகசினபதி யுலகத்தோர்க்கே.

உலகானசினபதி மாந்தரப்பா உலகுமுதல்கருக்களெல்லாங் கண்டாரங்கே, நிலவுபோல்சொல்லிவிட்டேன் மாந்தர்க்கப்பா நிட்சயங்க

ளெல்லாந்தான் கண்டுகொண்டார், கல்வியுடனுனுமல்லோ வுறவு கொண்டு காணுதகாட்சியெல்லா மங்கேகண்டேன், தலமதிகமான தொரு சீனதேசம் தாரணியிலெவராலுஞ் சொல்லப்போமோ. 431

போகாதுவாதிசே டனிலுமாகப் பொங்கமுடன்சித்தரிலு மாகா தப்பா, வேகாதபிணம்போல வுழல்வாரப்பா விருதாவாய்நூல்சொல்லி மறைத்தாரங்கே, சாகாதகற்பமது வுறுதிச்சொன்னூர் சாங்கமுடன் கற்பத்துக் குயிர்தானில்லே, ஆகாதசாஸ்திரங்க ளனைத்துஞ் சொல்லி அப்பனேசாபமது சொன்னூர்காணே. 432

காணவேசாபமது சொன்னூரங்கே கருவாக யெனைப்போலச் சொன்னூரில்லே, தோணவேதோணுத பொருள்களெல்லாம் முறை யுடனேமுறையுடனே சொன்னேன்யானே, மாணவேயென்னூலைப் பார்த்தபேர்க்கு மறைப்புமுதல் திறைப்புமுதல் யாவுமில்லே, நாணவே சாத்திரங்கள் முறைதப்பாமல் நலமுடனேபாடிவைத்தேன் நன்மை பாரே. 433

## போகர் கருலேகியக் கிருதம்

பாரேதானின்னமொரு கருமானங்கேள் பாடுகிறேன்மாணுக்கன் பிழைக்கவென்று, நேரேதான்வரிக்குமட்டி சார்தாநாழி நேரானகள் ளிச்சாறுநாழி, கூரேதான்வழிஞ்சிச்சார் சாறுநாழி குணமானயிஞ்சிச் சார் சாறுநாழி, வாரேதான்மாவிலிங்குச்சாறுநாழி வாகானவிழுதி யிடச் சாறுகூட்டே. 434

கூட்டியேபழச்சாறு நாழிதானும் குணமானபசுநெய்யும் நாழி கூட்டு, நாட்டமுடனிதுவெல்லா மொன்ருய்க்கூட்டி வளமையுடன் தான்சேர்த்து மருந்துகேளு, நீட்டமுடன்திப்பிலியும் சுக்குதானும் நெடிதானவெள்ளுள்ளி யிலுப்பைப்பூவே. 435

பூவானசவர்க்காரமிந்துப்போடு புகழானநவாச்சாரம் கடுக்காய் தானும், நாவானபெருங்காயம் வெண்காரந்தான் நலமானவாளுவை சீரந்தானும், பாவானஓமமுடன் கடுகுரோணி பாங்கானவரப்பொடி யும் கருப்புக்கட்டி, மாவானசாதிக்காய் கிராம்புதானு மகத்தானகடுக் காய்த் தான்றிக்காயே. 436

காயானநெல்லிக்காய் சுக்குதானும் கருவானமிளகுடனே கோஷ்டந்தானும், தாயானயேலமுடன் வளையலுப்பு தாக்கானவெடியுப்பு யெவச்சாரந்தான், மாயானயிந்துப்பு கல்லுப்போடு மகத்தான சவர்க்

காரம்பலமதாகும், தூயானயிதுவெல்லாம் சமனுய்க்கூட்டி துப்புற வாய்சினியது சரியாய்க்கூட்டே. 437

கூட்டியேவாலுகையி லடுப்பிலேற்றிக் குழுறவேசேறுபோலாக காய்ச்சி, நாட்டமுடன்கலசமதில் பதனம்பண்ணு நலமுடனேயந்தி சந்தி கொண்டாயானுல், வாட்டமுடன்கவுசையொடு குன்மம்பாண்டு வாகானதொண்டைமுதல் மலட்டுப்பூச்சி, காட்டகத்தே போகு மென்றுபோகர்தானும் கருத்துடனே பாடிவைத்த கிரந்தந்தானே.

தானுனகிரந்தமது பட்சந்தானும் தயவுடனேகொண்டவற்கு கெற்பமுண்டாம், கோனுனவிஷபாண்டு சோகைபோகும் குடிகெடுக் கும் கெற்பமென்றரோகந்தீரும், மானுனகைக்குடைச்சல் வாயுபோகு மகத்தானசூலைமுதல் ரோகம்போகும், தேனுனவிப்புருதி மாலைதீரும் தெளிவானகைமுடக்கு போகுங்காணே. 439

காணவென்றால்யிடுப்புவலி சந்துவாதங் கழல்வாதங் குடல்வாதம் காணுதோடும், நாணவேவயிற்றுவலி விம்மல்போகும் நரம்பெல்லாம் பிகுத்திருத்தல் நளினமாகும், ஈணவேபிறவீச்சு பித்தம்போகும் எழி லானவாதமென்ற தெண்பதும்போம், சீணவேவயிருளைவு பெருமூச் சேரும் சிறப்பானபத்தியந்தா னில்லையாமே. 440

ஆமேதான்மருந்துண்ணுங் காலந்தன்னில் அப்பனேவாயு வென்ற பதார்த்தங்கேளு, போமேதான்சீதளமாம்பண்டமாகாபொலி வானகாரமுதல் மிகவுமாகா, தாமேதானிச்சாபத்தியந்தான்காரு சார் பாகமற்றதெல்லாமாகும்பாரு, நாமேதான்சொன்னபடி போகர்நூலு நாட்டிலேபொய்க்காது நளினமாமே. 441

## ஊர்க்குருவி லேகியம்

நளினமுடனின்னமொரு மார்க்கம்பாரு நாதாக்கள்சொன்ன தில்லை நாட்டுளோர்க்கு, நளினமென்றவடைக்கலந்தா ளுனேயாகும் கருவானவாண்குருவி கொண்டுவந்து, மளினமுடன்ரோமமுதல் எல் லாம்நீக்கி மாசற்றகுடல்தலைக ளெல்லாம்போக்கி, பளினமுடன்கருங் கோழி ரத்தஞ்சேரில் பாகமுடன்தான்பொரித்து யெடுத்திடாயே.

எடுத்துமிகப்பார்க்கையிலே யென்னசொல்வேன் யெழிலான சோரியது சுண்டியேதான், தொடுத்ததொருவடைக்கலமு மொன் றாய்ச்சேர்த்து துப்புரவாய்திரண்டுமல்லோ கரிபோலாக்கி, விடுத்த தொரு மாமிசத்தையெடுத்துக்கொண்டு விபரமுடன்சொல்லுகிறேன்

மைந்தாகேளு, கொடுத்திடவேலவணவகையிற் பந்தானும் கூறு வேண்பளிங்குடனே செப்பக்கேளே. 443

செப்பவென்றால்இந்துப்பு வராகன்ரண்டு தெளிவானகல்லுப்பு வராகன்ரண்டு, ஒப்பமுடன்வளையலுப்பு வராகன்ரண்டு ஒளியானமதி யுப்பு வராகன்ரண்டு, கெப்பமுடன்சாரமது வராகன்ரண்டு நேரான வங்காரம் வராகன்ரண்டு, நொப்பமுடன் சவர்க்காரம் வராகன்ரண்டு குழுறவேயித்தனையும் பொடியாய்ச்செய்யே. 444

செய்யவென்றால்பொடிதனிலே சேர்க்கக்கேளு செயலானசுக்கு டனே மிளகுகூட, பொய்யவேவோமமுடன் சீரந்தானும் பேரான கரியபோளந்தா னப்பா, மெய்யானபூரமென்ற பற்பந்தானும் மேலான ரசமென்ற செந்தூரந்தான், மையானபொடியாக்கி வொன்றாய்ச் சேர்த்து மார்க்கமுடன்நெய்தேனுங் கூட்டிடாயே. 445

கூட்டையிலேசர்க்கரையு மொன்றாய்ச்சேர்த்து குணமாகத்தான் கிளறி பதனம்பண்ணு, நாட்டமுடன்லேகியத்தை மண்டலந்தான் நலமுடனேகொண்டுவர பலனைக்கேளு, தீட்டமென்றகாளையிலே வயிர் நோய்போகும் திறமானகால்வீக்க மகோதரம்போம், வாட்டமுடன் சூதத்தின் திரட்சிபோகும் வாகானகட்டிமுதல் சூலைபோமே. 446

சூலையுடன்வாயுவென்ற தெண்பதும்போம் சூக்குமத்தின்நீரே ற்றமகன்றுபோகும், காலையிலேவாயூற லற்றுப்போகும் கதிப்புடனே கொதிப்புமுதல் காணுதோடும், மாலையிலே தான்காணு மண்டைக் குத்து மயக்கமுடன் றலையிடியுமாறிக்காணும், ஆலையிலேயகப்பட்ட கரும்புபோல அகன்றுமேபோகுமடா பிணிகள்தாமே. 447

பிணியானருதுகாலவியாதிரோகம் பேரானகெற்பத்தின்ரோகம் போகும், அணியானருத்திரமாங் குடல்தான்மூட்டி அப்பனேவாயு வென்ற கட்டிதானும், நணியானமகோதரமு மணுகாதப்பா நாடாது குடல்வலியும் போகும்பாரு, கணியானசோரியது கட்டிப்போகும் காறானகெற்பநோய் போகுந்தானே. 448

தானேகேள்சூதகத்தின் வாயுதீரும் தாக்கானகசரோக மெல் லாம்போகும், வேனேதான்திமிர்வாதம் குடலில்வாதம் மிக்கான பட்சமென்ற வாதம்போகும், கோனேதான் கெண்டையென்ற வாதம்போகும் கொடிதானயிடுப்புவலி போகும்பாரு, மானேதான் முழங்காலில் வாதம்போகு மகத்தானபாதமது வீக்கம்போமே. 449

வீக்கமதுயேகுமது யென்னசொல்வேன் மிக்கானதேகமது பிளப்புமெத்த, தூக்கமதுவதிகமுடன் சன்னலாகும் நாடியானநரம்புமுதல் துடிப்புமெத்த, தாக்கமுடன்சூதமதுதான் தலைமேற்கொண்டு சதா காலம்தலைவலிபு மிகுதிகாட்டும், ஊக்கமுடன்தயிலமது சொல்வோம் பாரு வுத்தமனேபோகரிஷி உண்மைகாணே. 450

## கெற்பச் சூட்டுக்குத் தயிலம்

உண்மையாமின்னமொரு மார்க்கம்பாரு வுத்தமனேநாதாக்கள் சொன்னதில்லை, வண்மையுடன்தயிலமது சாற்றக்கேளு வாகான யெண்ணையதுசேர்தானப்பா, திண்ணமுடன்கையான்சாற் சேர்தானப்பா தினமானமுடக்கொத்தான் சேர்தான்பாதி, நண்ணமுடன் கருந்துளசிசேர்தானப்பா நலமானநெல்லிச்சார் சேர்தான்கூட்டே.

கூட்டவே தழுதாழைச்சார்தாழுழி குணமானவழுதலையின் சார் தாழுழி, நீட்டமுடன் பசளைச்சார்தாழுழி நெடிதான குமரிச்சார் சார் தாழுழி, தேட்டமென்ற நீர்பூண்டு சார்தாழுழி தெனிவான கரந்தச் சார் சார்தாழுழி, வாட்டமுடன் பசுவின்பால் நாழியாகும் வளமான கடைசரக்கு சாற்றக்கேளே. 452

கேளேதான் கற்பவகைசாற்றக்கேளும் கெடியான வாலுழுவை யரிசிதானும், தாளமுடன் நன்னாரிமுத்தக்காசு தாக்கான சிரகமும் ஓமந்தானும், நீளமுடன் கார்போக மேலந்தானும் நிலையான கோஷ்ட முடன் மதுரந்தானும் பாளமுடன் வகிற்கட்டை செம்பூராணும் பாங் கான சந்தனமுடன் தேவதாமே. 453

தேவதாம்பட்டையுடன்கருஞ் சீரந்தான் தேற்றானுமெட்டியுடன் சித்திரத்தை, காவமென்ற வால்மிளகு சாதிக்காயும் கருவானபூப்பலை யும் தண்ணீர்விட்டான், சாபமென்ற கரிமஞ்சள் கஸ்தூரிமஞ்சள் சார்பானவெள்ளையென்ற மிளகுகூட்டி, தூபமென்ற சாம்பிராணி சமனை தாக துப்புரவாய்முக்கண்ணின் பாலாலாட்டே. 454

ஆட்டியேமெழுகுபதந் தன்னிற்காச்சி அப்பனே தான்வடித்து பதனம்பண்ணு, தாட்டிகமாய் சீசாவிலடைத்துமைந்தா தகைமை யுடன் ஒருதிங்களானபின்பு, நாட்டமுடன் தயிலமதை பிரயோகித் தால் நாடாது கெர்பத்தின் சூலைபோகும், ஓட்டமுடன் கெற்பத்தின் வாயுபோகும் ஓகோகோபொய்யாது உண்மையாமே. 455

உண்மையாம் தயிலமாம் உறுதிமெத்த வுத்தமனே பொறிச்சூடு விட்டேயோடும், திண்மையாம் பிடரிவலிசன்னிபோகும் திறளான வேர்வையது துள்ளியோடும், வண்மையாம் கையெரிவு காலெரிவுதானு மகத்தான வாயுவென்ற தெண்பதும்போம், நண்மையாம் காந்தலது மிகவேறுது நளினமுடன் போகரிஷி நவின்றவாரே. 456

## கந்தகத் திருவகம்

வாறுனவின்னமொரு மார்க்கம்பாரு வளமையுடன் கெந்தகமூ சேர்தானொன்று, நேறுனசீனமது சேர்தான்ரெட்டி நெடிதான பூநீறு சேர்தான்காலாம், பானுன உப்பதுவும் சேர்தான்பாதி பளிங்கான வளையலென்ற வுப்புத்தானும், தேறுனயெவாச்சாரம் சேர்தான்காலாம் சிறப்பான சரக்கெல்லாம் பொடியாய்ச்செய்யே. 457

செய்யவேவாலையென்ற பானைக்குள்ளே சீருடனே சரக்கெல்லாம் போட்டரைத்து, பையவேசக்கரமாம் வாலைவைத்துப் பாகமுடன் திருவகத்தையிறக்கிப்பாரு, மெய்யவேமூன்றுமுறை யிந்தபாக முயற்சி யுடன்றுணிறக்கி யெடுத்துக்கொண்டு, துய்யநல்லசீஷாவி லடைத்துக் கொண்டு துப்புரவாய்கற்பரணை மூடிடாயே. 458

மூடவேதிராவகத்தின் காரமப்பா மூவுலகம்தானெறிக்கும் கதி ரோன்போல, சாடவேசரக்குக்கு காலனுகும் சாங்கமுடன் திராவக மோ சுருக்குமெத்த, நீடவேதிராவகத்தை பதனம்பண்ணி நினைப்புட னே யின்னமொரு மார்க்கம்பாரு, கூடவேகண்டருட திராவகத்தைக் கூறுவேன்மானுக்கள் பிழைக்கத்தானே. 459

## துருசு திராவகம்

தானுனதுருசதுதான் சேர்தானொன்று தாக்கானசீனமது சேர் தானொன்று, வேனுனபூநீறு சேர்தான்பாதி வேகமுடன் கல்லுப்பு சேர்தான்காலாம், கோனுனவெண்காரம் சேர்தான்காலாம் கொப்பெ னவேவிவையெல்லாம் பொடியதாக்கி, மானுனயெனதையர் குருவை யெண்ணி மார்க்கமுடன்பானைதனில் கொட்டிடாயே. 460

கொட்டியேகுருசொன்னவளவாய்க்கூட்டி குணமாகச்சக்கரமாம் பானைதன்னில், திட்டமுடன்வாலைவைத்துச் சீலைசெய்து சிறப்புடனே யிருபக்கம் புனலும்வைத்து, சட்டமுடனடுப்பேற்றி எரிப்பாயானல் சார்புடனேதிராவகமு மிறங்கும்பாரு, நட்டமில்லாதிராவகமு மெடுத் துப்பாரு நாதாக்கள்செய்யார்க ளதிதந்தானே. 461

அதீதமென்றவித்தையிது வாலைவித்தை அவனியிலேசெப்புவது வருமைகாணும், கதீதமென்றதிராவகத்தை பதனம்பண்ணு கருவான சூதத்துக் குறுதிகாலன், நதீதமென்றகண்டருட திராவகத்தால் நாட்டிலேவெகுகோடி செய்வாரப்பா, பதீதமென்றதிராவகங்க ளென்ன சொல்வேன் பாகமுடன்போகரிஷி பயின்றவாறே. 462

## சாரத் திராவகம்

பயின்றதொருவின்னமொரு மார்க்கம்பாரு பாங்கான சாரமது சேர்தானொன்று, நவின்றதொருபூநீறு சேர்தான்பாதி நலமான சீனமது சேர்தானொன்று, துயின்றதொருகல்லுப்பு சேர்தான்காலு சுயமானவெண்காரம்சேர்தானொன்று, அயின்றதொருசரக்கெல்லாமொன்றாய்க்கூட்டி அப்பனேகலசமென்ற பாணைக்கேற்றே. 463

ஏற்றவேசக்கரமாம் வாலைவைத்து எழிலாகச்சீலையது வலுவாய்ச்செய்து, காற்றதுதான்போகாமல் அடுப்பிலேற்றி கரகமென்ற பாணைக்கு குழலும்வைத்து, போற்றமுடன் புனல்வழியே சலமும்போக பொங்கமுடன்தானெரிப்பாய் சாமநேரம், கூற்றனைப்போல் திராவகமுமிறங்கும்பாரு கொடிதானவேகமது சொல்லொண்ணாதே. 464

சொல்லவேநாவேது பாவுமேது சொற்பெரியதிராவகமும் காரமெத்த, வெல்லவேசரக்குக்கு மித்திரகாலன் வெகுகொடியன் வெகுநெடியன்சாரனப்பா, புல்லவேதிராவகத்தை பதனம்பண்ணு பொங்கமுடன் சீஷாவில் விட்டுமைந்தா, மெல்லவேமேற்கல்லு கொண்டுமூடி மிக்கானதிராவகத்தை வுறுதிபண்ணே. 465

## வெடியுப்பு திராவகம்

பண்ணவேயின்னமொரு மார்க்கம்பாரு பாங்கானமதியுப்பு சேர்தானொன்று, உண்ணவேசீனமது யிருசேராகும் வுத்தமனேசாரமது கால்சேராகும், திண்ணமுடன்பூநீறு சேர்தான்பாதி தெளிவானகல்லுப்புசேர்தான் கால்தான், வண்ணமுடன்சரக்கெல்லா மொன்றாய்க்கூட்டி வளமாகத்தான்பொடித்து கலசமாட்டே. 466

ஆட்டியேவாலுகையை மேலேவைத்து அப்பனேசீலையது வலுவாய்ச்செய்து,நீட்டியேதிராவகமுமிறக்கிப்பாருநிலையானதிராவகமோ காந்தமெத்த, பூட்டகமாய்தானெடுத்துச் சீஷாவிற்குள் புகழாகத்தானடைத்து பதனம்பண்ணு, நாட்டமுடன் திராவகமோ நவிலப்போமோ நாதாக்கள்செய்யார்கள் நன்மைபாரே. 467

## பாஷாணத் திராவகம்

நன்மையுடன்யின்னமொரு மார்க்கம்பாரு நாதாக்கள்கண்ட தில்லை சுருக்குவேதை, உண்மையாயுறைக்கிறேன் பாஷாணந்தான் வுத்தமனேசங்கென்ற பாஷாணந்தான், திண்மையுடன்சேராது தானென்றேயாகும் தெளிவானசீனமது ரெண்டேயாகும், கண்மையுடன் பூநீறு காலேயாகும் கதிப்பானவளையலுப்பு கால்தான்கூட்டே, 468

கூட்டவென்றால்கலுவத்திற் பொடியாய்ச்செய்து பொங்கமுடன் கலசமென்றபானை தன்னில், நீட்டமென்றபொடிதனையேபாண்டமிட்டு நேர்புடனேவாலுகையை மேலேவைத்து, தாட்டிகமாய்மூடியது வலுவாய்ச்செய்து சாங்கமுடன் திராவகத்தை யெறக்கிப்பாரு, நாட்டமுடன்திராவகத்தை பதனம்பண்ணு நலமாகசீஷாவிலடைத்திடாயே.

அடைத்துமேதிராவகமோ காரமெத்த அப்பனேதிராவகத்தால் லோகம்நீறும், புடைப்புடனேலோகத்துக் காலனுகும் புகழாகசத்துரு மித்துருதானுகும், படைப்புடனேதிராவகத்தால் காரசாரம் பாக முடன்றூன்மடியும் பண்போமெத்த, கடைப்புடனேயிதனுலே வயமு மாளும் கருவானதிராவகமு மென்பார்தானே. 470

## சங்கு அயத்திராவகம்

தாமானவின்னமொரு கருமானங்கேள் தகைமையுடன் வயமது தான்சேர்தானென்று, காமானபாஷாணம்சரியதாககடிதானவயத்துடனே ஒக்கச்சேர்த்து, நாமானபூநீறுவகையதாக நலமானவளையலுப்புக் காலதாக, பாமானசீனமது ரெட்டிப்பாக பாகமுடன்றூன்போட்டுக் கலசமூடே. 471

மூடவேவாலுகையை மேலேவைத்து முயற்சியுடன்சீலையது வலுவாய்ச்செய்து, தேடையிலேவடுப்பேற்றி எரிக்கும்போது தெளிவாக திராவகமுமிறங்கும்பாரு, நாடயிலேபுனலாலே சலமுமோடி நலமானதிராவகத்துக் குபிருமாச்சு, ஊடையிலேதிராவகத்தால் காரமெத்த வுத்தமனேசெந்தூரக் குருவுமாச்சே. 472

ஆச்சென்றுவிடுகாதே யின்னம்பாரு அப்பனேசெந்தூரமிதனுலாகும், போச்சென்றுபோகாதேபுண்ணியாகேள் பொங்கமுடனின்னமொரு பாகஞ்சொல்வேன், தீச்சென்றபாஷாணஞ் சகலத்துக்கும் தெளிவாகயிந்தமுறை செய்யலாகும், மூச்சப்பாசகலபுத பாஷாணத்தின் மூர்க்கமெல்லாஞ்சத்துருவால் முறிக்கலாச்சே. 473

## சீரகத் திராவகம்

முறிக்கலாம்பலகோடி வேதையாகும் மோசமில்லைதிராவகங்கள் காரமெத்த, தறிக்கலாமின்னமொரு பாகங்கேளு, தாக்கானசீரகமும் சேர்தானப்பா, செரிக்கவேசலமதுதான்ரெட்டிப்பாகும் சிறப்புடனே பூநீறுகாலதாகும், நெறியுடனேபாண்டமெனும் கரகத்துள்ளே நேர் புடனேசலத்தோடே கொட்டிடாயே. 474

கொட்டியேகரகத்தின் மேலேயப்பா குணமாகவாலைதனை மேலே வைத்து, திட்டமுடன்சீலையது வலுவாய்ச்செய்து திறமுடனேயடுப் பேற்றி யெரிப்பாயானால், நட்டமில்லாத்திராவகமு மிறங்கும்பாரு நலமானசீரகத்தின் வேகமெத்த, பட்டவுடன்பித்தம் நாற்பதுவும் போகும் பாங்கானசீரகத்தின் பண்புதாமே. 475

தாமானசீரகத்தின் தயிலந்தன்னை தயவுடனே மூன்றுமுறை யிப்படியேசெய்ய, பாமானவாலுகையால் காதமேறி பரிவுடனேபுகை யோடு நெடிதானாகும், காமானதயிலமது என்னசொல்வேன் காசினி யில்சித்தர்களுங் காணமாட்டார், பூமானும்காலாங்கி நாதர்பாதம் புகழ்ச்சியுடன்பாடினேன் போகர்தானே. 476

## ஓமத் தயிலம்

தானானவின்னமொரு பாகம்பாரு தயவுடனேசொல்லுகிறேன் மைந்தாகேளு, வேனானஓமமது சேர்தானப்பா வேகமுடன்கொண்டு வந்து பாண்டமிட்டு, பானானசலமதுவும் ரெட்டிப்பிட்டு பாங்குடனே பூநீறு காலதாக, மானானசலமதனை விட்டபின்பு மதிப்புடனே வாலு கையை மேலேவையே. 477

வைக்கவேசீலையது வலுவாய்ச்செய்து வாகுடனேதிராவகத்தை வாங்கிமைந்தா, மெய்க்கவேமூன்றுமுறை யிப்படியேசெய்து மேன் மையுடன்திராவகத்தைஎடுத்துக்கொண்டு, மொய்க்கவேமுன்சொன்ன திராவகமுமப்பா மோசமதுவாராமல் செப்பக்கேளு, பொய்க்காமல் சரியெடையாய் எடுத்துக்கொண்டு, பொன்னவனேவெள்ளுள்ளி சேர் தான்போடே. 478

## பெருங்காய வைப்பு

போடவேதிராவகத்தி லாட்டுமைந்தா புகழானவெள்ளுள்ளி கை போலாகும், நீடவேபூண்டுக்குகாயமேரி நிலையானவெள்ளுள்ளி கார மாச்சு, பாடவேசெம்மறியின் தோலாலப்பா பாகமுடன்தான் பொதி

ந்து தைத்துப்போடு, சாடவேமண்டலஞ்சென் றெடுத்துப்பாரு சரக் கானபெருங்காயம் காரமாச்சே. 479

காயமாமின்னமொரு மார்க்கம்பாரு கருவானகாசியென்ற கட்டி யப்பா, நேயமுடன்சொல்லுகிறேன் மைந்தாகேளு நேர்புடனே வகி லத்தின் தூளுங்கூட்டி, பாயமுடன்பாக்கினிட கியாழந்தன்னால் பாகமு டன்மூன்றுநா ளாட்டிமைந்தா, தூயமுடன்ரவிதனிலே காயப்போடு துப்புரவாம்காசியென்ற கட்டியாச்சே. 480

## இரும்புசாயம் ஆடைகளுக்கு வரணம்

கட்டியென்னும்ரத்தமென்ற பாளமாச்சு காசினியி லாருந்தான் கண்டதில்லை, திட்டமுடன்சொல்லிவிட்டோம் சினத்தாற்கு திறமுட னேகண்டறிந்தோர்புத்திவானும், சட்டமுடனின்னமொரு பாகம்சொ ல்வோம் சார்வானயிருப்பினிட சத்தைவாங்கு, வட்டமென்றகொப்ப றையில் துப்பைக்கொட்டி வாகுடனே செம்மரத்தின் தூள்தான் போடே. 481

போடையிலேசலமதுதான் பாண்டமிட்டு பொங்கமுடன் பட்சம் சென்றெடுத்துப்பாரு, கூடையிலேயிரண்டு மொன்றாய் சேர்ந்துகொ ண்டு குணமானசிட்டம்போ லிருக்கும்பாரு, நாட்டமுடனிரும்பென்ற வாலைக்குள்ளே நளினமுடன்தான்கொட்டி வரைத்திட்டேதான், சாட வே சீலைக்கட்டு காரமேற்றி சார்பாகக்கரைகட்டி யோரந்தீத்தே. 482

தீத்தையிலேபலபலவாம் ரூபங்காட்டும் சிவப்புமுதல் பஞ்சவர் ணம்காணலாகும், தீத்தையிலேகாரங்களில்லாப்பக்கம் தெளிவானவர் ணங்கள்காணலாகும், தீத்தமுடன்வர்னங்க ளெழுதலாகும் திறமான யிருப்பினிட காரந்தன்னால், சித்தமுடன்செம்பினிட சத்துசேர்த்து சிறப்பாகத்தானுருக்கி யெடுத்திடாயே. 483

எடுத்துமேவயதினிட பாகம்போல எழிலாகவகிலமாம்பட்டைத் தூளும், தொடுத்துமேசெம்பினிட சத்துசேர்த்து தோற்றமுடனலை தனி லரைத்துக்கொண்டு, தடுத்துமேவயதினிட வர்னத்தாலும் தாக் கானசெம்பினிட வர்னத்தாலும், அடுத்துமேசீலைகட்டு வர்னமாச்சு வப்பனேசீனபதி வுளவுதானே. 484

## சீனபதி காயித புகை யாலை

உளவானசீனபதி வேதைமார்க்கம் உத்தமனேவேடிக்கை யின் னஞ்சொல்வோம், தலமானகாயிதம் சன்னமட்டும் தான்செய்யும் விப

ரங்கள் சாற்றக்கேளு, நடமானதட்மதுவும் கெஜநாறுகும் ஈனமுட
னகலமது கெஜநாறுகும், மனமானசுற்றோக் கிராதிக்கம்பி மார்க்க
முடன்றமைத்து வாலேபூட்டே. 485

பூட்டவென்றால் தலைபக்கம் கரும்பாலைபோல புகழான குழி
யொன்று தடாகமொன்று, நீட்டமுடன்தடாகத்தின் சுற்றுவோரம்
நிலையானவாய்க்கால்போல் குழையுண்டாக்கி, பூட்டமுடன்குழைதனி
லே யாலைவைத்துப் பொங்கமுடன்தொட்டியென்ற கிணறுண்டாக்கி,
வாட்டமுடன்தொட்டிக்குள் தூண்போல்கம்பி வகுப்புடனே தான
மைத்து சக்கரமாட்டே. 486

சக்கரமுமாட்டியே வாலைதன்னைச் சாங்கமுடன் புகையென்ற
வாலைதன்னால், தக்கபடி திருப்பவுடன்கோணித்தன்னைச் சாந்தமுடன்
தானரைத்துக்குளத்துக்கேற்றி, ஒக்கவேதெளிவதனை மேலேநோக்கி
உவமையுடன்போகவே வழியுண்டாக்கி, பக்கமுடன் தெளிவதனில்
பூநீர்சேர்த்து சாம்புடனேதொட்டிதனில் கரைத்திடாயே. 487

கரைத்துமேமூன்றுநாள் சென்றபின்பு கருவாக தொட்டிதனில்
சரக்கைவைத்து, நிரைப்புடனேபடல்கட்டிக்காயுதத்தை நேர்புடனே
தானெடுக்க வண்ணம்பாரு, திரைப்புடனேவாலையென்ற கையிலப்பா
திறமானபிரதமை யொன்றிருக்கும், முறைப்படியேகைதனிலே படல்
தானிய முளையாமல்தொட்டிதனில் கலக்கிடாயே. 488

கலக்கையிலேவண்டலதுபடல்மேல்சார்ந்து கடினமுடன்சக்கரத்
தைச் சுத்திவந்து, நிலத்தினதுமேடையிலே சட்டந்தன்னில் நிலைமை
யுடன்றனமைத்து மேலேவைக்கும், புலப்புடனேமறுவாலை தனிலி
ருந்து புகழாகச்சிலையது மூடிக்கொள்ளும், தலப்புடனே பின்னுமந்த
பதுமைதானும் தடாகத்தின்வண்டல்தனை யெடுக்குந்தானே. 489

எடுக்குமேசக்கரமா மாலைதன்னால் எழிலானவண்டலுடன் சரக்
கையெல்லாம், தொடுக்கவே மேற்படியில் கொண்டுசென்று துப்புர
வாய்வாலையென்ற சட்டந்தன்னில், படுக்குமேபடல்தானும் விட்ட
போது பாங்குடனேசிலையதுமூடிக்கொள்ளும், அடுக்குமேயிப்படியே
பலகாலுந்தான் ஆலையதுசுழன்றுமே யோடுந்தானே. 490

ஓடயிலேமுதற்றரந்தாலைதன்னில் ஒளிவானகாகிதங்கள்சன்ன
மாகும்,நீடமுடனிரண்டாங்காலாலைதன்னில் நேர்புடனேதானடக்கும்
வண்மைபாரு, சாடலுடன்பஞ்சியென்ற வாலையுண்டு சட்டமுடன்
முன்குழைபோ லாணித்தூணும், வாடலுடன் குளமதனில் வண்டல்
சேரும் வாகுடனேபஞ்சியென்ற வண்டல்தானே. 491

வண்டலுடன்சுத்தித்த பூரப்பா வாகுடனே தான்சேர்த்து குழம்புபோலாம், அண்டமெனும்நட்சத்திர வொளிவுவீசும் அப்பனே வண்டல்தனை கலக்கிக்கொண்டு, தண்டமுடன்சக்கர வாலேதன்னைச் சாங்கமுடன்றூன்திருப் பிரதமைதானும் கொண்டபடி படல்சாத்தி வண்டல்தன்னைக் கொப்பனவேதானெடுக்கும் வண்மைபாரே. 492

பார்க்கையிலேபடல்சாத்தி தானெடுத்துப் பாகமுடன்மேற்புறத் தில் கொண்டுசென்று, தீர்க்கமுடன் சட்டமென்ற படலின்மேலே திறமாக தானமைக்கும் மேல்வட்டத்தில் ஆர்க்கமுடன் தன்மேலே சீலேகொண்டு அப்பனேமேல்மூடி யாலேயாலே, நீக்கலது படலதனை மேலேசாத்தும் நெடிதானசக்கரத்தி நேமைதானே. 493

காணயிலேசக்கரமா மாலேதன்னில் கருத்துடனே தான்மூடிக்கச் சலமும்நீங்கி, நீணமுடன்கசுவலது நீங்கியேதான் நேரான காயிதமும் சன்னமாச்சு, வேணபடிமூன்றுங்காலாலேதன்னில் வேகமுடன்திருப்ப வுபாயங்கேளு, மாணவென்றசக்கரமு மாடிநிற்கும் மன்னவனே நடுக் குளமாங் குழிதான்பாரே. 494

குழியானசதுரமது பள்ளத்துள்ளே கூரானதூணதுதான் நடு மையத்தில், வழியானசக்கரமா மாலேதன்னில் வகுப்பான பஞ்சினிட மஷ்டுதன்னால், முழியானபூநீறு மொக்கச்சேர்த்து முயலவேதான் மசிந்து குழிக்குள்தானும், கழியானமயணம்போ லாகும்பாரு கருத்து டனேதானெடுக்கும் கருவைக்கேளே. 495

கருவானமேல்வட்டஞ் சக்கரத்தில் கடினமுடனலையது வோடிப் பாயும், திருவானவண்டலது மேலேதானும் தெளிவுடனேபடல்போல சென்றுநிற்கும், குருவானநடுமைய சுக்கான்தானும் கொப்பெனவே மேல்வட்டம் படல்தான்சாத்தும், தருவானவண்டல்மேல் படல்தான் மூடி சார்பாகசீலேயது பரவிக்கொள்ளே. 496

கொள்ளயிலேமேல்சட்டம் நின்றுமூடிக் கொப்பெனவே படலா லே யாலேசுற்றி, மெள்ளவேசீலேயது மேலேமூடி மேன்மையுடன் சல மதனை வடியச்செய்யும், தள்ளயிலேசக்கரமாம் பலகையாலேசாங்க முடன்வாலேயின்றன் திருப்பல்காணும், துள்ளியே திருப்பலது நின்றபோது சூட்சத்தால்காயிதமு மெடுக்கலாமே. 497

எடுக்கலாம்வாலேவிட்டு எடுத்தபோது எழிலான காற்றதனில் காயப்போடு, தொடுக்கவேரவியென்ற வொளிதான்பட்டால் தோற்ற முடன்காயிதமும் வெளுப்புமெத்த, படுக்கமுடனிப்படியே யாலேதன்

ஞல் பலபலவாம்காயிதங்க ளெடுக்கலாகும், கொடுக்கவே வாலைகளும் அனேகமுண்டு கொப்பெனவேயதன்கூறு சொல்லொண்ணுதே. 498

சொல்லவேநஞ்சிதனை மேலேபூசி சுத்தமுடன்காயிதங்களெடுக்க லாகும், வெல்லவேகஞ்சியிஞல் வாலைதன்னில் மெருகுடனேசக்கரமா முருளையுண்டு, புள்ளவேயுருளைக்குப் பஞ்சுபூட்டிப் பொங்கமுடன் தோலாலேயாலையாகும், பங்கமில்லாக்காயிதத்தை யாலைக்கிய பாகமு டன்மெருகுடனே தள்ளும்பாரே. 499

தள்ளயிலேசக்கரமு மோடித்தானும் சாங்கமுடன் ருனெடுத்து வடுக்கும்பாரு, துள்ளியேபடல்தானும் மேலேயேற்றித் துப்புரவா யடிவாரத் தொட்டிக்குள்ளே, மெள்ளவேகொண்டுசென்று யடுக்கிப் பின்பு மேற்புரத்தில்சட்டமதிலேறி நிற்கும், கொள்ளவே சட்டமெ ன்ற வாலையப்பா கொடிதான வாலைக்குகூறுண்டாமே. 500

கூருன வாலையிலேவோரமப்பா கொப்பெனவேகட்டுவகை தரிக்க லாகும், தாரானகாயிதமுஞ் சுற்றேரந்தான் சாங்கமுடன் திருகியல் லோ நிற்கும்பாரு, சேருனவாலையது வோடிக்கொண்டு தெளிவான புகையுடனே வாடிநிற்கும், பாருனகட்டுவகை தறித்தபின்பு பாகமு டன்கிழ்புறமாய் தள்ளலாச்சே. 501

ஆச்சென்றவாலையது நிந்தித்தானும் அப்பனே லட்சமதுகோடிக் கோடும், காச்சலென்றகடிதாசி செய்யும்நேர்மை காசினியில் சித்தர் முனி செய்ததில்லை, மாய்ச்சலுடன்சீனபதி யானுஞ்சென்று மார்க்க முடன்கருவான வேதையாவும், பாச்சலுடன்காலாங்கி நாதர்தம்மால் பாலித்தேதன்வெகுகோடி வித்தைதானே. 502

## வாரணபேத கடிதாசி செய்யும் விபரம்

வித்தையாமின்னமொரு பாகங்கேளு வேடிக்கைவிநோதமென்ற வித்தையப்பா, சுத்தமுடன் பஞ்சவர்ன மையிஞலே சுருதியுடஞலை தனிலேற்றிமைந்தா, பத்தமுடஞலைவாய்ப் படலின்மேலே பாங்கு டனே பூசியல்லோ வாலைக்குள்ளே, வெத்தியென்ற காகிதத்தை வாலை தன்னில் விருப்பமுடன்றன் கொடுத்து செப்பக்கேளே. 503

கேளேதான் காகிதம்படிந்தபின்பு கெடியான வன்னமென்ற பேதிதன்னை, தாளவேதிராவகமாய் எடுத்துக்கொண்டு தகைமையுடன் சபுரியின்றன்மயிரிஞலே, மீளவேகத்தையாய்க் கட்டிக்கொண்டு விரு ப்பமுடன்றன்றெளிக்க வரணம்பாயும், சாளவேகடிதமெல்லாம் வர ணபேதம் சார்பாகக்கட்டியல்லோ பரவுந்தானே. 504

தானனவனேகவிதம் செய்யலாகும் தகையுடன் வரணமென்ற வாலேதன்னால், கோனனையென்னையர் காலாங்கிநாதர் கொட்டினார் லோகத்திலனந்தம்வேதை, பானகயெனைப்போல வெளியரங்கம் பாடினார் லோகத்து மாந்தற்கில்லை, தேனனவமுர்தம்போல் சத்தமாண்டம் திரட்டினேன் யேழாயிர முண்மைபாரே. 505

## சீனத்தாற்கு வஸ்துவேதை

உண்மையாமின்னமொரு பாகங்கேளு வுத்தமனே வஸ்துவென்ற போதையப்பா, திண்மையாய் நெல்லிவேர் பனையின்வேரும் திறமான மாதளையின் கெஞ்சாவேரும், கண்மையாம் நன்னரியலரிவேறும் கருவானவாவரையின் வேறுதானும், பண்மையாம் கிச்சிலியின்வேரும் கூட்டி பாங்கானவேலனிட பட்டைகூட்டே. 506

கூட்டியே வெள்வேலன் பட்டைதானும் குணமான சரியெடையா எடுத்துக் கொண்டு, மாட்டியே பெரும்பாண்டம் தன்னிலிட்டு மதிப்புடனே சலமதுவும் நிறப்பவிட்டு, வாட்டமுடன் பத்து நாளூறிப்பின்பு வகுப்புடனே சரக்கதனில் பனவெல்லந்தான், நீட்டமுடன் தான் போட்டு யடுப்பிலேற்றி நிலைமையுடன் திராவகமா யிறக்கக்கேளே.

இரக்கவென்றால்வாலையது திராவகத்தை எழிலான பாண்டமது யிறக்கிப்பாரு, சிறக்கவேதிராவகமும் காரமெத்த சீரானதிராவகமும் பதனம்பண்ணு, மறைக்கவே வஸ்துசுத்தி சரக்குதன்னை முய்யவே நாதாக்கள் செய்யமாட்டார், திறக்கவே பலநூலும் கண்டாராய்ந்து தீரமுடன் பாடிவைத்தேன் மாந்தர்தாமே. 508

ஆமேதான்சரக்குசுத்தி கொண்டபோது அப்பனேவருளுண்டு ஞானமுண்டு, தாமேதான்நாதாக்கள் மனமுவந்து தயையுடனே வேணதெல்லாமீவார்பாரு, போமேதான் புகழுண்டு செல்வமுண்டு பொலிவானகருணையுடன் வரமுமுண்டு, வேமேதானெப்போது மனமுவந்து விருப்பமுடன் பட்சமது வைப்பார்பாரே. 509

தானனசதாநிலையைக் காணலாகும் தாக்கானசின்மயத்தை யறியலாகும், வேனன வறுகோண வட்டத்துள்ளே வேண்டியதோர் கருவிகரணாதியெல்லாம், மானனவாரா தாரத்திலுண்மை மார்க்கமுடன் காணுதற்கு மயக்கமில்லை, கோனனசிற்பரத்தை யடுக்கலாகும்கொற்றவனே தவநிலையில் நிற்பதாமே. 510

## சற்பராஜன் மாத்திரை

நிற்பாரேயின்னமொரு மார்க்கம்பாரு நிலையானமாணுக்கள் பிழைக்கவென்று, துற்பரவாய் குளிகையது சொல்லப்போமோ துடியான பாஷாணசற்பராஜன், பற்குணமாம் பாஷாணமொருவர்காணூர் பாருலகில் கண்டறிந்து பகுத்துரைப்பேன், சற்பமென்ற குளிகையது பெருமைமெத்த சர்வகுணரோகிகட்கும் புகட்டலாமே. 511

புகட்டலாம் சங்கென்ற பாஷாணந்தான் புகலவே களஞ்சி எடை எடுக்கலாகும், பகட்டுடைய தாளகமுங் களஞ்சிரெண்டு பாங்கான பூரமது களஞ்சிநாலு, தகட்டான வப்பிரகம் களஞ்சிரண்டு தகமையுள்ள வீரமது களஞ்சியொன்று, மகட்டுடைய துரிசியதுகளஞ்சி யொன்று மாசற்ற ரசமதுவும் களஞ்சியொன்றே. 512

ஒன்றானசூதமுடன் துத்தங்கூட்டி வுத்தமனே சிங்கியதுகளஞ்சி மூன்று, பன்றானகெந்தகமும் களஞ்சியாறு பாங்கானலிங்கமது களஞ்சிநாலு, கன்றானகெவுரியது களஞ்சியொன்று கருவானதீமுறுகல் களஞ்சியொன்று, தன்றானமனோசிலையும் களஞ்சியொன்று தாக்கானுகூடமே களஞ்சியொன்றே. 513

களஞ்சியாம் காந்தமது களஞ்சிரண்டு கடிதானபொன்னிமிளை களஞ்சியொன்று, தளமுடைய சூதசெந்தூரமொன்று தாக்கானவரப்பொடியுங்களஞ்சி யொன்று, மளமானவயத்தொட்டிக் களஞ்சியொன்று மார்க்கமுடன்செங்கந்தி களஞ்சிரெண்டு, பளமானகருக்கடல் களஞ்சிரண்டு பாங்கானசீனமது களஞ்சிநாலே. 514

நாலான கல்நாறு களஞ்சியெட்டு நலமானகல்மதம் களஞ்சியாறு, பாலான சிலாசத்துக் களஞ்சிரண்டு பதிவானபவளமது களஞ்சிநாலு, சேலானமுத்ததுவும் களஞ்சிரண்டு செயலானசங்கதுவும் களஞ்சியாறு, கோலானமான்கொம்பு களஞ்சியெட்டு கூறானவகிற்சிலையுங் களஞ்சிபத்தே. 515

பத்தானகடைசரக்கு சாற்றக்கேளு பாங்கானசுக்கதுவும் களஞ்சியெட்டு, முத்தானமிளகதுவும் களஞ்சியாறு முயலானபாங்கியது களஞ்சியெட்டு, மத்தானலவங்கமது களஞ்சிநாலு மகத்தானசாதிக்காய் களஞ்சிரண்டு, சித்தானரோசனையும்களஞ்சியாறு சிறப்பானவால்மிளகு களஞ்சிமூன்றே. 516

மூன்றானமிளகுடனே கருவாய்ப்பட்டை மூர்க்கமாய்கருஞ்சீரம் களஞ்சிரண்டு, தான்றானபத்திரியுங் களஞ்சியொன்று தருவானதக்

கோலம் களஞ்சிரண்டு, கான்றானகார்கோலங் களஞ்சியொன்று கரு வானமாசிக்காய் களஞ்சிரண்டு, பான்றானதேசாவரம் களஞ்சியொன்று பாகமுடன்வாய்விளங்க ரெண்டாய்ச்சேரே. 517

சேர்க்கையிலேவசம்பதுவும் களஞ்சியொன்று செயலான சேங் கொட்டை களஞ்சியொன்று, மார்க்கமுடன்கடுக்காய்த்தோல் களஞ்சி ரண்டு கருவானகருஞ்சீரம் களஞ்சியொன்று, தீர்க்கமுடன்நற்சீரங் களஞ்சியொன்று திடமானசிறுதேக்கு களஞ்சியொன்று ஏர்க்கவே தாளகமுங்களஞ்சியெட்டு எழிலானமுந்திரிக ளஞ்சிரண்டே 518

இரண்டானஎள்ளுடனே களஞ்சிரண்டு இபலானஓமமுடன் களஞ்சிரண்டு, பண்டானகொள்ளுடனே களஞ்சியொன்று பாங்கான யெட்டிவிரை களஞ்சியொன்று, குண்டானதேற்றான்விரை களஞ்சி ரண்டு கொடிதானகொடிவேலி களஞ்சியொன்று, திண்டானவாலுழு வை களஞ்சியொன்று திறமானசோம்பதுவும் களஞ்சிநாலே. 519

நாலுடனேதிப்பிலியும் களஞ்சியொன்று நலமானகஸ்தூரி களஞ் சியொன்று, பாலுடனேகுங்குமப்பூ களஞ்சியொன்று பாங்கானகோடி யது களஞ்சிநாலு, சேலுடனேமுத்தமது களஞ்சிரெண்டு செழிப் பானதான்றிக்காய் களஞ்சிநாலு, காலுடனெநெல்லியது களஞ்சிரண்டு கருவான முள்ளியதுகளஞ்சியாறே. 520

ஆறானசிவதையது களஞ்சிநாலு அப்பனேநன்னாரி களஞ்சி பத்து, நேரானபற்பாடம் களஞ்சியாறு நேரானசிறுதேக்கு களஞ்சி ரண்டு, தாரானபற்படகம் களஞ்சிரண்டு தளிரானசோரியது களஞ்சி ரண்டு, சேரானசெம்பூரான்களஞ்சிரண்டு சிறப்பானதேசாவின் வர முந்தானே. 521

தானானவரமதுவும் களஞ்சிரண்டு தாக்கானமயிலிறகு களஞ்சி நாலு, வேனான வலம்புரியுங் களஞ்சியொன்று வியர்வானஏலமது கள ஞ்சிஎட்டு, பானானசாம்பிராணி களஞ்சிநாலு பதமானரோகணியுங் களஞ்சியெட்டு, தாமானமகரப்பூ களஞ்சிரண்டு தகமையுடன் குரோ சாணி களஞ்சிபத்தே. 522

பத்தானநாகப்பூ களஞ்சியொன்று பாகமுடன்சித்தரத்தைக் களஞ்சியொன்று, சித்தானநிலப்பனையுங் களஞ்சியொன்று சிறப்பான பூமிசர்க்கரைதானொன்று, புத்தானவட்டதிப்பிலிதானொன்று புக ழானவாய்விளங்கம் களஞ்சியொன்று, முத்தானவன்னமெனும் பேதி தானு முயற்சியுடன்சாத்திரத்தின் பேதிதானே. 523

பேதியாம்மாமிஷமுங் களஞ்சியொன்று பேரானயிருமஞ்சள் மர மஞ்சள்தானும், வாதியாய்குன்றிமணி களஞ்சியாறு வகுப்பானமுட்டி யுடன்பேராமுட்டி, . சாதியாமதுரமுடனக்கிராகாரம் சாங்கமுடன் களஞ்சியது ரண்டதாகும், மேதியாம்நெருஞ்சியது ரண்டதாகும் மேலானகளஞ்சியது ரண்டதாமே. 524

தாமானவெள்ளுள்ளி களஞ்சியாறு தாக்கானகசகசா களஞ்சி ரண்டு, காமானசரக்கெல்லா மொன்றாய்க்கூட்டிக் கருவாகத்தானரை க்க விபரங்கேளு, நாமானமூலிவகை யுரைப்போம்பாராய் நாட்டிலே நாதாக்கள்சொன்னதில்லை, பாமானகையான்சார் சாமம்நாலு பாங்கு டனேதானரைப்பாய் மைந்தாகேளே. 525

கேளேதான்நற்கையான் சாமம்நாலு கொடியானபொற்கையான் சாமம்நாலு, பாலேதான்போகாமல் யரைப்பாயப்பா பாகமுடன்குலா மல்லி சாற்றிலே, தாளவேதக்காளிச்சாற்றிலே சாங்கமுடன்று னரைப்பாய் நாலுசாமம், மாளவேபுளியாரை சாமம்நாலு மயங்காமல் தானரைப்பாய் மகிபர்தானே. 526

தானேகேள்நீலியின்றன் சாமம்நாலு தருவானவாதொண்டைச் சாமம்நாலு, மானேகேள்பொன்னாவரைச் சாமம்நாலு மார்க்கமுடன் பாற்சுரண்டி சாமம்நாலு, தேனேகேள்மலைத்தேனு சாமம்நாலுதெளி வானநீர்மிட்டான் சாமம்நாலு, வேலுனகவுதும்பைச் சாமம்நாலு விருப்பமுடன் தானரைப்பாய் பண்பாய்தானே. 527

பண்பானதாளிச்சார் சாமம்நாலு பாங்கானகற்றாழைச் சாமம் நாலு, திண்பானகொள்ளிலைச்சார் சாமம்நாலு திடமானயீருள்ளிச் சாமம்நாலு, நண்பானவரிக்குமட்டிச் சாமம்நாலு நலமானபேய்க்கு மட்டிச் சாமம்நாலு, கண்பானகருப்பன்சார் சாமம்நாலு கதிரான மேனிச்சார் சாமம்நாலே. 528

நாலானமுசுக்கைச்சார் சாமம்நாலு நலமானமாதுளையின் சாமம் நாலு, காலானமுருங்கைப்பூ சாமம்நாலு கடிதானமுடக்கொத்தான் சாமம்நாலு, தாலானமாந்துளிரு சாமம்நாலு தாக்கானசெங்தோன்றி சாமம்நாலு, நாலானவெங்தோன்றிச் சாமம்நாலு நுணாவுடனேசெம் பருத்திச் சாமம்நாலே. 529

சாமந்தானரைக்கையிலே யின்னங்கேளு சாங்கமுடன்பழச்சாறு லாறுசாமம், நேமமுடன்தானரைப்பாய் தேங்காய்ப்பாலால் நேரான வாறுவகை செயநீர்தன்னால், தாமமுடன்யெண்சாம மறைத்தபோது

தகைமையுள்ளசரக்கெல்லா மடிந்துமல்லோ, சாமமுடன்மெழுகது வாய் மைபோலாகி சார்பானவெண்ணைபோ லிருக்கும்பாரே. 530

பாரேதான்மெழுகெடுத்து பதனம்பண்ணு பாங்கானகாயசித்தி மருந்தென்பார்பார், சீரேதான்மண்டலங்கள் கொண்டுசென்றால் திறளானவியாதியது ஏகும்பாரு, கூரேதான்சொன்னபடி வியாதிமார்க்கம் கூறுவோமாணுக்கள் பிழைக்கவென்று, நேரேதான்மேகமென்ற திருபதும்போய் நெடிதானகுஷ்டமதி னெட்டும்போமே. 531

போகுமேகரப்பான்பதி னெட்டும்போகும் பொல்லாதகுன்மமது எட்டும்போகும், ஏகுமேவாயுமென்ற தெண்பதும்போம் யெழிலானபித்தம்நாற் பதுவும்போகும், சாகுமேசேத்துமங்கள் தொண்ணூற்றாருஞ் சார்வானகிரந்திபதி னெட்டும்போகும், வேகுமேசூலைபதி னெட்டும்போகும் வேகமுடனரையாப்பு வெள்ளைபோமே. 532

வெள்ளையென்றரோகமது ராஜரோகம் வெளிகாணுமேகமது கசரோகம்போம், கிள்ளையென்றக்ஷயமதுவும் பதினெட்டும்போம் கிழானபாண்டுமுதல் மகோதரம்போம், வள்ளையென்றகாமாலையாறும் போகும் வாகானநீரிழிவுமதுமேகம்போம், கொள்ளைகொண்டவயிற்று வலி விம்மல்போகும் கொடிதானசுரமுதலு மகன்றுபோமே. 533

அகன்றுபோம்சகலவித நோய்கள்தானும் அப்பனேதேகமது வன்னிமீறும், துகன்றதொருவனுபான மறிந்துகொண்டால் துடிப்புடனேநரம்பெல்லாம் வலித்துக்காட்டும், புகன்றதொருதேகமது காந்திவீசும் புகழானகாயமது யிறுகும்பாரு, நின்றதொருகாயாதி கற்பமென்பார் நீனிலத்தில்சித்தர்செய்யும் வேதையாமே. 534

வேதையாம்கோடிவழி வேதையுண்டு வேகமுடன்செய்பாகம் யாருஞ்செய்யார், பாதையாமிம்மருந்து வதீதமெத்த பாகமுடன்யான் முடித்தே னிந்தபாகம், தோதமுடன்சித்தர்முனி ரிஷிகள்தானும் தோற்றமுடன் தான்முடித்தா ரனந்தபாகம், காதமுடன்காலாங்கி நாயர்பாதம் கருத்துடனேயான்வணங்கி பாடினேனே. 535

## நவநீத கற்பம்

பாடினேனின்னமொரு பாகங்கேளு பாங்கானகோமேதம் புஷ்பராகம், தேடியேவப்ரேகம் பச்சைகெம்பு சிறப்பானவயிரமதுசங்கு முத்து, கூடியேபவளமது நவதாதாகும் கொப்பெனவேயாறுவகை செயநீர்தன்னால், நீடியேசமனெடையா யெடுத்துக்கொண்டு நேர்மையுடன்றானரைப்பாய் சாமம்நாலே. 536

நாலானசாமமது வரைத்துமைந்தா நலமுடனேயில்லையது தட்டியேதான், கோலமுடன்ரவிதனிலே காயவைத்துக் குறிப்பாக ஓட்டிவிட்டுச் சீலைசெய்து, ஞாலமுடன்சீலைபது காய்ந்தபின்பு நளினமுடன் கனமெருவிற் புடத்தைப்போடு, தாலமுடன்புடமாறி யெடுத்துப் பார்க்கத் தவளநிறபற்பமது காந்தியாச்சே. 537

ஆச்சென்றுவிடுகாதே மைந்தாகேளு அப்பனேசொர்னமென்ற பற்பந்தானும், மாச்சலுடன்நாலுக்கோர் நவநீதவித்தை மாட்டாவிரண்டுமொன்றாய்க் கல்வமிட்டு, காச்சலுடனுறுவகை செயநீர்தன்னால் கருத்துடனே தானரைப்பாய் நாலுசாமம், மூச்சடங்கத்தானரைத்து வில்லைதட்டி முயலவேரவிதனிலே காயப்போடே. 538

போடவேயில்லையது காய்ந்தபின்பு பொங்கமுடன்ஓட்டிவிட்டு சீலைசெய்து, நீடவேகோழியென்ற புடத்தைப்போடு நீணிலத்தில்நீயுமொருசித்தனுவாய், தேடவேகாயாதிகற்பபற்பம் தேர்ந்தாலும்யாருந் தான்சொல்லவில்லை, பாடவேபலநூலுங்கண்டாராய்ந்து பாலித்தேன் லோகத்து மாந்தர்க்காமே. 539

ஆமேதான்பற்பமுறை யாரும்சொல்லார் அப்பனேமானிடர்கள் பிழைக்கவென்று, நாமேதான்பலநூலுங் கண்டாராய்ந்து நளினமுடன்பாடிவைத்தேன் சத்தகாண்டம், போமேதான்வீணிலே மனம் செல்லாமல் பொங்கமுடனிப்பாகஞ் செய்தாயானால், மாமானகாய கற்பமிதுதானுகு மகத்தானபற்பமது நவிலொண்ணுதே. 540

ஒண்ணுதப்பற்பத்தை பணவிடைதானு முத்தமனேவெண்ணெய் தனில் கொண்டாயானால், நண்ணுதுநோயாதுரோகமேது நாடாது காலனுமே நாடமாட்டான், திண்ணுலுங்காயகற்ப மிதற்கொவ்வாது திறமையுடன்செய்துகொண்டோன்புத்திவானும், பண்ணுலுமுடியாது பாரிலப்பா பாக்கியவான்செய்துகொள்ளும் வேதையாமே. 541

## சூரணங்களனுபானம்

வேதையிலேயின்ன மொருபாகம்கேளு விருப்பமுடன்சூரணங்களதுவானும், தீதையிலேவனுபானந் தெரிந்துகொண்டால் தேக மதுகற்றாணுமாகும்பாரு, போதையிலேகாயாதி பற்பமாகும் பொங்கமுடனுண்டவற்கு பலனுண்டாகும், பாதையிலேமேகமென்ற யிழிவு போகும் பாரினிலேநீயுமொரு சித்தனுமே. 542

## புட்டிக்குள் கோழிமுட்டை விடுகிற சாலம்

சித்தனுமின்னமொரு மார்க்கம்பாரு சிறப்பானபெருஞ்சாதி கோழியொன்று, முத்தலாய்கொண்டுவந்து வையமிட்டு முதன்மையா முட்டைதனை யெடுத்துமைந்தா, சுத்தமுள்ளபூநீராம் புட்டியென்று சூட்சமுடன் சின்னவாய்க்கொண்டதாக, வெத்தியுடன்புட்டிக்குள் முட்டைபோக விருப்பமுடன் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே.

பண்பானமுட்டைதனைச் செப்பக்கேளு பாகமுடன்காரமென்ற காடிதன்னில், திண்புடனேமூன்றுநாள் முட்டைதன்னைத் திறமுடனே யூரினபின்னெடுத்துப்பாரு, நண்பானமுட்டையது காரமேறி நவிலவேவோடதுதான் சவ்வுபோலாகும், தண்பானமுட்டையது தளர்ந்துபோகும் தாக்கடாபுட்டியென்ற சீஷாதானே. 544

தானானசின்னவாய்ச் சீஷாக்குள்ளே தள்ளடாமுட்டைதனை யுள்ளேபோகும், வேனானமுட்டையது சென்றபின்பு விருப்பமுடன் பாணியென்ற தண்ணீர்தானும், கோனானபுட்டிக்குள் ரம்பவிட்டு குறையாமல் சீஷாவைமூடிப்போடு, தோனானமுட்டையது கல்லு போலாம் தீவிரமாய்பாணிதனை யூத்திடாமே. 545

ஊத்தியபின்புட்டிதனை மூடிப்போடு உத்தமனேராசரிடம்சென் றுநீயும், நேத்தியுடன்புட்டிதனை கைகொடப்பாநேரானபுட்டிதனைப் பார்க்கும்போது, மாத்தனுடன்புட்டிக்குள் முட்டையப்பா மன்னவனேசென்றவழிவதீதவித்தை, காத்தனுடனாச்சரிய வித்தைதன்னைக் காண்கிலோராசரெல்லா மயங்குவாரே. 546

மயங்குவார்வித்தையிது மண்டலத்தில் மாற்றுனுங்கண்டறியான் விநோதவித்தை, தயங்கியேசெய்தாலும் காணமாட்டார் தகமையுள்ள கருவாளி காண்பான்பாரு, புயங்கமுடன்தாரணியில் மற்றோராலும் புகழ்ச்சியுடன்செய்குவது வருமையாகும், வயங்கமுடன்காலாங்கி நாயர்பாதம் வாகுடனேதாள்பணிந்து பாடினேனே. 547

## தங்க நிமிளைவேதை

பாடியேயின்னமொரு கருமானங்கேள் பாலகனேமாணுக்கள் பிழைக்கவென்று, தேடியேநிமிளையது தங்கமப்பா தெளிவானநிமிளை யது கூறக்கேளு, வாடியேதிரியாதே மன்னுபாரு மகத்தானசெம்புக் குத் தகட்டின்மேலே, நீடியேசூதமதை மேனிச்சாற்றால் நேர்மை யுடன் ருனரைத்துப் பூசிடாயே. 548

பூசியேநிமிளைதனைப் பொடித்துக்கொண்டு பொன்னவனே கரி யோட்டில் துட்டுவைத்து, ஆசியேநிமிளை தனை சன்னமாக வப்பனே கீழ்மேலும் பொதிந்தபின்பு, காச்சிக்குச்சீலையது வலுவாய்ச்செய்து கருத்துடனேகவுதாரி புடந்தான்போடு, மாசிபோல்வர்னமது மிக வுண்டாகி மன்னவனேதாம்பரமும் பழுக்கும்பாரே. 549

பாரேதான்தாம்பரமும் பொன்னுமாகும் பாங்கானநிமிளையது வர்ணமெத்த, சீரேதானுருக்கிப்பார் மாற்றெட்டாகும் சிறப்பான வர்ணமது தாம்பரவேதை, வேரேதான்காணவுமே வதீதவேதை வேடிக்கைசிமிட்டுவித்தை வித்தைசித்தர், கூரேதான்சினபதி மார்க் கத்தார்கள் குறிப்புடனேசெய்வார்கள் கோடிதானே. 550

கோடியாம்வேதையிது கோடாகோடி கொட்டினேன்மானுக்கள் பிழைக்கவென்று, நீடியேநிமிளைதனைக் காணமாட்டார் நிமிளையில் வர்ணமதை யறியமாட்டார், மூடியேபித்தனைபோல் கல்லுமப்பா முறுக்கலுடன்சிட்டம்போ லிருக்கும்பாரு, தேடியேமலைந்தாலும் கிட்டாதப்பா கேசத்தில்வதீதமென்ற சிட்டம்பாரே. 551

சிட்டமுடன்கல்லதனை செந்தூரித்தால் சிவப்புடனேதங்கமது செந்தூரந்தான், கிட்டமென்றநிமிளையதுவர்ணமெத்த கெடியானசெந் தூரங் குன்றியுண்ணு, குட்டமென்றதேகமது பொன்போலாகும் குறையாது வயததுதான் கெவினியாவாய், மட்டமுடன்வெள்ளிசெம் பில் பத்துக்கொன்று மயங்காமல்கொடுத்திடவே மாற்றெட்டாமே.

எட்டானமாற்றதுவு மதிகமாகி யெழிலானபுடத்துக்கு வுறுதி தங்கம், மட்டானதங்கமது பசுமையாகு மகத்தானவேதையிது சித் தர்வேதை, கட்டானநிமிளையது கருவுவேதை காசினியிலாருந்தான் சொல்லமாட்டார், சட்டமுடன்காலாங்கி தனைவணங்கி சார்புடனே போகரிஷி பாடினேனே. 553

## பன்னிரியப்சா

பாடவேமாற்றுயர்வு பகரக்கேளு பாங்கானதுருசதுவும் பலமோ வொன்று, நீடவேதுருசுக்கு சுண்ணும்பப்பா நிலையானசுண்ணமதைக் கவசம்செய்து, தேடவேமூன்றுநாள் காய்ந்தபின்பு தெளிவுடனே காடையென்ற புடத்தைப்போடு, கூடவேகவசமதை பிரித்துப்பாரு கொற்றவனேதுருசதுவும் வெளுக்கும்பாரே. 554

பாரேதான்துருசதுவு மொன்றேயாகும் பாங்கானலிங்கமது வொன்றேயாகும், சீரேதான்சூதமது ஒன்றேயாகும் சிறப்பானகார

மது ஒன்றேயாகும், நேரேதான்எலிக்காலின் தழையினாலே நேர்பு டனேதானரைப்பாய் நாலுசாமம், தீரேதான்சிமிழ்தனிலே பதனம் பண்ணு திறமாகமட்டமென்ற பொன்னிற்போடே. 555

போடவேமூன்றுபுட முமிநீராலே பொங்கமுடன்தகட்டின்மேல் லேசாய்பூசி, தேடவேபூங்காவி தன்னிற்போடு தெளிவாகமாற்றதுவு மொன்பதாகும், நீடவேயுருகிப்பார் மாற்றேகாது நிலையானபுடத் துக்கு வலுத்ததங்கம், சாடவேமட்டமது பழுப்புமாகா சாங்கமுடன் பசும்பொன்னிற் போடக்கேளே. 556

கேளேதானிவ்வேதை சிடிகவேதை கெவுரிதமுடனுதாக்கள் செய்யும்வேதை, கோளேதான்வாருது குருவின்மார்க்கம் கூறுவேன் வின்னமொரு மார்க்கம்பாரு, தாளேதான்வுப்பினிட செந்தூரத்தை தாக்குடன்செய்வதற்கு தகமைகேளு, வீளேதான்செந்தூரப் போக் குஞ்சித்தர்வீணிலே சொல்லியல்லோ மறைத்தார்தாமே. 557

## உப்பு செந்தூரவேதை

தாமானவுப்பதுவுஞ் சேர்தானொன்று தாக்கானதுருசதுவும்சேர் தான்காலாம், வாகானதும்பலென்ற பூண்டினாலே வகையுடனே தானரைப்பாய் நாலுசாமம், காமானபில்லையது தட்டிமைந்தா கரு வாகரவிதனிலே காயவைத்து, நாமானவோட்டிவிட்டுச் சீலைசெய்து நலமாகப்புடம்போடக் கட்டிப்போமே. 558

கட்டியதோருப்பதனை எடுத்துக்கொண்டு கருத்துடனே முன் போலமூலியாலே, திட்டமுடன் முனரைப்பாய் நாலுசாமம் திறமாக ரவிதனிலே காயவைத்து, சட்டமுடனோட்டிவிட்டுச் சீலைசெய்து சாங்கமுடன்கோழியென்ற புடத்தைப்போடு, சிட்டமென்றவுப்பது வும் காரமேறி கிருபையுடன்முன்சிவக்கும் பான்மையாமே. 559

பான்மையாமிப்படியே வைத்துபத்து பாகமுடன்புடம்போடச் சிவக்கும்பாரு, வான்மையுடன்கரிப்பில்லை கசுவுமில்லை வளமாகவுப் புக்கு காரமெத்த, தான்மையுடன்கரிதனிலே யுருகியாடும் தகமை யுடன்மணிபோல ஒளிவுவீசும், கான்மையுடன்மணிதனையே வுமிநீரா லே கருத்துடனேமட்டமென்ற பொன்னிற்பூசே. 560

பூசவேகளஞ்சிக்குக் குன்றிதானும் பொலிவாகத்தானெடுத்துப் பூசிப்போடு, ஆசனுடன்பூங்காவி தன்னிற்குள்ளே வப்பனேபுடம் போட மாற்றுகாணும், கூசாமல்மூன்றுபுடம் போட்டாயானல் குறை

பாதுசரிநிறையும் போதப்பா, தாசமுடன்மூன்றுமுறை போட்ட போது தப்பாதுவாணிக்குப் பத்துமாத்தே. 561

மாத்தானதங்கமது வாணித்தங்க மகத்தானதங்கமது வுருகிப் பாரு, கூத்தானசாச்சலுக்கு சுலாய்ப்புகாணும் குவலயத்தில்சித்தர் முனி செய்யும்வேதை, சாத்தனுடன்கருவாளி லாண்டான்பாரு சாங்க முடன்பின்னொருவர் காணுவாரோ, நீத்தனுடன்விட்டகுறை நேர்ந் தோன் காண்பான் நீனிலத்தில்மற்றொருவர் காணாராமே. 562

ஆமேதான்செந்தூரங் குன்றியுண்ணு அப்பனேகாயாதி கற்ப மாச்சு, தாமேதான்சமாதிக்கு யிடமுமில்லை தாக்கில்லைநோக்கில்லை தேகம்போகா, வாமேதான்வாசியது கீழ்நோக்காகும் எளமான யோகத்தி லிருக்கலாகும், போமேதான்தேகமது கற்றாணும் போக் கானமேனியது சண்ணுதன்றே. 563

## அயச் செந்தூரம்

சண்ணுதுயின்னமொரு பாகம்கேளு சார்வானலோகமது செந் தூரந்தான், பண்ணுதுபண்ணுவார் மாந்தரப்பா பாரினிலேசித்தர் கைமறைப்புகாணார், தண்ணமுடன்காலாங்கிநாயர்பாதம் தாக்குடனே யான்வணங்கி கூறலுற்றேன், வண்ணமுடனயமதுவும் ராவிமைந்தா வளமையுடன்முன்செய்த வகைதான்கேளே. 564

வகையானலோகமது சேர்தானப்பா வாகுடனேதானெடுத்து சாற்றக்கேளு, தொகையானசீனமென்ற காரந்தன்னால் துப்புரவாய் தானரைத்து கழுவிப்போடு, தகையானபால்நண்டு சாமம்நாலு தாக் குடனேதானரைப்பாய் மைந்தாகேளு, பகையானபில்லைதன்னை ரவி யிற்போடு பாகமுடன்ஒட்டிவிட்டுச் சீலைசெய்யே. 565

செய்யவேபுடமதுதான் கோழியாக செப்புகிறேன் மாணுக்கள் பிழைக்கவென்று, உய்யவேபத்துபுட மிப்படியேபோடு உத்தமனே பின்னாலே சாற்றக்கேளு, பையவேசூதமென்ற ராஜாதன்னைப் பாக முடன்சரிகாலால் சேர்த்துக்கொண்டு, நையவேதானரைப்பாய முன் மூலியாலே நயமுடனேபில்லைதட்டிக் காயப்போடே. 566

காய்ந்தபின்புதானெடுத்து மாணுகேளு கருவாகதளவாயாஞ் சட்டிதன்னில், ஆய்ந்ததொருவுப்பதனை மைபோலாக்கி வப்பனேசட்டி தனில் கீழேபோட்டு, மாய்ந்தனுடன்பில்லைதன்னை நடுமையத்தில் மார்க்கமுடன்தானமைத்து மன்னாபாரு, பாய்ந்தனுடன்மேலுமந்த வுப்பைக்கொட்டி பதமுடனேசீலையது வலுவாய்ச்செய்யே. 567

செய்துமேவாலுகையி லடுப்பிலேற்றி செம்மையுடன் தானெ
ரிப்பாயாறுசாமம், பெய்துமேயாறினபின் னெடுத்துப்பாரு பேருன
செந்தூரமுருக்கம்பூவாம், நைதுமேசெந்தூர மெடுத்துப்பாரு நாதாக்
கள் முறையதுதான் சொல்லப்போமோ. கொய்துமேசெந்தூரம் பத
னம்பண்ணு கொப்பெனவேவேதைமுகம் செப்பக்கேளே. 568

செப்பவென்றால்செந்தூரம் வெள்ளியாறு சிவப்பானசெம்பது
வும் செம்புநாலு, ஒப்பவேதங்கமது ஒன்றுகூட்டி வுவமையுடன்றானு
ருக்கி குருவொன்றீய, மெய்ப்பவேகரிபோல யிருக்கும்பாரு மேன்மை
யுடன்காரமிட்டு வூதிப்போடு, அப்பவேபொன்னுமது மாற்றுகாணு
மப்பனேயெட்டறையு மாகுந்தானே. 569

## அபரேக் செந்தூரம்

அதிகமாமின்னமொரு கருமானங்கேள் அப்பனே மானுக்கள்
பிழைக்கவென்று, துதிதமுடன்நிருமது நவநீதந்தான் சுத்தமுடன்
வெண்ணையது யெடுத்துப்பாரு, கதிதமுள்ளவெண்ணையது சேர்தா
ஞென்று கருவாகவெடியுப்பு சேர்தாஞென்று, புதிதமுள்ளகெந்தியது
சேர்தாஞென்று புகழானஎருக்கன்பால் தன்னலாட்டே. 570

ஆட்டவேபனிரண்டுசாமந்தானு மப்பனே வெண்ணெய்போல்
பில்லைதட்டி, மாட்டடாபில்லையது ரவியிற்போடு மயங்காதேமன்ன
வனே ஓட்டிவிட்டு, மூட்டடாசீலையது வலுவாய்ச்செய்து மூர்க்க
முடன் கெஜமென்றபுடத்திற்போட்டு, தீட்டடா பின்னுமந்தஎருக்
கன்பாலால் திறமாகத்தானரைப்பாய் சாமம்நாலே. 571

நாலானசாமமது வரைத்தபோது நாயகனே பில்லையதுகாயவை
த்து, தாலானரவிதனிலே காய்ந்தபின்பு தகைமையுடன் ஓட்டிவிட்டு
சீலைசெய்து, மேலானபுடமதுவும் கெஜமேயாகும் முத்தமனேயாறின
பின்னெடுத்துப்பாரு, பாலான பற்பம்போலிருக்கும்பாரு பாலகனே
யிப்படியே பத்துபோடே. 572

போடயிலே தசபுடமுந்தீர்ந்தபின்பு பொங்கமுடன் காரமென்
றதும்பப்பூண்டு, தேடையிலே தானரைப்பாயாறுசாமம் தெளிவாக
பில்லையது தட்டிமைந்தா, மேடையிலே ரவிதனிலே காயவைத்து
மேன்மையுடன் ஓட்டிவிட்டுச் சீலைசெய்து, கூடையிலேபுடமதுதான்
கெசமேயாகும் கொற்றவனேபுடமாறி யெடுத்துப்பாரே. 573

பார்க்கையிலே பற்பமது சிவப்புகொஞ்சம் பார்த்திவனேயிதிற்
பத்துபுடமும்போடு, சேர்க்கையிலே புடமதுவுந் தீர்ந்தபின்பு செய

லானமூலியது சொல்லக்கேளு, மூர்க்கமுடன் பொன்னுவாவரைதான் மூலி முய்ன்மையுடன் றனரைப்பாய் எட்டுசாமம், தீர்க்கமுடன் றனரைத்து பில்லைதட்டி திராளாகரவிதனிலே காயப்போடே. 574

காய்ந்தபின்பு ஓட்டிவிட்டுச் சீலைசெய்து கனமாகநூறெருவிற் புடத்தைப்போடு, மாய்ந்தபின்புதீயாறி யெடுத்துப்பாரு மன்னவனே செந்தூரம் வர்னம்காணும், சாய்ந்தலுடன் யிப்படியே பத்துபோடு சார்பாகபுடமதுவுந்தீர்ந்தபின்பு, எய்தலுடனுதரமாம் வேங்கைதன்னு லொழிலாகதானரைப்பாய் சாமம்ரெண்டே. 575

ரண்டானசாமமது வரைத்தபோது எழிலானபில்லையது தட்டி மைந்தா, திண்டானரவிதனிலே காயவைத்து திறமாக ஓட்டிவிட்டுச் சீலைசெய்து, கண்டானபுடம் வராட்டிநூறு கவனமுடன் போட்டுவர செந்தூரிக்கும், தண்டானபுடமதுவும் பத்துபோடு தாக்கானசெந்தூரம் சிவப்புகாணே. 576

காணவேசெந்தூர மென்னசொல்வேன் கடிதான ரசமதுதான் மடியுமட்டும், தோணவேபுடமதுவும் செப்பக்கேளு துறையுடனே சாரமென்ற செயநீர்தன்னால், மாணவே தானரைப்பா யாறுசாமம் மார்க்கமுடன்பில்லைதட்டி காயவைத்து, ஊணவேஓட்டிவிட்டுச் சீலை செய்து உத்தமனே நூறெருவிற் புடந்தான்போடே. 577

போட்டவுடன் செந்தூரமருணன்போலாம் பொங்கமுடனிதிற் பத்துபுடந்தான்போடு, நீட்டமுடன்செந்தூரங் குற்றம்நீங்க நிலையானசில்விதனை யடைக்கும்பாரு, தாட்டிகமாய்பரிட்சிக்க விபரங் கேளு தகைமையுடன்மண்பாண்டந் தன்னைவாங்கி, மாட்சிமையாய் பாண்டத்தில்துவாரமிட்டுமாட்டடாதொட்டியென்றபாண்டம்வையே.

வைக்கவேதொட்டியென்ற பாண்டந்தன்னில் மன்னவனேசில்வி யென்ற பாண்டந்தன்னை, வைக்கவேசலம்விட்டு செந்தூரத்தை மயங் காமல்பணவிடைதான் பாண்டத்துள்ளே, வைக்கவேசெந்தூரம் போட்டபோது வளமானதுவாரமது வடையும்பாரு, வைக்கவேசெந் தூரம் பரிட்சைகாட்டி மாட்டடாரோகமென்ற யிழிவுதானே. 579

இழிவானநீரிழிவு மதுமேகந்தான் யெழிலானமேகமது யிருபத் தொன்றும், பழியாமலனுபான மெதிலுண்டாகும் பறக்குமடாரோக மென்ற கசரோகம்போம், வழியானசெந்தூரம் பரிட்சைகாட்டு மயங் காமல்ராசரிடம் சென்றுநீயும், சுழியானசுழிமுனையும் வாசிப்பார்த்து சுந்தரனேவடகலையில் சென்றிடாயே. 580

சென்றுமேராசனிடஞ் சென்றுநீயும் சிறப்புடனேசெந்தூரம் பரிட்சைகாட்டி, குன்றியதுயளவாகத் தான்கொடுத்து கொற்றவர்க்கு பத்தியமு மில்லாமற்றான், வென்றுமேயவரிடத்தில் பிணிகள்தீர்த்து வேணவுபசாரமுடன் நிதியும்பெற்று, நன்றனுடன்சோடசோ வுபசாரந்தன்னால் நாயகனே தண்டிகையுந் தருவார்பாரே. 581

தானே தான்சென்றவிடஞ் சிறப்புமுண்டு தாரணியில்மாந்தரெல்லாம் பிரமைகொள்வார், வேனுனசித்துமுனி ரிஷியென்பார்கள் வேதாந்தசித்தாந்த குருவென்பார்கள், கோனுனதத்துவத்தில் கடந்த ஞானி கொற்றவர்க்குவுகந்ததொரு மகத்துவென்பார், தேனுன மனோன்மணியும் கடாட்சிப்பாளே தேர்வேந்தராஜரெல்லாம் தியங்குவாரே. 582

தியங்குவாராசமுடி மன்னரெல்லாம் திறமையுடன்கைகண்ட பாண்டியன்றான், மயங்குவார்பூதலத்தில் ராசயோகன் மானிலத்தில் தன்வந்திரி யிவனென்பார்கள், தயங்கவேவகத்தியனு ரவதாரன்றான் தாரணியில்பிவன்போல சித்தனுண்டோ, புயங்கமுடன்பலபலவாய்ச் சொல்லிக்கொள்வார் பூதலத்தில்நீயுமொரு சித்தனுமே. 583

சித்தர்களுமுனைக்கண்டு பிரமிப்பார்கள் சிறப்புடனேவுந்தனுக்கு பின்னஞ்சொல்வார், பத்தியுடன்ஞானோப தேசஞ்சொல்வார் பாகமுடன்கைமுறையு மனந்தஞ்சொல்வார், முத்திபெறும்வழிதனையே காட்டுவார்கள் முயலானசின்மயத்தி விருந்துகொண்டு, சத்தியத்தை மறவாமல்தருமவானால் தாரணியிலென்னாளுந் தழைப்பாய்தானே.

## உப்புக் கட்டு

தழைக்கவேயின்னமொரு கருமானங்கேள் தாரணியில்மானிடர்கள் செய்யமாட்டார், பிழைக்கவேவேண்டுதற்கு பின்னஞ்சொல்வோம் புகழானகல்லுப்பு சேர்தானொன்று, முழைக்கவேகுழிக்கல்லில்தன்னிலிட்டு முயற்சியுடன்தானரைக்க விபரங்கேளு, மழைக்களிலேபூர்க்குமந்த காளான்தன்னை மார்க்கமுடன்கொண்டுவந்து சலத்தைவாங்கே. 585

வாங்கியேசலமென்னுஞ் செயநீராலே வளமையுடன்றானரைப்பாய் பத்துநாள்தான், தூங்கியேதிரியாதே மைந்தாபாரு துரையுடனேமைபோல வரைத்துமேதான், ஏங்கியேபோகாமல் பில்லைதட்டி எழிலாகரவிதனிலே காயவைத்து, ஓட்டியேஓட்டிவிட்டுச் சீலைசெய்து வுத்தமனேகோழியென்ற புடத்தைப்போடே. 586

புடமது தாறுறிய பின்னெடுத்துப்பாரு புகழானகல்லுப்புக் கட்டிப்போகும், திடமுடனேபின்னுமந்த செயநீராலே தீவிரமாய் தானரைப்பாய் நாலுசாமம், தடமுடனேமைபோல யரைத்துப்பாலா சார்புடனேபில்லைதட்டி காயவைத்து, 'மடமுடனேவோட்டிவிட்டுச் சீலைசெய்து மயங்காமலமுன்போல புடத்தைப்போடே. 587

போடவேபுடமதுதா றுறிப்பின்பு பொங்கமுடன்முனெடுத்து பார்க்கும்போது, நீடவேபற்பமது யென்னசொல்வேன் நிலையான நீருக்குமனலுமேகா, சூடவேபின்னுமந்த செயநீராலே சூட்சமுடன் பத்துபுடந் தீர்ந்தாயானால், தேடவேபற்பமது யென்னசொல்வேன் தேசத்தில்கிட்டாது சிவயோகிக்கே. 588

## சிவயோகி பொய்த்தன்மை

சிவயோகியென்றுலே மெத்தவுண்டு சிவன்தனையேகண்டவர் போல் வார்த்தைசொல்வார், தவயோகிபோலவொரு வேஷம்பூண்டு சர்வகலையரிந்ததொரு ஞானிபோல, பவங்கண்டரிஷியென்று பெயருக்கொண்டு பாரினிலேபசப்பியல்லோ பொருள்தான்கொள்வார், சவம்போலமூச்சிதனை யடக்கிக்கொண்டு தாரணியில்பிர்மைக்கொள்ள நடப்பார்தாமே. 589

தாமானபற்பமதை செய்யமாட்டார தாக்கானகருக்குருவைக் காணமாட்டார், பேமானிபோலவெகு பேச்சிசொல்வார் பேச்சிக்கு முன்பாக பாட்டுசொல்வார், சாமாணியபுருஷனென்று வார்த்தைச் சொல்வார் சாற்றலுடன்தூஷணைகள் மிகவுஞ்சொல்லுவார் நாமான சாத்திரங்க ளதிகம்பேசி நாணியேதலைகுனிந்து நடுங்குவாரே. 590

நடுங்குவார்பற்பத்தின் நேர்மைகாணார் நாட்டிலே யாம்கண்டவளமையப்பா, அடுங்கவேபற்பத்தை கண்டாராய்ந்து அப்பனே நாமுரைத்தோ மவனியோர்க்கு, தடுக்கவேபற்பத்தை செம்பிலீய சண்ணுமேவூறலென்ற நாற்றம்போகும், ஒடுங்கவேபத்துக்கு ஒன்று தானு முத்தமனேகுருதனையே தாக்கிடாயே. 591

தாக்கவேரவிதானுங் கட்டிப்போகும் தகைமையுடன்செம்பது வுமூறலேகி, நோக்கமுடன்செம்பதுவும் வரணங்காட்டும் நேராக வசம்புநிகர் வெள்ளிசேர்த்து, பாக்கவேவந்திடைக்குத் தங்கஞ்சேர்த்துப் பாண்மையுடன்தானுருக்கி யெடுப்பாயானால், தூக்கமுடன்மாற்றதுவு மிகவுமாகி துப்புறவாய்தங்கமது காணும்பாரே. 592

கேள்விக்குயுத்தாரஞ் சொல்லவேண்டும் சொல்லாட்டால்நீதி யுட னுக்கினையுண்டு, தாழ்மையுடனெமதர்ம ராஜனுக்கு சாங்கமுடன் நீதிமொழி யுரைக்கவேண்டும், ஏழ்மையுடன்போலிருந்து நீதிபேசி நீதியுடனவர்பாதம் பணியவேண்டும், வாழ்மையுடனுன்மீதில் கிருபை வைப்பார் வாழலாம்சொற்கபதி வாழலாமே. 972

வாழ்வுதான்வையகத்தில் பொய்யேவாழ்வு வாழ்நாளும்வீணாளும் பாழ்நாளாகும், தாழ்வுடனேசாத்திரத்தை மிகவாருய்ந்து சாங்க முடன்ஞானோபதேசம் மிகவுஞ்சொல்வார், கேழ்மையுடன்மசான வைராக்கியஞ்சொல்வார் கேடுவரும்பாவவினை யறியார்தாமும், ஊழ் வினைகள்தாமறிந்து நடந்துக்கொள்வோர் உத்தமனேலோகத்து மாந்த ராமே, 973

மாந்தராம்சடலத்தை மெய்யென்றெண்ணி மானிலத்தில்வெகு கோடி பாடுபட்டு, சாந்தமுடன்தேகமதை நிறுத்தவென்று சதாகாலம் வையகத்தி லிருப்பதாக, போந்தமுடன்காயாதி கற்பந்தன்னை பொங்க முடனுண்டுமல்லோ கற்பங்கொண்டு, வேந்தர்களும்விதிகாச வித்தை யெல்லாம் வேண்டியேவிருப்பமுடன் படித்திட்டாரே. 974

படிக்கவேவஷ்டாங்கங் காணவென்றும் பாருலகில்வசியனு யாக வென்றும், துடிக்கவேவாதமதை யறியவென்றும் துப்புறவாய்முப் பூவை முடிக்கவென்றும், மடிக்கவேசரக்குக்குச் சத்ருதானும் மார்க்க முடன்கண்டறிந்த சித்தனென்றும், வெடிக்கவேசமாதிக்கு ளிருப்பே னென்றும் வேதாந்தம்பேசியல்லோ விழலாய்ப்போச்சே. 975

போச்சென்றுவிடுகாதே யின்னங்கேளு புதுமையுடன்கண்ட வரை யாமுஞ்சொல்வோம், மாச்சலுடன்மோகனங்க ளறியவேண்டும் மாறுட்டமானதொரு வெழுத்தைப்பாரு, கூச்சலன்றிசமாதிதனி லிருந்துமென்ன கோடானகோடியுகங் கண்டுமென்ன, மூச்சடங்கிப் போனபின்பு ஒன்றுமில்லை முனிகோடிதவசிகளு மாண்டார்தாமே.

தாமானகோடியுக மிதுவேயாகும் தாக்கானசித்துகளு மிப்படியே யுண்டு, நாமானபடியாலே சத்தலோகம் நாதாக்கள்போக்குமுதல் யாவுங்கண்டோம், நேமமுடன்சித்தரெல்லா மிப்படியேதானும் நேர் மையுடன்நிஷ்டையிலே யிருந்துமாண்டார், வாமமுடன்பூலோக வதி சயங்கள் வகுத்துரைத்தார்வண்மைகளு மநேகந்தானே. 977

தானேதான்ராஜாதி ராஜரெல்லாம் தாரணியில்சாத்திரத்தை மிகவறிந்து, மானமுடன்சிவயோக நிஷ்டைநின்று மானிலத்தில்தவசு

பரியோரைப்போல, தேனமிர்தங்கொண்டுமல்லோ வாசிபூட்டி தசத்திலிருந்தார்கள் சித்தரெல்லாம், மேனகையைக்கண்டுமல்லோ மயல்கொண்டு மேதினியிலாண்டவர் கோடியாமே. 978

கோடியாஞ்சித்தர்முனிமாந்தரெல்லாம் குவலயத்தில்மண்ணாசை பெண்ணாசையாலே, தேடியேசெம்பொன் னாசையாலும் திடங்குலைந்துமாண்டார்கள்மாந்தரெல்லாம், நாடியேநாதாந்தச்சித்தருக்கு நல்ல வழியொருவருக்குங் கிடைப்பதில்லை, பாடியே நூல்தனையே பார்த்து பார்த்து பரதவித்துயிருந்தார்கள் கோடிபேரே. 979

பேரானதத்துவங்க ளறிந்துமென்ன பேருலகில் ஞானிகளாயிருந்துமென்ன, நேரானநல்லவழி தெரிந்துமென்ன நேர்மையுடன் அறியாம லிருந்துமென்ன, கூறுனசாத்திரத்தை கற்றுமென்ன குவலயத்தில் வெகுகாலமிருந்துமென்ன, தூரானகெட்டவழி சென்றுமென்ன துறையோடுகாலம்வரை யொன்றுங்காணே. 980

காணவேபிரபஞ்சவாழ்க்கையாவும் கருத்துடனேகொண்டவற்கு ஒன்றுமில்லை, தோணவேநூலாதி நூல்கள்தோறும் துடர்ந்துமே சடலமதை யிறக்கவென்று, மாணவேசித்தர்முனி ரிஷிகளெல்லாம் மாராட்டமாகவல்லோ நூல்செய்தார்கள், வேணவேகாலாங்கிநாதர்தம் மால் வேகமுடன்கண்டறிந்த வார்சொல்வேனே. 981

சொல்லவென்றால் பூலோகமிடங் கொள்ளாது சுருதிபொருள் சாத்திரங்கள் மிகவும்பொய்யாம், வெல்லவே மெய்யொன்றும் புகலவில்லை வீணிலேசாத்திரத்தைபாடிப்போட்டார், அல்லலுடன்தேகாதி தேககாலம் அலைச்சலுடன்சாத்திரத்தை பார்த்துமாண்டார், கொல்லனது வீதியிலேவூசிவிற்ற கொடிதானகதைபோல என்முன்னுச்சே.

ஆச்சென்றதேகமது நித்தியாநித்யம் அப்பனேயாமறிந்த வரைக்குஞ்சொல்வோம், மூச்சடங்கினனதையர் காலாங்கிநாதர் மூன்றுயுக கோடிவரை சீனந்தன்னில், பேச்சொன்றுமில்லாமல் சமாதிதன்னில் பிணம்போலயிருந்தாரே சிலதுகாலம், வாச்சலுடன்வாசிதனை அடக்கிக்கொண்டு வையகத்தில்சிலதுநாளா யிருந்திட்டாரே. 983

இருந்திட்டகாலாங்கி தம்மைப்போல எழிலானசித்தர்முனி நாதரெல்லாம், பொருந்தியேபூவுலகில் வாசிகொண்டு பொன்னுலகநாட்டுக்குப் போனார்தாமும், திருந்தியேயொருவருந்தா னிருந்ததில்லை சிறப்புடனே வைகுண்டஞ் சேர்ந்தாரங்கே, வருந்தியே யழைத்தாலும் வருவதுண்டோ வருங்காலந்தானிருந்தால் வருகுந்தானே. 984